பன்னிரு சைவத் திருமுறைத் தொகுதி

திருநாவுக்கரசு சுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரப்பதிகங்கள்

திருமுறை

: ௪, ௫, ௬ :

க வெளியீடு - கங

உ

திருச்சிற்றம்பலம்

---

திருநாவுக்கரசு சுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரப்பதிகங்கள்

**1083**

கயப்பாக்கம்

சதாசிவ செட்டியார் பி. ஏ., அவர்களால்

பார்வையிடப்பெற்றன.

திருமு

திருநெல்வேலி, தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்

திருநெல்வேலி & சென்னை

பிரபவ௵ தைமீ

# பொருளடக்கம்

# அற்புதப்படங்கள்

# பதிப்புரை

தமிழ்நாட்டின்கண், புத்தம் சமணம் முதலிய புறப்புறச் சமயங்கள் தோன்றி, சைவசமய வளர்ச்சி வலிகுன்றிய ஞான்று, அப்புறச்சமயங்களை வேரறுக்கப் பண்டை யருமறைக்கருத்துக் களோடு எழுந்தனவாய், ஓதவும் உன்னவும் உலப்பிலா மகிழ் வைத் தருவனவாய், எண்ணியவற்றை எண்ணியாங்கு எய்து விப்பனவாய், நூல்சார்த்திப் பார்ப்பார்க்கு உண்மை நுவல்வன வாய், அன்போடு போற்றுவார் அருவினையறுப்பனவாய், செந் தமிழ் மொழிவளம் நிரம்பியனவாய், பண்டை இசைவளம் காண்பார்க்கு இன்பநலம் இசைப்பனவாய், இயற்கைநலம் விரும்புவார்க்கு இனிமை பயப்பனவாய், அருஞ்செயல்களை அடி யார்க்கு நிகழ்த்துவனவாய், தத்துவக் கருத்துக்கள் இலைமறை காய்போலப் பொதிந்துள்ளனவாய், பண்டைத் தமிழியல்நூல் வழக்கிற்கேற்ப அகப்பொருள் புறப்பொருளிலக்கணங்களைக் கூறுவனவாய், மக்கட்குப் பிறவியழித்து வீடு அளிப்பனவாய், புறவிருள் நீக்கும் பன்னிரு பகலவர் போல மக்கள் அகவிருள் நீக்கும் பன்னிரு அருமணிச் சுடர்களாய் விளங்குவன தெய்வத் திருவருணூற்றொகுதியாய பன்னிரு திருமுறைகள். அமிழ் துறழும் தமிழ்மொழியின்கண் சைவசமயத்தார்க்கு அமையப் பெற்றிருப்பதுபோல வேறெம்மொழியினும், வேறெச்சமயத் தார்க்கும் இத்தகைய அருணூற்றொகுதி யமையாமையே இவற் றின் பெருமையை விளக்கும்.

சிவம்பழுத்த இத்தமிழ்மாண் சைவப்பெருநூற்றொகுதி, இதுகாறும் செப்பமான பதிப்பைப் பெறாதிருந்தது தமிழ் மக் கட்கு ஒரு பெருங்குறையே. அதனை நீக்குவான்கருதி இறை வன் இன்னருள்கொண்டு பன்னிருதிருமுறைகளை ஆறு பகுதிக ளாகப் பதிக்க ஒழுங்குபடுத்தி, முதற்கண் திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிச்செய்த முதன்மூன்று திருமுறைகளாய தேவாரப்பதிகங்களை அழகொழுகப் பதித்து வெளியிட்டுப்

# பதிப்புரை

பின் திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிச்செய்த இரண்டாவது மூன்று திருமுறைகளாய தேவாரப்பதிகங்களை அவ்வாறே செப்பமாகப் பதித்து வெளியிடலானோம். இப்பதிப்பில் பிழை காண்டல் அரிதென்க.

இதன்கண் பண் விளக்கமும், பண் வரிசையும் பதி வரிசையும், பதி அகரவரிசையும் பதிக முதற்குறிப்பகரவரிசையும், பதிக வரலாற்றட்டவணையும், அருஞ்சொற்பொருளகரவரிசையும், பாட்டுமுதற்குறிப்பகரவரிசையும், ஆளுடையவரசுகள் திருவுருவப்படமும், அவர் நிகழ்த்திய அருஞ்செயல்களைக் காட்டும் படங்களும் சேர்த்திருக்கின்றோம். சிறிது தமிழ் கற்றாரும் எளிதில் கற்றுணருமாறு பாட்டுக்கள் சீர்பிரிக்கப்பெற்றிருக்கின்றன. பதிமுறைப்பதிப்பு விரும்புவார்க்கு மிஃதே பயன்படுமாறு இதன்கண் பதிவரிசையும் சேர்க்கப்பெற்றிருப்பது கருதற்பாலது. ஆகவே இவ்விழுமிய அருணூற்றொகுதி ஒவ்வொரு நூல்நிலையத்திலும் ஒவ்வொரு இல்லின் இறைவழிபாட்டறையிலும் இன்றியமையாது இருக்கற்பாலது.

இதற்குப் பதிப்பாசிரியராயிருந்து செப்பஞ்செய்து உதவி புரிந்துவரும் திருவாளர் கயப்பாக்கம் சதாசிவ செட்டியார் பி. ஏ. அவர்களுக்கும், இதனைப் பதித்துவருகையில் எழுத்துப் பிழைகள் முதலியவற்றைப் பார்த்துதவிய மருத்துவாசிரியரும், தமிழாசிரியருமான திருவாளர் மா. வடிவேலு முதலியாரவர்களுக்கும், கழகத்தமிழ்ப்புலவர் திருவாளர் T. S. இளவழகனாரவர்களுக்கும், ஆசிரியர்படம் அருஞ்செயல் விளக்கப்படங்கள் முதலியவற்றை மிக்க திறமையோடு எழுதியுதவிய திருவாளர் ஆ. ஜெகனாத ஆச்சாரியார் அவர்களுக்கும் நன்றி செலுத்துங் கடப்பாடுடையோம்.

திருநெல்வேலி,
பிரபவ
மார்கழி, ௧௫

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# முன்னுரை

" இடையறாப் பேரன்பு மழைவாரு மிணைவிழியு முழவா ரத்தின்
படையறாத் திருக்கரமுஞ் சிவபெருமான் றிருவடிக்கே பதித்த நெஞ்சு
நடையறாப் பெருந்துறவும் வாகீசப் பெருந்தகைதன் ஞானப் பாடற்
றொடையறாச் செவ்வாயுஞ் சிவவேடப் பொலிவழகுந் துதித்து வாழ்வாம்"

மாதவச் சிவஞானயோகிகள்.

" ஏரின் சிவபோக மிங்கிவற்கே யென்னவுழ
வாரங்கொள் செங்கையர்தாள் வாரம்வைப்ப தெந்நாளோ "

தாயுமானவப் பெருமான்.

" அருமறையைச் சிச்சிலிபண் டருந்தத் தேடு
மதுபோலன் றிதுவென்று முளதா முண்மைப்
பரபதமுந் தற்பதமும் பரனே யன்றிப்
பலரில்லை யென்றெழுதும் பனுவல் பாரி
னெரியினிடை வேவாதாற் றெதிரே யோடு
மென்புக்கு முயிர்கொடுக்கு மிடுநஞ் சாற்றுங்
கரியைவளை விக்குங்கன் மிதக்கப் பண்ணுங்
கராமதலை கரையிலுறக் காற்றுங் காணே "

யென்னு மெண்ணிறந்த பெருமை வாய்ந்த ஏழுகோடிப் பெருமறைமொழி வடிவினவான (சுத்த கோடி மகா மந்திர சொரூபமான) அடங்கன் முறைத் திருமுறை ஏழனுள் நான்கு, ஐந்து, ஆறுவது திருமுறைகள் 'உடையவர சுலகேத்து முழவாரப் படையாளி' யாகிய திருநாவுக்கரசுநாயனார் அருளியவை யாகும்.

இத் திருமுறை மூன்றினும் இப்போதடங்கியுள்ள திருப்பதிகங்கள் முன்னூற்றுப் பதின்மூன்றேயாம். ஆயினும் முதன் முதலில் (ஆதியில்) ஆளுடைய வரசுகள் பாடியருளிய திருப்பதிகங்கள் நாற்பத்தொன்பதினாயிர மென்பது.

## முன்னுரை

'இணைகொளே ழெழுபதுநா றிருபனுவ
லீன்றவன் றிருநாவி னுக்கரையன்'

என்னும் ஆளுடைய நம்பிகள் திருவாக்கானும்,

'பதிகமே ழெழுநூறு பரசுநா வரசான
பரமகா ரண யோகி'

என்னும் திருநாவுக்கரசுதேவர் திருவேகாதசமாலையானும்,

'திருநாவுக் கரையரெனுஞ் செம்மை யாளர்
தீயமணர் சிறைநீங்க வதிகை மேவுங்
குருநாமப் பரஞ்சுடரைப் பரவிச் சூலை
கொடுங்கூற்று யினவென்ன வெடுத்துக் கோதி
லொருமானைத் தரிக்குமொரு வரையுங் காறு
மொருநாற்பத் தொன்பதினாயிரமதாகப்,
பெருநாமப் புகலூரிற் பதிகங் கூறிப்
பின்னுகளு ரடியிணைகள் பெற்று ளாரே'

என்னுந் திருமுறைகண்ட புராணத் திருவிருத்தத்தானும் வெள்ளிடை மலைபோல அறியப்படக் கிடப்பினும் இக்காலத்து (நவீன) ஆராய்ச்சிக்காரர்கள் அரசு எப்போது சைவசமயத்துட் புகுந்திருக்கலாம் (பிரவேசம் செய்திருக்கலாம்,) எண்பத்தொன்றென்று திருவயது கணிக்கப்பட் டிருத்தலின் மொத்தம் எத்தனையாண்டு பாடி யிருக்கலாம். ஆண்டுக் கெத்தனைப் பதிகங்கள் பாடக்கூடும் எனப் பலபடி யெண்ணி நாற்பத்தொன்பதினாயிரந் திருப்பதிகம் பாடி யிருத்தல் கூடாதென்றும், எனவே நாற்பத்தொன்பதினாயிரமென்பது திருப்பாட்டுக்களாக விருக்க வேண்டுமென்றும் தமக்கு வந்தவாறெல்லாங் கூறுப. இவர்கள் நமது அரசுகள் தன்னுணர்வு (பசுகரணம்) நீங்கிப்

'பாலைநெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதுங்
காலனையன் றேவிக் கராங்கொண்ட—பாலன்
மரணந் தவிர்த்ததுவு மற்றவர்க்கு நந்தங்
கரணம்போ லல்லாமை காண்'

என்னும் திருக்களிற்றுப்படியார்க் கேற்பக் கடவுளுணர்வு (பதி கரணம்) பெற்றுப் பேரறிவும் பெருஞ்செயலும் வாய்ந்த நாயனு ரென்பதை யுணரார் கொல்லோ ! அன்றியும் அரசுகள்,

‘ தூயவெண் ணீறு துதைந்தபொன் மேனியுந் தாழ்வடமு
நாயகன் சேவடி தைவருஞ் சிந்தையு நைந்துருகிப்
பாய்வது போலன்பு நீர்பொழி கண்ணும் பதிகச்செஞ்சொன்
மேயசெவ் வாயு முடையார் புகுந்தனர் வீதியுள்ளே ’

எனவும்,

‘ பொய்கைசூழ் பூம்புகலூர்ப் புனிதர்மலர்த் தாள்வணங்கி
நையுமனப் பரிவோடு நாடோறுந் திருமுன்றிற்
கைகலந்த திருத்தொண்டு செய்துபெருங் காதலுடன்
வைகுநாளெண்ணிறந்த வண்டமிழ்மா லைகள்மொழிவார் ’

எனவும் வருந் திருத்தொண்டர் புராணத் திருவிருத்தங்களாலும் “வாகீசப் பெருந்தகை தன் ஞானப்பாடற் றொடையருச் செவ் வாய்” என வரும் மாதவச் சிவஞானயோகிகளது திருவாக்காலும் இடையறாது பொழியுஞ் சோனைமாரிபோலுஞ் சிவானந்தத் தேனைத் தேக்கெறிந்து திருவாய்மலரையுடையரா யெழுந் தருளியிருந்தன ரென்பதையும் எண்ணுர்போலும். மேற்கூறிய வுண்மைகளை வைத்து நினைத்துப் பார்ப்பார்க்கு இந்நாற்பத் தொன்பதினாயிரந் திருப்பதிகங்களை அரசுகள் அருளிச் செய் தது ஒரு பெருவியப்பே யாகாதென்க. இஃதன்றியும் ‘ பதிகமே ழெழுநூறு ’ என்னும் சொற்றொடர் ஏழ்-எழு நூறு என்று சொற்செயப்பட்டு நாலாயிரத்துத் தொள்ளாயிரமாகுமன்றி நாற்பத்தொன்பதினாயிர மாகாதென்று இடர்ப்படுவர் மற்றொரு சாரார். இனி யிச்சொற்றொடர்தான் எவ்வாறு நாற்பத்தொன் பதினாயிரமாம் என்னிற் கூறுதும். ‘ஏழெழுநூறு’ என்பதை ஏழ் - எழு - நூறு எனச் சொற்செய்தலால் ஏழ்நூறு, எழுநூறு என வருவனவற்றைப் பெருக்கி நான்கிலக்கத்துத் தொண்ணூ றாயிரம் வரப் பெறுவேம். மேற் காட்டிய எடுத்துக் காட்டுக ளுள் ஆளுடைய நம்பிகள் ‘பனுவல்’ என்கையானும், நம்பி யாண்டார் நம்பிகள் ‘கவி’ என்கையானும் அரசுகள் பாடியது திருப்பாட்டுக்கள் நாலிலக்கத்துத் தொண்ணூறாயிரங் கொண்ட

நாற்பத்தொன்பதாயிரந் திருப்பதிகங்க ளென்பது தெற்றென விளங்குமென்க.

இவரது திருப்பாட்டுக்கள் யாவும் உயிர்களுக்குறுதி பயக்கும் உட்கிடைகள் நிறைந்து தாழ்வென்னுந் தன்மை ததும்பிப் பெரும்பாலும் இறைவனது திருவடிச் சிறப்பையே கூறுவனவாய் மிளிர்கின்றன; சைவ சிவஞான போதச் சூத்திரக் கருத்துகள் யாவும் வெள்ளிடை மலைபோலத் திகழ்ந்து விளங்குவன. அணிநலங்களும் சுவைப் (இரசப்) பொலிவுகளும் காணப்படாத இடங்களும் இல்லை. அகப்பொருட் சுவைகளும் அருகி வழங்குவனவல்ல. பிறவு மின்னவே. இப்பதிகங்கள் யாவும் மூன்று திருமுறைகளாய் அடங்கன் முறையில் நான்கு ஐந்து ஆறுவது திருமுறைகளாய் முதற் றிருமுறையில் மற்றைய இரண்டு குரவர்களது திருமுறைகளிற் போல வேறு (பேதப்) பட்ட பல பண்கள் காணுமல் சில பண்களுட் அன்னோரது முறைகளில் அடியோடு காணப்பெறாத கொல்லிப் பண்ணோடு விரவிய கட்டளை வேறுபாடுகளை (பேதங்களை) யுடைய திருநேரிசைகளும் திருவிருத்தங்களும், இரண்டாந் திருமுறை முழுவதும் திருக்குறுந் தொகைகளும், மூன்றாந் திருமுறை முடியத் திருத்தாண்டகங்களும் காணப் பெறுகின்றன. குறுந் தொகைகள் பெரும்பாலும் உயிர்களுக்குப் பல வகையான நிலையாமை முதலியவற்றைப் பற்றிய அறிவுரைகளைக் கொண்டனவாயும் திருத்தாண்டகங்கள், திருவடிப் புகழ்ச்சி இறைவனது யாவுமாயும் அல்லவாயும் உடனாயும் நிற்கும் அத்வைத நிலைமை (இரண்டற்ற நிலை) அணைந்தோர் தன்மையான நுகர்ச்சிச் (அநுபவச்) சிறப்பு முதலிய நிறைந்தனவாயு முள்ளன. இனிப் பல கூறுவதினும் ஏதுண்டு ஏதில்லை யென்றெம்மனோர்க்கு வரையறுத்துக்கூற முடியா வியல்பினுள்ளன வென்பதேசிறப்பு.

இனிப் பல விடங்களிற் சமண சமயப் பழி மலிந்தனவாகப் பல பாட்டுகள் காணப்படுகின்றன வென்று மேலெழுந்த ஆராய்ச்சியோடு கூறுவது அறியாமையையும் ஆராய்ச்சிக் குறைவையுமே காட்டா நிற்கும். நாயனார் பல விடங்களில் எல்லாச்

மயங்களும் இன்றியமையாதனவென்றும், இவைகளிற் சரித்துத் தேறிய தொண்டர்களையே இறைவன் செந்நெறிக் கேற்றுவனென்றும் சமயக் காழ்ப்புள்ளவர்கள் எரிவிற் சொன்ன யாவும் இறைவன் முனியாதேற்பனென்றும், படிமுறைக் கிரமத்தினமைந்த சமயப் பிரவேசமும் இருவினைப் பகுதியின்மையுமென்றுங் கூறுவன கொண்டும் சமண சமயிகள் தமக்குச் செய்த மிறைகள் எல்லாவற்றையும் இவர் பொறுமையோடேற்று நகர்ந்து சிறிது மவர்பால் வெறுத்து முனியாத கொள்கை கொண்டும் நாயனார் அவற்றைத் தமது கொள்கை நிறுவும் சித்தாந்தப் பார்வையுள்ளன வென்றும், அச்சமயிகள் மேற்கொள்ளற்பாலனவாய் அறங்களை யன்றி யவர் அறியாமையிற் கொண்ட அவர் சமயத்தினும் அடங்காது அவர் கோட்பாட்டுக்கு விரோதமாகிய போலிக் கொள்கைகளைக் கண்டிப்பனவாமென்றுந் தெளிந்துகொள்வதே யமைவுடைத்தாம். அடிகள் ஆளுடைய பிள்ளையாரோடு விரவிப் பேரன்போடு உடனுறைந்து பல கோயிற் சென்று அளவளாவி ஒருங்கு பாடி உவப்பக் கூடி உள்ளப் பிரிதலும், அவரது சிவிகையைத் தாவியவர் திருவடித் தொண்டு செய்வதும், பிறவும் இவர் அவர்பாற் கொண்ட பேரன்பையும் இவரது அணைந்தோர் தன்மையையும் விளங்கக் காட்டுவனவாம். திருமறைக்காட்டின் கதவந் திறக்கப் பாடிய கருத்தில் அரசுகள் கொண்ட நெஞ்சத் துயர் யாவும் பிள்ளையாரே திறக்கற்பாலராகத் தாம் செவ்வியுறியாது திறக்கப் பாடியதற்கன்றி வேறொன்றற்கும் அன்றென்க. இறைவனும் இவருக்குத் தாழ்த்த தன்மையெல்லாம் இவரது பாட்டுக் கேட்கும் பண்பினும் பிள்ளையாரிடத்து இவர்க்குள்ள அன்பைக் காட்டுமாறு மன்றி வேறின்றெனவுங் கொள்க. இதனை வீழிமிழலையில் இவர்க்கு வாசியில்லாக் காசும் அவர்க்கு வாசிபட்ட காசும் அளித்த நலங்கொண்டும் உய்த்தறியலாகும்.

பற்றற்றார் சேரும் பழம்பதியாகிய சிவபெருமான் மூவாசையையும் அடியோடு வேரறுத்துப் பற்றுமுற்றொழிந்த செம்மை வாய்ந்தவர்க்கே அந்த மிலின்பத்தழிவில் வீடருளும்

அருளிப்பாட்டை இறைவன் இவ்வடிகள் திருப்பூந்துருத்தி மடத்தை விட்டுப் பொன்னையும் நவமணிகளையும் உழவாரத்திலேந்திக் குளத்திலெறிந்து அரம்பாதியர்களை அலையேன் மின்னென்று பாடிப் போக்கிய ஞான்றே வீடளித்த வரலாற்றுப் பகுதிகொண்டு காணற்பாலதாகின்றது.

இறுதியாக இவர் இறைவனை யடைந்ததிறத்திற் சிறிது கூறுவதுண்டு. அது இவரை இறைவன் சிங்க உருவங்கொண்டு மென்று சுவைத்து விழுங்கினான் என்னும் விலங்குக் கதையே. இதற்குத் திருவருட் பெருங் காப்பியமாகிய திருத்தொண்டர் புராணத்தேனும் நம்பியாண்டார் நம்பிகள், உமாபதி சிவாசாரியர் முதலிய அருளாளர் திருவாக்குகளினேனும் இவரது திருவாக்குக்களினேனும் எனைத்தேனும் சான்றில்லா தொழிந்தும் இச்சிங்கக் கதை எவ்வாறு தோன்றியதென்பது வியப்பைத் தருகின்றது. இம்மட்டினன்றி யிதனைத் திருப்புகலூர்க் கோயிலலுவலாளர்கள் (அதிகாரிகள்) இவர் திருநாளினடத்தவுஞ் செய்கின்றனரென்பதே மிக வருந்தற்பாலதாகின்றது. நிற்க: சிலர் இதற்குச் சான்று அடிகள் அடையும்போதோதிய மண் முதலாமுலகேத்தும் மன்னு திருத்தேவாரத்திலேயே இரண்டாந் திருப்பாட்டில் 'சமுத்திரத்தினஞ்சுண்டு சாவா மூவாச் சிங்கமே' என வருவதேயென்று கூறுநிற்பர். இச் சொற்றொடர் இறைவன் கடலினஞ்சமுண்டும் சாவா மூவாத்தன்மை வாய்ந்து அஃதிலாத் தேவர்க்கு விலங்குகட்குச் சிங்கம் தலைபாயதுபோலத் தேவதேவனாய்த் திகழ்பவன் என்னும் பொருளொன்று பயக்கும் பெற்றியதன்றி வேறொன்றும் பயப்பதாகக் காணப்பெறவில்லை. இச் சொற்றொடர்போலும் இறைவனைச் சிங்கமென்னும் சொற்றொடர் திருமுறையிற் பல விடங்களின் வருவது காணப்பெறும். தாலிபுலாக ஞாயமாக ஆளுடைய நம்பிகளது அருள்வாக்கின் 'சித்தர் சித்தித் திறங்காட்டுஞ் சிவனை தேவர் சிங்கமே' என வருவதை எடுத்துக் காட்டுவேம்.

இனி இத்திருவருட்பாக்களை யாராய்ந்து பதிப்பிக்கும் பண்பு வாயாத வெளியேன் ஏற்றுப்பதித்த செய்தி யிவற்றி

## முன்னுரை

னெனக்குள்ள ஆர்வமும், எவ்வகையாகவேனு மிப்புண்ணியங் கிடைத்தல் வேண்டுமெனும் எண்ணமும், மேலோர் பொறுப்ப ரென்ற உறுதியும், குற்றங் காணும் பெற்றியர் காணவே காணு வர் என்னும் துணிபும் என்னை ஊக்கியபடியால் என்னுடைய மிகச் சிறிய அறிவும் மிகச் சிறிய செயலுங் கொண்டு இதனை முடிப்பித்தேன். இவ்வேலை செய்து வருங்கால் 'நாதனே நலமெதொன் றடைவதற் கிடையூறு பலவுளவாமன்றே' என்னு முண்மைத் திருவாக்குக் கியையப் பல வேறு நெஞ்சத் துன்பங் கட்கும் உடற்றுன்பங்கட்கும் ஆளாய் மனமுடைந்து செயலற் றுக் கிடந்த நிலைமையால் அறிந்தும் அறியாதும் பல பிழைகள் பொதிந்திருத்தல் கூடும். அவற்றையெல்லாம்

'தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வா
ரெம்மை யுடைமை யெமை யிகழார்'

என்னும் அருட்டிருவுரையைப் புகலாகக் கொண்டு சிவநெறிச் செல்வர் பொறுத்தருள்வர் என்று அவரடி மலர்களைப் பன் முறையும் போற்றுமவரடிமை,

கயப்பாக்கம் - சதாசிவசெட்டியார்.

## நான்காந் திருமுறையின்

# பதிக அட்டவணை

# நான்காந் திருமுறையின் பதிக அட்டவணை

# நான்காந் திருமுறையின் பதிக அட்டவணை



ஆகப்பதிகம் ககச

## ஐந்தாந் திருமுறையின்

# பதிக அட்டவணை

# ஐந்தாந் திருமுறையின் பதிக அட்டவணை



ஆகப்பதிகம் ௱.

# ஆறாந் திருமுறையின்

# பதிக அட்டவணை

# ஆறாந் திருமுறையின் பதிக அட்டவணை

# தல அகராதி முதலியன

# தல அகராதி முதலியன

# தல அகராதி முதலியன

| தலம்—பதிகம் | திரு மு எண் | பக்கம் | தலம்—பதிகம் | திரு மு எண் | பக்கம் |
|---|---|---|---|---|---|
| ௬௰. சிராப்பள்ளி | | | தாயவனை | ௬ | ௫௭௫ |
| மட்டுவார் | ௫ | ௩௪௯ | ௭௪. நாகைக்காரோணம் | | |
| ௬௧. சிவபுரம் | | | மனைவிதாய் | ௪ | ௧௩௰ |
| வானவன் | ௬ | ௬௩௪ | வடிவுடைமா | ,, | ௧௮௫ |
| ௬௨. செங்காட்டங்குடி | | | பாணத்தான் | ௫ | ௩௪௬ |
| பெருந்தகை | ௬ | ௬௨௬ | பாரார்பர | ௬ | ௪௪௭ |
| ௬௩. செம்பொன்பள்ளி | | | ௭௫. நாரையூர் | | |
| ஊனினுள் | ௪ | ௬௨ | வீறுதானுடை | ௫ | ௨௯௯ |
| கானருத | ௫ | ௨௬௬ | சொல்லானை | ௬ | ௫௯௬ |
| ௬௪. சேறை | | | ௭௬. நின்றியூர் | | |
| பெருந்திரு | ௪ | ௧௩௪ | கொடுங்கண் | ௫ | ௨௪௩ |
| பூரியாவ | ௫ | ௩௩௭ | ௭௭. நீலக்குடி | | |
| ௬௫. சோற்றுத்துறை | | | வைத்தமாடு | ௫ | ௩௨௮ |
| பொய்விரா | ௪ | ௮௨ | ௭௮. நெய்த்தானம் | | |
| காலையெழு | ,, | ௧௫௨ | காலனைவீழ | ௪ | ௭௫ |
| கொல்லையே | ௫ | ௨௬௧ | பாரிடஞ்சாடி | ,, | ௧௫௯ |
| மூத்தவனை | ௬ | ௫௱௰ | கொல்லியான் | ௫ | ௨௬௨ |
| ௬௬. தலையாலங்காடு | | | வகையெலா | ௬ | ௫௱௧ |
| தொண்டர்க் | ௬ | ௬௧௨ | மெய்த்தான | ,, | ௫௱௪ |
| ௬௭. துருத்தி | | | ௭௯. நெல்வாயிலரத்துறை | | |
| பொருத்திய | ௪ | ௮௪ | கடவுளைக் | ௫ | ௨௱௯ |
| ௬௮. தூங்கானைமாடம் | | | ௮௰. பந்தணைநல்லூர் | | |
| பொன்னார்திரு | ௪ | ௧௯௩ | நோதங்க | ௬ | ௪௱௰ |
| ௬௯. நல்லம் | | | ௮௧. பயற்றூர் | | |
| கொல்லத்தா | ௫ | ௨௭௭ | உரித்திட்டா | ௪ | ௬௭ |
| ௭௰. நல்லூர் | | | ௮௨. பராய்த்துறை | | |
| அட்டுமினில் | ௪ | ௧௭௪ | கரப்பர் | ௫ | ௨௫௫ |
| நினைந்துருகு | ௬ | ௪௨௨ | ௮௩. பருப்பதம் | | |
| ௭௧. நள்ளாறு | | | கன்றினார் | ௪ | ௱௯ |
| உள்ளாருத | ௫ | ௩௨௨ | ௮௪. பழனம் | | |
| ஆதிக்கணை | ௬ | ௪௪௧ | சொன்மாலை | ௪ | ௨௯ |
| ௭௨. நனிபள்ளி | | | ஆடினாரொரு | ,, | ௭௪ |
| முற்றுணை | ௪ | ௧௨௯ | மேவித்து | ,, | ௧௫௬ |
| ௭௩. நாகேச்சரம் | | | அருவனாய | ௫ | ௨௬௪ |
| கச்சைசே | ௪ | ௧௨௨ | அலையார்கட | ௬ | ௪௮௭ |
| நல்லார்நல் | ௫ | ௨௯௪ | ௮௫. பழையாறைவடதளி | | |
| | | | தலையெலாஞ் | ௫ | ௩௱௪ |

## தல அகராதி முதலியன

# திருநாவுக்கரசு சுவாமிகள் பாடியருளிய

## பண்மொத்தம்

### பதிகம்

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ௧. | நான்காந்திருமுறை | ௧௧௪ | தலம் | ௯௭ | பொது | ௧௭ |
| ௨. | ஐந்தாந்திருமுறை | ௱ | ,, | ௮௮ | ,, | ௧௨ |
| ௩. | ஆறாந்திருமுறை | ௯௯ | ,, | ௯௧ | ,, | ௮ |
| | ஆகமொத்தம் | ௩௧௩ | | ௨௭௬ | + | ௩௭ |

| பண் | பதிகம் | திருக்குறுந்தொகை | திருத்தாண்டகம் |
|---|---|---|---|
| கொல்லி | ௧ | | |
| காந்தாரம் | ௬ | ௱ | ௯௯ |
| பியந்தைக்காந்தாரம் | ௧ | | |
| சாதாரி | ௧ | | |
| காந்தார பஞ்சமம் | ௨ | | |
| பழந்தக்கராகம் | ௨ | | |
| பழம்பஞ்சுரம் | ௨ | | |
| இந்தளம் | ௩ | | |
| சீகாமரம் | ௨ | | |
| குறிஞ்சி | ௧ | | |
| திருநேரிசை (கொல்லி) | ௨ | | |
| ,, | ௫௬ | | |
| திருவிருத்தம் (கொல்லி) | ௨ | | |
| ,, | ௩௩ | | |
| ஆக | ௧௧௪ | | |

# பதிகவரலாறுகளின் அட்டவணை



திருநாவுக்கரசு

சுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரம்



திருமுறை

— ௪ —

உ

திருச்சிற்றம்பலம்

திருநாவுக்கரசு சுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரப்பதிகங்கள்

# நான்காந்திருமுறை

## திருவதிகைவீரட்டானம் பதிகம் க

பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

கூற்றா யினவா றுவிலக் ககிலீர்
கொடுமை பலசெய் தனநா னறியேன்
ஏற்றா யடிக்கே* யிரவும் பகலும்
பிரியா துவணங் குவனெப் பொழுதும்
தோற்றா தென்வயிற் றினகம் படியே
குடரோ டுதுடக் கிமுடக் கியிட
ஆற்றே னடியே னதிகைக் கெடில
வீரட் டானத் துறையம் மானே.

நெஞ்சம் முமக்கே யிடமா கவைத்தே
னினையா தொருபோ துமிருந் தறியேன்
வஞ்சம் மிதுவொப் பதுகண் டறியேன்
வயிற்றோ டுதுடக் கிமுடக் கியிட
நஞ்சா கிவந்தென் னைநலி வதனை
நணுகா மற்றுரந் துகரந் துமிடீர்
அஞ்சே லுமென்னீ ரதிகைக் கெடில
வீரட் டானத் துறையம் மானே.

(பாடபேதம்) * ஏற்றாவடிக்கே.

பணிந்தா ரனபா வங்கள்பாற் றவல்லீர்
படுவெண் டலையிற் பலிகொண் டுழல்வீர்
துணிந்தே யுமக்காட் செய்துவா ழலுற்றாற்
சுடுகின் றதுசூ லைதவிர்த் தருளீர்
பிணிந்தார் பொடிகொண் டுமெய்பூ சவல்லீர்
பெற்றமேற் றுகந்தீர் சுற்றும்வெண் டலைகொண்
டணிந்தீ ரடிகே ளதிகைக் கெடில
வீரட் டானத் துறையம் மானே. ௩

முன்னம் மடியே னறியா மையினான்
முனிந்தென் னைநலிந் துமுடக் கியிடப்
பின்னை யடியே னுமக்கா ளும்பட்டேன்
சுடுகின் றதுசூ லைதவிர்த் தருளீர்
தன்னை யடைந்தார் வினைதீர்ப் பதன்றோ
தலையா யவர்தங் கடனா வதுதான்
அன்ன நடையா ரதிகைக் கெடில
வீரட் டானத் துறையம் மானே.

காத்தாள் பவர்கா வலிகழ்ந் தமையாற்
கரைநின் றவர்கண் டுகொளென் றுசொல்லி
நீத்தா யகயம் புகநூக் கியிட
நிலைக்கொள் ளும்வழித் துறையொன் றறியேன்
வார்த்தை யிதுவொப் பதுகேட் டறியேன்
வயிற்றோ டுதுடக் கிமுடக் கியிட
ஆர்த்தார் புனலா ரதிகைக் கெடில
வீரட் டானத் துறையம் மானே.

சலம்பூ வொடுதூ பமறந் தறியேன்
றமிழோ டிசைபா டன்மறந் தறியேன்
நலந்தீங் கிலுமுன் னைமறந் தறியே
னுன்னா மமென்னா வின்மறந் தறியேன்
உலந்தார் தலையிற் பலிகொண் டுழல்வா
யுடலுள் ளுறுசூ லைதவிர்த் தருளாய்
அலந்தே னடியே னதிகைக் கெடில
வீரட் டானத் துறையம் மானே.

உயர்ந்தேன் மனைவாழ்க் கையுமொண் பொருளு
மொருவர் தலைகா வலிலா மையினால்
வயந்தே யுமக்காட் செய்துவா ழலுற்றால்
வலிக்கின் றதுசூ லைதவிர்த் தருளீர்
பயந்தே யென்வயிற் றினகம் படியே
பறித்துப் புரட்டி யறுத்தீர்த் திடநான்
அயர்ந்தே னடியே னதிகைக் கெடில
வீரட் டானத் துறையம் மானே.

வலித்தேன் மனைவாழ்க் கைமகிழ்ந் தடியேன்
வஞ்சம் மனமொன் றுமிலா மையினால்
சலித்தா லொருவர் துணையா ருமில்லைச்
சங்கவெண் குழைக்கா துடையெம் பெருமான்
கலித்தே யென்வயிற் றினகம் படியே
கலக்கி மலக்கிட் டுக்கவர்ந் துதின்ன
அலுத்தே னடியே னதிகைக் கெடில
வீரட் டானத் துறையம் மானே.

பொன்போ லமிளிர் வதொர்மே னியினீர்
புரிபுன் சடையீர் மெலியும் பிறையீர்
துன்பே கவலை பிணியென் றிவற்றை
நணுகா மற்றுரந் துகரந் துமிடீர்
என்போ லிகளும் மையினித் தெளியா
ரடியார் படுவ திதுவே யாகில்
அன்பே யமையும் மதிகைக் கெடில
வீரட் டானத் துறையம் மானே.

போர்த்தா யங்கொரா னையினீ ருரிதோல்
புறங்கா டரங்கா நடமா டவல்லாய்
ஆர்த்தா னரக்கன் றனை*மால் வரைக்கீ
ழடர்த்திட் டருள்செய் தவது கருதாய்

பா - ம்.) *ஆர்த்தாயரக்கன்றனை.

வேர்த்தும் புரண்டும் விழுந்தும் மெழுந்தா
லென்வே தனையா னவிலக் கியிடாய்
ஆர்த்தார் புனல்சூ ழதிகைக் கெடில
வீரட் டானத் துறையம் மானே.

திருச்சிற்றம்பலம்

---

**பதிக வரலாறு**

திருமுனைப்பாடி நாட்டிலே, திருவாமூரிலே, வேளாளர் குலத்திலே, குறுக்கையர் குடியிலே புகழனருக்கும் மாதினியாருக்கும் திலகவதியார் என்னும் புதல்வியார் பிறந்த பின்னர் மருணீக்கியார் திருவவதாரஞ் செய்து பெற்றோர் பேணிக் களிக்கும்படி பல கலைகளையும் கற்று வல்லவராயினர்.

இவ ரிவ்வாறிருக்குநாளில் திலகவதியாருக்குப் பன்னிரண்டாண்டு நிரம்பி அவரை அரசனிடத்திற் சேனைபதியா யமர்ந்த கலிப்பகையார் முதியோரை யனுப்பித் தமக்கு மணம்பேசி நேர்ந்தார். ஆயினும் அவர் மணத்தின் முன்னரே அரசனது ஏவலால் போருக்குச் சென்று வென்று பூதவுடம்பை விட்டுப் புகழுடம்பு பெற்றார். சற்று முன்னரே தந்தையார் இறப்பத் தாயாரும் உடன்கட்டை யேறி இருவரும் விண்ணுலகடைந்தனர். போர்முகத்திலே கலிப்பகையார் இறந்த செய்தியைக் கேட்ட திலகவதியார் அவருக்கென்று தம்மை மணம்பேசிய தன்மையால் அவரோடு தாமுஞ் செல்ல இயைந்து இறக்கத் துணிந்தார். அதனை யறிந்த மருணீக்கியார் இருமுது குரவரும் இறந்த பின்னர் உம்மையே எல்லாமாகக் கருதி உயிர் பிழைத்திருக்கின்றேன், நீர் செல்வதானல் உமக்கு முன் யான் செல்வேன் என்றார். தம்பியார் உயிர்வாழ வேண்டுமென்னுங் கருத்தினல் திலகவதியார் உயிர் தரித்துத் தபோதனியாராய் வீட்டிலே தவஞ்செய்தமர்ந்தார்.

மருணீக்கியாரும் உடன் முதலியன நிலையாமையை யுணர்ந்து தமது செல்வத்தினற் பல அறங்கள் செய்து, உண்மைச் சமயம் இஃதென வுணரும் உண்மையறிவு தலைப்படாமல் பாடலிபுத்திரத்திற் சமணர்களது வஞ்சனையினன் மயங்கி ஆருகத மதத்தைத் தழுவி அந்நூல்களைக் கற்று வல்லவராய்ப் புத்தரையும் வாதில் வென்று மிகச் சிறந்து மேம்பட்டுத் தருமசேனர் என்னும் பேர்பெற்று அச் சமணர்க்கெல்லாம் சமய குரவராய் விளங்கினர்.





திலகவதியாரைக் கண்டு பணிதல்

இவ்வளவில் திருவாமூரிற் றிலகவதியார் சிவபுண்ணியஞ் செய்ய விரும்பித் திருவதிகையை யடைந்து திருவீரட்டானேசுரருடைய சந் நிதியிற் றிருவலகு திருமெழுக்கு திருப்பள்ளித்தாமம் முதலிய திருப்பணி களைச் செய்து வருபவர் தமது தம்பியார் சமணநெறியில் நுழைந்து உய்யும் நெறியாகிய சைவநெறியை விட்டமையைப் பற்றிக் கவன்று தினமும் சிவபெருமான் றிருவடியிற் றமது தம்பியார் சைவத்தையடைந்து கரையேற வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்வார்; பல முறையும் விண்ணப்பஞ்செய்து கவலுதலை யறிந்த எம்பிரான் அவரது கனவிலே தோன்றி 'தபோதனியே, உனது தம்பி முன்னமே முனியாய் என்னை யடையத் தவஞ்செய்திருக்கின்றான்; சிறிது வழுவினாற் சமணரை யடைந் தான். அவனை விரைவிற் சூலைநோயைக் கொடுத்து ஆட்கொள்ளுகின் றோம் : உன் கவலை யொழி' என்றுகூறி மறைந்தருளினர். அவருக்குக் கனவிலே கூறியவாறு தருமசேனரது வயிற்றில் வடவனலுங் கொடு நஞ்சும் வச்சிரமும் பிறவுமாம் கொடியவெலா மொன்றாகிச் சூலைநோ யென்னும் பெயரோடு தோன்றி வருத்தியதனால் அவர் அதனைப் பொறுக்க முடியாமற் சமண் பாழியில் வீழ்ந்தார். சமணர்கள் தமது சமண் சமயச் சார்பான எவ்வகைத் தீர்வினைச் செய்துந் தீராது அது மேன்மேல் வளர்வதாயிற்று. அதனைக் கண்டு அவரை யாவருங் கைவிட் டார்கள்.

தருமசேனரும் அதனைத் தரிக்கமுடியாமையால் தமது தமக்கை யை யடைந்து உய்யவெண்ணி அவர்பால் ஒரு பாகுகனை ஏவ அவனும் அவருக்கு அதனைத் தெரிவித்தான். திலகவதியார் திருவருட் செய்கை யை வியந்து தம்பியாரின் பொருட்டு வருந்தியும் தாம் சமண் பாழிக்கு வரமுடியாதென்று சொல்லிவிட்டார். அதனைக் கேட்ட தருமசேனர் அன்றிரவில் ஒருவரும் அறியாது தமது தமக்கையை யடைந்து அவரது திருவடியில் வீழ்ந்து வணங்கி யழுதார். அதனைக் கண்ட திலகவதியார் அவரை எழுமாறு பணித்துத் திருநீற்றைத் திருவைந்தெழுத்தில் மந் திரித்துக்கொடுத்து அணிந்துகொள்ளும்படிச் சொல்ல அவரும் அதனை அவ்வாறே உடம்பு முழுதும் அணிந்துகொண்டார்.

விடியற்காலத்திற் றிருப்பள்ளி யெழுச்சியில் திலகவதியார் தமது தம்பியை யழைத்துக்கொண்டு திருக்கோயிலை யடைந்தார். தருமசேனர் இறைவனை வலம் வந்து திருமுன்னே வணங்கி யெழுந்து நின்று திரு வருளாலே பாடுந் தன்மைபெற்றுத் தமது சூலை நீங்குமாறும் உலகமெல் லாம் ஓதி உய்யுமாறும் 'கூற்றாயினவாறு விலக்ககிலீர்' என்னும் திருப் பதிகத்தைப் பாடினவளவிற் சூலை நீங்கி யொழிந்தது.

மருணீக்கியார் பேரானந்த வாரிதியில் மூழ்கிப் பன்முறையும் வணங்கி வீழ்ந்து, தேவரீரை யடைந்துய்ய உதவிய இச்சூலைக்கு யான் என்ன கைம்மாறு செய்வேன் என்று வாழ்த்தினர். அப்போது ஆகாயத்தில் 'நீ மிக அற்புதமான தேவாரத் திருப்பதிகம் பாடியபடியால் உனக்கு 'நாவுக்கரசு' என்னும் நற்பெயர் எழுலகங்களினும் வழங்குக' என்று ஓர் அசரீரி உண்டாயது. இதனை யறிந்த திருவதிகையிலுள்ள எல்லோரும் பிறரும் சைவர் தழைத்து உலகம் உய்ந்தது என்று களித்துக் கொண்டாடினர்கள்.



## திருவதிகைவீரட்டானம் பதிகம் ௨

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

சுண்ணவெண் சந்தனச் சாந்துஞ் சுடர்த்திங்கட் சூளா மணியும்
வண்ண வுரிவை யுடையும் வளரும் பவள நிறமும்
அண்ண லரண்முர ணேறு மகலம் வளாய வரவும்
திண்ணன் கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை யஞ்ச வருவது மில்லை.

பூண்டதோர் கேழ லெயிறும் பொன்றிக ழாமை புரள
நீண்டதிண் டோள்வலஞ் சூழ்ந்து நிலாக்கதிர் போலவெண் ணூலும்
காண்டகு புள்ளின் சிறகுங் கலந்தகட் டங்கக் கொடியும்
ஈண்டு கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை யஞ்ச வருவது மில்லை.

ஒத்த வடத்திள நாக முருத்திர பட்ட மிரண்டும்
முத்து வடக்கண் டிகையு முளைத்தெழு மூவிலை வேலும்
சித்த வடமு மதிகைச் சேணுயர் வீரட்டஞ் சூழ்ந்து
தத்துங் கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை யஞ்ச வருவது மில்லை.

மடமான் மறிபொற் கலையு மழுப்பாம் பொருகையில் வீணை
குடமால் வரையதிண் டோளுங் குனிசிலைக் கூத்தின் பயில்வும்
இடமா றழுவிய பாக மிருநில னேற்ற சுவடும்
தடமார் கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை யஞ்ச வருவது மில்லை. ௪

பலபல காமத்த ராகிப் பதைத்தெழு வார்மனத் துள்ளே
கலமலக் கிட்டுத் திரியுங் கணபதி யென்னுங் களிறும்
வலமேந் திரண்டு சுடரும் வான்கயி லாய மலையும்
நலமார் கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை யஞ்ச வருவது மில்லை. ௫

கரந்தன கொள்ளி விளக்குங் கறங்கு துடியின் முழக்கும்
பரந்த பதினெண் கணமும் பயின்றறி யாதன பாட்டும்
அரங்கிடை நூலறி வாள ரறியப்ப டாததொர் கூத்தும்
நிரந்த கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை யஞ்ச வருவது மில்லை. ௬

கொலைவரி வேங்கை யதளுங் குலவோ டிலங்குபொற் றோடும்
விலைபெறு சங்கக் குழையும் விலையில் கபாலக் கலனும்
மலைமகள் கைக்கொண்ட மார்பு மணியார்ந் திலங்கு மிடறும்
உலவு கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை யஞ்ச வருவது மில்லை. ௭

ஆடல் புரிந்த நிலையு மரையி லசைத்த வரவும்
பாடல் பயின்றபல் பூதம் பல்லா யிரங்கொள் கருவி
நாடற் கரியதொர் கூத்து நன்குயர் வீரட்டஞ் சூழ்ந்து
ஓடுங் கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை யஞ்ச வருவது மில்லை. ௮

சூழு மரவத் துகிலுந் துகில்கிழி கோவணக் கீளும்
யாழின் மொழியவ ளஞ்ச வஞ்சா தருவரை போன்ற
வேழ முரித்த நிலையும் விரிபொழில் வீரட்டஞ் சூழ்ந்து
தாழுங் கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை யஞ்ச வருவது மில்லை. ௯

நரம்பெழு கைகள் பிடித்து நங்கை நடுங்க மலையை
உரங்களெல் லாங்கொண் டெடுத்தா னென்பது மொன்று மலற
வரங்கள் கொடுத்தருள் செய்வான் வளர்பொழில் வீரட்டஞ் சூழ்ந்து
நிரம்பு கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை யஞ்ச வருவது மில்லை. ௰

திருச்சிற்றம்பலம்

---

**பதிக வரலாறு**

திருநாவுக்கரசுநாயனார் நீற்றறையிலே வேவாது பிழைத்தும், நஞ்சு கலந்த பாற்சோற்றை உண்டு தங்கியும் விளங்குவதை யறிந்த மாபாவிக் கடையமணர் வாகீசத் திருவடிகளைச் சினமிகக் கொண்ட கொலைக்களிற்றின் முன்னர் விடவேண்டுமென்று சொன்னசொல்லை ஒப்பி முறை திறம்பிய பல்லவனும் அவ்வாறே அவர்மேல் யானையை யேவப் பணித்தான். பாவகாரிகளாகிய சமணர் அவ்வாறு செய்த போது நாயனார் அதற்குச் சிறிதும் அஞ்சாது 'சுண்ணவெண் சந்தனச் சாந்து' என்னு மித் திருப்பதிகத்தை யெடுத்துத் திருப்பாட்டு தோறும் தாம் வீரட்டேசுரருடைய அடியவராதலையும், அதனாற் றாம் அஞ்சவேண்டாமையையும் சொல்லித் தம்பெருமானைச் சரணடைந்த போது அவ் யானை தொண்டரை வலமாகச் சூழ்ந்து எதிரே வணங்கி யெழுந்து மீண்டு மீண்டும் தன்னை யவர்மேற் செலுத்தும் பாகரையும் அமணரையுங் கொன்று மிக்க ஆகுலத்தை விளைத்தமையின் எஞ்சினின் றோர் யாவரும் ஓடி விலகினார்கள்.



திருவையாறு பதிகம் ந

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

மாதர்ப் பிறைக்கண்ணி யானை மலையான் மகளொடும் பாடிப்
போதொடு நீர்சுமந் தேத்திப் புகுவா ரவர்பின் புகுவேன்
யாதுஞ் சுவடு படாமலை யா றடைகின்ற போது
காதன் மடப்பிடி யோடுங் களிறு வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். க

போழிளங் கண்ணியி னானைப் பூந்துகி லாளொடும் பாடி
வாழியம் போற்றியென் றேத்தி வட்டமிட் டாடா வருவேன்
ஆழி வலவனின் றேத்து மையா றடைகின்ற போது
கோழி பெடையொடுங் கூடிக் குளிர்ந்து வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். ௨

எரிப்பிறைக் கண்ணியி னானை யேந்திழை யாளொடும் பாடி
முரித்த விலயங்க ளிட்டு முகமலர்ந் தாடா வருவேன்
அரித்தொழு கும்வெள் ளருவி யையா றடைகின்ற போது
வரிக்குயில் பேடையொ டாடி வைகி வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். ௩

பிறையிளங் கண்ணியி னானைப் பெய்வளை யாளொடும் பாடித்
துறையிளம் பன்மலர் தூவித் தோளைக் குளிரத் தொழுவேன்
அறையிளம் பூங்குயி லாலு மையா றடைகின்ற போது
சிறையிளம் பேடையொ டாடிச் சேவல் வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். ௪

ஏடு மதிக்கண்ணி யானை யேந்திழை யாளொடும் பாடிக்
காடொடு நாடு மலையுங் கைதொழு தாடா வருவேன்
ஆட லமர்ந்துறை கின்ற வையா றடைகின்ற போது
பேடை மயிலொடுங் கூடிப் பிணைந்து வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். ௫

தண்மதிக் கண்ணியி னானைத் தையனல் லாளொடும் பாடி
உண்மெலி சிந்தைய னாகி யுணரா வுருகா வருவேன்
அண்ண லமர்ந்துறை கின்ற வையா றடைகின்ற போது
வண்ணப் பகன்றிலொ டாடி வைகி வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். ௬

கடிமதிக் கண்ணியி னானைக் காரிகை யாளொடும் பாடி
வடிவொடு வண்ண மிரண்டும் வாய்வேண் டுவசொல்லி வாழ்வேன்
அடியிணை யார்க்குங் கழலா னையா றடைகின்ற போது
இடிகுர லன்னதொ ரேன மிசைந்து வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். ௭

விரும்பு மதிக்கண்ணி யானை மெல்லிய லாளொடும் பாடிப்
பெரும்புலர் காலை யெழுந்து பெறுமலர் கொய்யா வருவேன்
அருங்கலம் பொன்மணி யுந்து மையா றடைகின்ற போது
கருங்கலை பேடையொ டாடிக் கலந்து வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். அ

முற்பிறைக் கண்ணியி னானை மொய்குழ லாளொடும் பாடிப்
பற்றிக் கயிறறுக் கில்லேன் பாடியு மாடா வருவேன்
அற்றருள் பெற்றுநின் றாரோ டையா றடைகின்ற போது
நற்றுணைப் பேடையொ டாடி நாரை வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். கூ

திங்கண் மதிக்கண்ணி யானைத் தேமொழி யாளொடும் பாடி
எங்கரு னல்குங்கொ லெந்தை யெனக்கினி யென்று வருவேன்
அங்கிள மங்கைய ராடு மையா றடைகின்ற போது
பைங்கிளி பேடையொ டாடிப் பறந்து வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். ய

வளர்மதிக் கண்ணியி னானை வார்குழ லாளொடும் பாடிக்
களவு படாததொர் காலங் காண்பான் கடைக்கணிக் கின்றேன்
அளவு படாததொ ரன்போ டையா றடைகின்ற போது
இளமண நாகு தழுவி யேறு வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். கக

திருச்சிற்றம்பலம்

---

**பதிக வரலாறு**

திருநாவுக்கரசுநாயனார் திருக்காளத்தியை யடைந்து வழிபட்ட போது உத்தர கயிலாயமாகிய திருநொடித்தான் மலையை யடைந்து வணங்க விரும்பிப் பல பதிகளை வணங்கிச் சென்று செல்லுதற்கரிய சுரத்திற் றலைப்பட்டு நடந்து தமது பல உறுப்புக்களுஞ் சிதைந்து சிறிதுஞ் சத்தியின்றி ஓரிடத்திலே கிடக்க இறைவர் ஓர் முனிவர் வடிவாய் முற்பட்டுத் தோன்றி யவரை 'நீர் உமது அங்கங்களெல்லாஞ் சிதைய வருந்தி இவணடைந்த தென்' னென்று வினவினர். அதனைக் கேட்டும்

அவரது திருவேடத்தைக் கண்டும் அயர்ச்சி நீங்கிச் சிறிது உணர்வெய்திய நாயனார் தமது கருத்தினைச் சொல்லி யருளினார். முனிவரும், 'தேவர்க்கும் அரிய திருக்கயிலை உமக்கு எளிதாகுமோ! இங்கு இம்முயற்சியி னிறப்பதனினுந் திரும்பிச்சென்று பிழைத்தல்நன்று' என்னலும் அதனைக் கேட்ட வாகீசப் பெருந்தகையார் 'ஆளுநாயகன் திருக்கயிலையைக் கண்டல்லால் மாளுமிவ் வுடலைக்கொண்டு மீளேன்' என்று மறுத்தார். இறைவர் அவருறுதியைப் பாராட்டி ஆகாயத்திலே மறைந்து அசரீரியாய் அவரை எழுந்திருக்குமாறு பணித்துப் பின்னர் அங்குள்ள பொய்கையின் மூழ்கித் திருவையாற்றினுள்ள குளத்தின் வெளிவந்து தமது திருக்கயிலாயத் திருவோலக்கத்தை அங்குக் காணும்படி பணித்து எழுந்தருளினார். வாகீசப் பெருந்தகையாரும் அவ்வாறே செய்து திருவையாற்றில் நிற்பவுஞ் சரிப்பவுமான எல்லாம் தத்தமது துணைகளோடும் சிவமும் சத்தியுமாக விளங்குவதைக்கண்டு களித்துச் சந்நிதியடைந்து அது கயிலாயமானதையும் இறைவன் திருக்கயிலாயத் திருக்கோலத்தையுங் கண்டு தரிசித்துப் பேரானந்தத்தின் மூழ்கி 'மாதர்ப் பிறைக்கண்ணியானை' என்னுமிப் பதிகத்தையு மின்னும் பல திருப்பதிகங்களையும் பாடி யருளினார்.



திருவாரூர் பதிகம் ௪

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

பாடிளம் பூதத்தி னானும் பவளச்செவ் வாய்வண்ணத் தானும்
கூடிள மென்முலை யாளைக் கூடிய கோலத்தி னானும்
ஓடிள வெண்பிறை யானு மொளிதிகழ் சூலத்தி னானும்
ஆடிளம் பாம்பசைத் தானு மாரூ ரமர்ந்தவம் மானே.

நரியைக் குதிரைசெய் வானு நரகரைத் தேவுசெய் வானும்
விரதங்கொண் டாடவல் லானும் விச்சின்றி நாறுசெய் வானும்
முரசதிர்ந் தானைமுன் னோட முன்பணிந் தன்பர்க ளேத்த
அரவரைச் சாத்திநின் றானு மாரூ ரமர்ந்தவம் மானே.

நீறுமெய் பூசவல் லானு நினைப்பவர் நெஞ்சத்து ளானும்
ஏறுகந் தேறவல் லானு மெரிபுரை மேனியி னானும்
நாறு கரந்தையி னானு நான்மறைக் கண்டத்தி னானும்
ஆறு சடைக்கரந் தானு மாரூ ரமர்ந்தவம் மானே.

கொம்புநல் வேனி லவனைக் குழைய முறுவல்செய் தானும்
செம்புனல் கொண்டெயின் மூன்றுந் தீயெழக் கண்சிவந் தானும்
வம்புநற் கொன்றையி னானும் வாட்கண்ணி வாட்டம தெய்த
அம்பர வீருரி யானு மாரூ ரமர்ந்தவம் மானே.

ஊழி யளக்கவல் லானு முகப்பவ ருச்சியுள் ளானும்
தாழிளஞ் செஞ்சடை யானுந் தண்ணமர் திண்கொடி யானும்
தோழியர் தூதிடை யாடத் தொழுதடி யார்கள் வணங்க
ஆழி வளைக்கையி னானு மாரூ ரமர்ந்தவம் மானே.

ஊர்திரை வேலையுள் ளானு முலகிறந் தொண்பொரு ளானும்
சீர்தரு பாடலுள் ளானுஞ் செங்கண் விடைக்கொடி யானும்
வார்தரு பூங்குழ லாளை மருவி யுடன்வைத் தவனும்
ஆதிரை நாளுகந் தானு மாரூ ரமர்ந்தவம் மானே.

தொழற்கங்கை துன்னிநின் றார்க்குத் தோன்றி யருளவல் லானும்
கழற்கங்கை பன்மலர் கொண்டு காதல் கனற்றநின் றானும்
குழற்கங்கை யாளையுள் வைத்துக் கோலச் சடைக்கரந் தானும்
அழற்கங்கை யேந்தவல் லானு மாரூ ரமர்ந்தவம் மானே. எ

ஆயிரந் தாமரை போலு மாயிரஞ் சேவடி யானும்
ஆயிரம் பொன்வரை போலு மாயிரந் தோளுடை யானும்
ஆயிர ஞாயிறு போலு மாயிர நீண்முடி யானும்
ஆயிரம் பேருகந் தானு மாரூ ரமர்ந்தவம் மானே. அ

வீடரங் காநிறுப் பானும் விசும்பினை வேதி தொடர
ஓடரங் காகவைத் தானு மோங்கியொ ரூழியுள் ளானும்
காடரங் காமகிழ்ந் தானுங் காரிகை யார்கண் மனத்துள்
ஆடரங் கத்திடை யானு மாரூ ரமர்ந்தவம் மானே.

பையஞ் சுடர்விடு நாகப் பள்ளிகொள் வானுள்ளத் தானும்
கையஞ்சு நான்குடை யானைக் கால்விர லாலடர்த் தானும்
பொய்யஞ்சி வாய்மைகள் பேசிப் புகழ்புரிந் தார்க்கருள் செய்யும்
ஐயஞ்சி னப்புறத் தானு மாரூ ரமர்ந்தவம் மானே. ௰

திருச்சிற்றம்பலம்



## திருவாரூர் பதிகம் ௫

பழமொழி - பண் - காந்தாரம் *

திருச்சிற்றம்பலம்

மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த
மேனியான் றாடொ ழாதே
உய்யலா மென்றெண்ணி யுறிதூக்கி
யுழிதந்தென் னுள்ளம் விட்டுக்
கொய்யுலா மலர்ச்சோலைக் குயில்கூவ
மயிலாலு மாரூ ரரைக்
கையினாற் றொழாதொழிந்து கனியிருக்கக்
காய்கவர்ந்த கள்வ னேனே.

என்பிருத்தி நரம்புதோல் புகப்பெய்திட்
டென்னையோ ருருவ மாக்கி
இன்பிருத்தி முன்பிருந்த வினைதீர்த்திட்
டென்னுள்ளங் கோயி லாக்கி
அன்பிருத்தி யடியேனைக் கூழாட்கொண்
டருள்செய்த வாரூ ரர்தம்
முன்பிருக்கும் விதியின்றி முயல்விட்டுக்
காக்கைப்பின் போன வாறே.

* இதனைச் சிலர் குறிஞ்சி யென்பர்.

பெருகுவித்தென் பாவத்தைப் பண்டெலாங்
குண்டர்கடஞ் சொல்லே கேட்டு
உருகுவித்தென் னுள்ளத்தி னுள்ளிருந்த
கள்ளத்தைத் தள்ளிப் போக்கி
அருகுவித்துப் பிணிகாட்டி யாட்கொண்டு
பிணிதீர்த்த வாரூ ரர்தம்
அருகிருக்கும் விதியின்றி யறமிருக்க
மறம்விலைக்குக் கொண்ட வாறே.

குண்டனாய்த் தலைபறித்துக் குவிமுலையார்
நகைகாணா துழிதர் வேனைப்
பண்டமாப் படுத்தென்னைப் பாறலையிற்
றெளித்துத்தன் பாதங் காட்டித்
தொண்டெலா மிசைபாடத் தூமுறுவ
லருள்செய்யு மாரூ ரரைப்
பண்டெலா மறியாதே பனிநீராற்
பரவைசெயப் பாவித் தேனே.

துன்னாகத் தேனாகித் தூர்ச்சனவர்
சொற்கேட்டுத் துவர்வாய்க் கொண்டு
என்னாகத் திரிதந்தீங் கிருகையேற்
றிடவுண்ட வேழையேனான்
பொன்னாகத் தடியேனைப் புகப்பெய்து
பொருட்படுத்த வாரூ ரரை
என்னாகத் திருத்தாதே யேதன்போர்க்
காதனா யகப்பட் டேனே.

பப்போதிப் பவணனாய்ப் பறித்ததொரு
தலையோடே திரிதர் வேனை
ஒப்போட வோதுவித்தென் னுள்ளத்தி
னுள்ளிருந்தங் குறுதி காட்டி
அப்போதைக் கப்போது மடியவர்கட்
காரமுதா மாரூ ரரை
எப்போது நினையாதே யிருட்டறையின்
மலடுகறந் தெய்த்த வாறே.

தியொன்று மறியாதே கண்ணழலத்
தலைபறித்துக் கையி லுண்டு
பதியொன்று நெடுவீதிப் பலர்காண
நகைநாணு துழிதர் வேற்கு
மதிதந்த வாரூரில் வார்தேனை
வாய்மடுத்துப் பருகி யுய்யும்
விதியின்றி மதியிலியேன் விளக்கிருக்க
மின்மினித்தீக் காய்ந்த வாறே.

பூவையாய்த் தலைபறித்துப் பொறியற்ற
சமணீசர் சொல்லே கேட்டுக்
காவிசேர் கண்மடவார்க் கண்டோடிக்
கதவடைக்குங் கள்வ னென்றன்
ஆவியைப் போகாமே தவிர்த்தென்னை
யாட்கொண்ட வாரூ ரரைப்
பாவியே னறியாதே பாழூரிற்
பயிக்கம்புக் கெய்த்த வாறே.

ஒட்டாத வாளவுணர் புரமூன்று
மோரம்பின் வாயின் வீழக்
கட்டானைக் காமனையுங் காலனையுங்
கண்ணினொடு காலின் வீழ
அட்டானை யாரூரி லம்மானை
யார்வச்செற் றக்கு ரோதம்
தட்டானைச் சாராதே தவமிருக்க
வவஞ்செய்து தருக்கி னேனே.

மறுத்தானோர் வல்லரக்க னீரைந்து
முடியினொடு தோளுந் தாளும்
இறுத்தானை யெழின்முளரித் தவிசின்மிசை
யிருந்தான்றன் றலையி லொன்றை
அறுத்தானை யாரூரி லம்மானை
யாலால முண்டு கண்டம்
கறுத்தானைக் கருதாதே கரும்பிருக்க
விரும்புகடித் தெய்த்த வாறே.

திருச்சிற்றம்பலம்

## திருக்கழிப்பாலை பதிகம்

பண் - காந்தாரம் *

திருச்சிற்றம்பலம்

வனபவள வாய்திறந்து வானவர்க்குந்
தானவனே யென்கின் றாளாற்
சினபவளத் திண்டோண்மேற் சேர்ந்திலங்கு
வெண்ணீற்ற னென்கின் றாளால்
அனபவள மேகலையொ டப்பாலைக்
கப்பாலா னென்கின் றாளாற்
கனபவளஞ் சிந்துங் கழிப்பாலைச்
சேர்வானைக் கண்டாள் கொல்லோ.

வண்டுலவு கொன்றை வளர்புன்
சடையானே யென்கின் றாளால்
விண்டலர்ந்து நாறுவதோர் வெள்ளெருக்க
நாண்மலருண் டென்கின் றாளால்
உண்டயலே தோன்றுவதோ ருத்தரியப்
பட்டுடைய னென்கின் றாளாற்
கண்டயலே தோன்றுங் கழிப்பாலைச்
சேர்வானைக் கண்டாள் கொல்லோ.

பிறந்திளைய திங்களெம் பெம்மான்
முடிமேல தென்கின் றாளால்
நிறங்கிளருங் குங்குமத்தின் மேனி
யவனிறமே யென்கின் றாளால்
மறங்கிளர்வேற் கண்ணாண் மணிசேர்
மிடற்றவனே யென்கின் றாளாற்
கறங்கோத மல்குங் கழிப்பாலைச்
சேர்வானைக் கண்டாள் கொல்லோ.

* இதனையுஞ் சிலர் குறிஞ்சி யென்பர்.

இரும்பார்ந்த சூலத்த னேந்தியோர்
வெண்மழுவ னென்கின் றாளாற்
சுரும்பார் மலர்க்கொன்றைச் சுண்ணவெண்
ணீற்றவனே யென்கின் றாளாற்
பெரும்பால னாகியோர் பிஞ்ஞக
வேடத்த னென்கின் றாளாற்
கரும்பானல் பூக்குங் கழிப்பாலைச்
சேர்வானைக் கண்டாள் கொல்லோ.

பழியிலான் புகழுடையன் பானீற்ற
னேற்ற னென்கின் றாளால்
விழியுலாம் பெருந்தடங்கண் ணிரண்டல்ல
மூன்றுளவே யென்கின் றாளாற்
சுழியுலாம் வருகங்கை தோய்ந்த
சடையவனே யென்கின் றாளாற்
கழியுலாஞ் சூழ்ந்த கழிப்பாலைச்
சேர்வானைக் கண்டாள் கொல்லோ.

பண்ணார்ந்த வீணை பயின்ற
விரலவனே யென்கின் றாளால்
எண்ணார் புரமெரித்த வெந்தை
பெருமானே யென்கின் றாளாற்
பண்ணார் முழவதிரப் பாடலொ
டாடலனே யென்கின் றாளாற்
கண்ணார் பூஞ்சோலைக் கழிப்பாலைச்
சேர்வானைக் கண்டாள் கொல்லோ.

முதிருஞ் சடைமுடிமேன் மூழ்கு
மிளநாக மென்கின் றாளால்
அதுகண் டதனருகே தோன்று
மிளமதிய மென்கின் றாளாற்
சதுர்வெண் பளிக்குக் குழைகாதின்
மின்னிடுமே யென்கின் றாளாற்
கதிர்முத்தஞ் சிந்துங் கழிப்பாலைச்
சேர்வானைக் கண்டாள் கொல்லோ.

ஒரோத மோதி யுலகம்
பலிதிரிவா னென்கின் றாளால்
நீரோத மேற நிமிர்புன்
சடையானே யென்கின் றாளாற்
பாரோத மேனிப் பவள
மவனிறமே யென்கின் றாளாற்
காரோத மல்குங் கழிப்பாலைச்
சேர்வானைக் கண்டாள் கொல்லோ.

வானுலாந் திங்கள் வளர்புன்
சடையானே யென்கின் றாளால்
ஊனுலாம் வெண்டலைகொண் டூரூர்
பலிதிரிவா னென்கின் றாளாற்
றேனுலாங் கொன்றை திளைக்குந்
திருமார்ப னென்கின் றாளாற்
கானுலாஞ் சூழ்ந்த கழிப்பாலைச்
சேர்வானைக் கண்டாள் கொல்லோ.

அடர்ப்பரிய விராவணனை யருவரைக்கீ
ழடர்த்தவனே யென்கின் றாளாற்
சுடர்ப்பெரிய திருமேனிச் சுண்ணவெண்
ணீற்றவனே யென்கின் றாளால்
மடற்பெரிய வாலின்கீ ழறநால்வர்க்
கன்றுரைத்தா னென்கின் றாளாற்
கடற்கருவி சூழ்ந்த கழிப்பாலைச்
சேர்வானைக் கண்டாள் கொல்லோ.

திருச்சிற்றம்பலம்



## திருக்கச்சியேகம்பம்　　　　　　　பதிகம் ௭

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானைக் கரவார்பால்
விரவாடும் பெருமானை விடையேறும் வித்தகனை
அரவாடச் சடைதாழ வங்கையினி லனலேந்தி
இரவாடும் பெருமானை யென்மனத்தே வைத்தேனே.

தேனெய்க்குங் கிளிமழலை யுமைகேள்வன் செழும்பவளம்
தானொக்குந் திருமேனி தழலுருவாஞ் சங்கரனை
வானொக்கும் வளர்மதிசேர் சடையானை வானோர்க்கும்
ஏனோர்க்கும் பெருமானை யென்மனத்தே வைத்தேனே.

கைப்போது மலர்தூவிக் காதலித்து வானோர்கள்
முப்போது முடிசாய்த்துத் தொழநின்ற முதல்வனை
அப்போது மலர்தூவி யைம்புலனு மகத்தடக்கி
எப்போது மினியானை யென்மனத்தே வைத்தேனே.

அண்டமா யாதியா யருமறையொ டைம்பூதப்
பிண்டமா யுலகுக்கோர் மெய்ப்பொருளாம் பிஞ்ஞகனைத்
தொண்டர்தா மலர்தூவிச் சொன்மாலை புனைகின்ற
இண்டைசேர் சடையானை யென்மனத்தே வைத்தேனே.

ஆறேறு சடையானை யாயிரம்பே ரம்மானைப்
பாறேறு படுதலையிற் பலிகொள்ளும் பரம்பரனை
நீறேறு திருமேனி நின்மலனை நெடுந்தூவி
ஏறேறும் பெருமானை யென்மனத்தே வைத்தேனே.

தேசனைத் தேசங்க டொழநின்ற திருமாலால்
பூசனைப் பூசனைக ளுகப்பானைப் பூவின்கண்
வாசனை மலைநிலநீர் தீவளியா காசமாம்
ஈசனை யெம்மானை யென்மனத்தே வைத்தேனே.

கல்லானை நல்லானை நான்மறையோ டாறங்கம்
வல்லானை வல்லார்கண் மனத்துறையு மைந்தனைச்
சொல்லானைச் சொல்லார்ந்த பொருளானைத் துகளேதும்
இல்லானை யெம்மானை யென்மனத்தே வைத்தேனே.

விரித்தானை நால்வர்க்கு வெவ்வேறு வேதங்கள்
புரித்தானைப் பதஞ்சந்திப் பொருளுருவாம் புண்ணியனைத்
தரித்தானைக் கங்கைநீர் தாழ்சடைமேன் மதின்மூன்றும்
எரித்தானை யெம்மானை யென்மனத்தே வைத்தேனே. ௮

ஆகம்பத் தரவணையா னயனறிதற் கரியானைப்
பாகம்பெண் ணாண்பாக மாய்நின்ற பசுபதியை
மாகம்ப மறையோது மிறையானை மதிற்கச்சி
ஏகம்ப மேயானை யென்மனத்தே வைத்தேனே.

அடுத்தானை யுரித்தானை யருச்சுனற்குப் பாசுபதம்
கொடுத்தானைக் குலவரையே சிலையாகக் கூரம்பு
தொடுத்தானைப் புரமெரியச் சினமல்கு கயிலாயம்
எடுத்தானைத் தடுத்தானை யென்மனத்தே வைத்தேனே. ௰

திருச்சிற்றம்பலம்



பொது — பதிகம் ௮

சிவனெனுமோசை

## பண் - பியந்தைக்காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

சிவனெனுமோசையல்ல தறையோவுலகிற்
றிருநின்றசெம்மை யுளதே
அவனுமொரையமுண்ணி யதளாடையாவ
ததன்மேலொராட லரவம்

கவணளவுள்ள * வுண்கு கரிகாடுகோயில்
கலனுவதோடு கருதில்
அவனதுபெற்றிகண்டு மவனீர்மைகண்டு
மகநேர்வர்தேவ ரவரே.

விரிகதிர்ஞாயிறல்லர் மதியல்லர்வேத
விதியல்லர்விண்ணு நிலனும்
திரிதருவாயுவல்லர் செறுதீயுமல்லர்
தெளிநீருமல்லர் தெரியில்
அரிதருகண்ணியாளை யொருபாகமாக
வருள்காரணத்தில் வருவார்
எரியரவாரமார்ப ரிமையாருமல்ல
ரிமைப்பாருமல்ல ரிவரே.

தேய்பொடிவெள்ளைபூசி யதன்மேலோர்திங்க
டிலகம்பதித்த நுதலர்
காய்கதிர்வேலைநீல வொளிமாமிடற்றர்
கரிகாடர்காலோர் கழலர்
வேயுடனுடுதோளி யவள்விம்மவெய்ய
மழுவீசிவேழ வுரிபோர்த்
தேயிவராடுமாறு மிவள்காணுமாறு
மிதுதானிவர்க்கொ ரியல்பே.

வளர்பொறியாமைபுல்கி வளர்கோதைவைகி
வடிதோலுநூலும் வளரக்
கிளர்பொறிநாகமொன்று மிளிர்கின்றமார்பர்
கிளர்காடுநாடு மகிழ்வர் †
நளிர்பொறிமஞ்ஞையன்ன தளிர்போன்றுசாய
லவடோன்றுவாய்மை பெருகிக்
குளிர்பொறிவண்டுபாடு குழலாளொருத்தி
யுளள்போல்குலாவி யுடனே.

(பா - ம்,) * உள்கு.          † நாடு கிழவர்.

உறைவதுகாடுபோலு முரிதோலுடுப்பர்
விடையூர்வதோடு கலனு
இறையிவர்வாழும்வண்ண மிதுவேலுமீச
ரொருபாலிசைந்த தொருபால்
பிறைநுதல்பேதைமாத ருமையென்னுநங்கை
பிறழ்பாடநின்று பிணைவான்
அறைகழல்வண்டுபாடு மடிநீழலாணை
கடவாதமர ருலகே.

கணிவளர்வேங்கையோடு கடிதிங்கள்கண்ணி
கழல்கால்சிலம்ப வழகார்
அணிகிளராரவெள்ளை தவழ்சுண்ணவண்ண
வியலாரொருவ ரிருவர்
மணிகிளர்மஞ்ஞையால மழையாடுசோலை
மலையான்மகட்கு மிறைவர்
அணிகிளரன்னவண்ண மவள்வண்ணவண்ண
மவர்வண்ணவண்ண மழலே.

நகைவளர்கொன்றைதுன்று நகுவெண்டலையர்
நளிர்கங்கைதங்கு முடியர்
மிகைவளர்வேதகீத முறையோடும்வல்ல
கறைகொண்மணிசெய் மிடறர்
முகைவளர்கோதைமாதர் முனிபாடுமாறு
மெரியாடுமாறு மிவர்கைப்
பகைவளர்நாகம்வீசி மதியங்குமாறு
மிதுபோலுமீச ரியல்பே.

ஒளிவளர்கங்கைதங்கு மொளிமாலயன்ற
னுடல்வெந்துவீய சுடர்நீ
றணிகிளராரவெள்ளை தவழ்சுண்ணவண்ணர்
தமியாரொருவ ரிருவர்
களிகிளர்வேடமுண்டோர் கடமாவுரித்த
வுடைதோலுடுத்த கலனர்
அணிகிளரன்னதொல்லை யவள்பாகமாக
வெழில்வேத மோதுமவரே.

மலைமடமங்கையோடும் வடகங்கைநங்கை
மணவாளராகி மகிழ்வர்
தலைகலனாகவுண்டு தனியேதிரிந்து
தவவாணராகி முயல்வர்
விலையிலிசாந்தமென்று வெறிநீறுபூசி
விளையாடும்வேட விகிர்தர்
அலைகடல்வெள்ளமுற்று மலறக்கடைந்த
வழனஞ்சமுண்ட வவரே.

புதுவிரிபொன்செயோலை யொருகாதொர்காது
சுரிசங்கநின்று புரள
விதிவிதிவேதகீத மொருபாடுமோத
மொருபாடுமெல்ல நகுமால்
மதுவிரிகொன்றைதுன்று சடைபாகமாதர்
குழல்பாகமாக வருவர்
இதுவிவர்வண்ணவண்ண மிவள்வண்ணவண்ண
மெழில்வண்ணவண்ண மியல்பே. ௰

திருச்சிற்றம்பலம்



பொது பதிகம் ௧௧

திருவங்கமாலை

பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம்

தலையே நீவணங்காய் - தலை
மாலை தலைக்கணிந்து
தலையா லேபலி தேருந் தலைவனைத்
தலையே நீவணங்காய்.

கண்காள் காண்மின்களோ - கடல்
நஞ்சுண்ட கண்டன்றன்னை
எண்டோள் வீசிநின் றாடும்பி ரான்றன்னைக்
கண்காள் காண்மின்களோ.

செவிகாள் கேண்மின்களோ - சிவன்
எம்மிறை செம்பவள
எரிபோன் மேனிப்பி ரான்றிற மெப்போதும்
செவிகாள் கேண்மின்களோ.

மூக்கே நீமுரலாய் - முது
காடுறை முக்கணனை
வாக்கே நோக்கிய மங்கைம ணாளனை
மூக்கே நீமுரலாய்.

வாயே வாழ்த்துகண்டாய் - மத
யானை யுரிபோர்த்துப்
பேய்வாழ் காட்டகத் தாடும்பி ரான்றன்னை
வாயே வாழ்த்துகண்டாய்.

நெஞ்சே நீநினையாய் - நிமிர்
புன்சடை நின்மலனை
மஞ்சா டும்மலை மங்கைம ணாளனை
நெஞ்சே நீநினையாய்.

கைகாள் கூப்பித்தொழீர் - கடி
மாமலர் தூவிநின்று
பைவாய்ப் பாம்பரை யார்த்த பரமனைக்
கைகாள் கூப்பித்தொழீர்.

ஆக்கை யாற்பயனென் - னரன்
கோயில் வலம்வந்து
பூக்கையா லட்டிப் போற்றியென் னாதவிவ்
ஆக்கை யாற்பயனென்.

கால்க ளாற்பயனென் - கறைக்
கண்ட னுறைகோயில்
கோலக் கோபுரக் கோகர ணஞ்சூழாக்
கால்க ளாற்பயனென்.

உற்றா ராருளரோ - வுயிர்
கொண்டு போம்பொழுது
குற்றா லத்துறை கூத்தனல் லானமக்
குற்றா ராருளரோ. ௰

இறுமாந் திருப்பன்கொலோ - விசன்
பல்கணத் தெண்ணப்பட்டுச்
சிறுமா னேந்திதன் சேவடிக் கீழ்ச்சென்று*
இறுமாந் திருப்பன்கொலோ. ௧௧

தேடிக் கண்டுகொண்டேன் - திரு
மாலொடு நான்முகனும்
தேடித் தேடொணாத் தேவனை யென்னுளே
தேடிக் கண்டுகொண்டேன். ௧௨

திருச்சிற்றம்பலம்



## திருவதிகைவீரட்டானம் — பதிகம் ௰

திருக்கெடிலவாணர்

பண் - காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

முளைக்கதி ரிளம்பிறை மூழ்க வெள்ளநீர்
வளைத்தெழு சடையினர் மழலை வீணையர்
திளைத்ததோர் மான்மறிக் கையர் செய்யபொன்
கிளைத்துழித் தோன்றிடுங் கெடில வாணரே.

ஏறின ரேறினை யேழை தன்னொரு
கூறினர் கூறினர் வேத மங்கமும்
ஆறின ராறிடு சடையர் பக்கமும்
கீறின வுடையினர் கெடில வாணரே.

(பா - ம்.) * சென்றங்கு.

விடந்திகழ் கெழுதரு மிடற்றர் வெள்ளைநீ
றுடம்பழ கெழுதுவர் முழுதும் வெண்ணிலாப்
படர்ந்தழ கெழுதரு சடையிற் பாய்புனல்
கிடந்தழ கெழுதிய கெடில வாணரே.

விழுமணி யயிலெயிற் றம்பு வெய்யதோர்
கொழுமணி நெடுவரை கொளுவிக் கோட்டினார்
செழுமணி மிடற்றினர் செய்ய வெய்யதோர்
கெழுமணி யரவினர் கெடில வாணரே.

குழுவினர் தொழுதெழு மடியர் மேல்வினை
தழுவின கழுவுவர் பவள மேனியர்
மழுவினர் மான்மறிக் கையர் மங்கையைக்
கெழுவின யோகினர் கெடில வாணரே.

அங்கையி லனலெரி யேந்தி யாறெனும்
மங்கையைச் சடையிடை மணப்பர் மால்வரை
நங்கையைப் பாகமு நயப்பர் தென்றிசைக்
கெங்கைய தெனப்படுங் கெடில வாணரே.

கழிந்தவர் தலைகல னேந்திக் காடுறைந்
திழிந்தவ ரொருவரென் றெள்க வாழ்பவர்
வழிந்திழி மதுகர மிழற்ற மந்திகள்
கிழிந்ததே னுகர்தருங் கெடில வாணரே.

கிடந்தபாம் பருகுகண் டரிவை பேதுறக்
கிடந்தபாம் பவளையோர் மயிலென் றையுறக்
கிடந்தநீர்ச் சடைமிசைப் பிறையு மேங்கவே
கிடந்துதா னகுதலைக் கெடில வாணரே.

வெறியுறு விரிசடை புரள வீசியோர்
பொறியுறு புலியுரி யரைய தாகவும்
நெறியுறு குழலுமை பாக மாகவும்
கிறிபட வுழிதர்வர் கெடில வாணரே.

பூண்டதே ரரக்கனைப் பொருவின் மால்வரைத்
தூண்டுதோ ளவைபட வடர்த்த தாளினார்
ஈண்டுநீர்க் கமலவாய் மேதி பாய்தரக்
கீண்டுதேன் சொரிதருங் கெடில வாணரே.

திருச்சிற்றம்பலம்



பொது பதிகம் கக

## நமச்சிவாயத்திருப்பதிகம்

பண் - காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே.

பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை
ஆவினுக் கருங்கல மரனஞ் சாடுதல்
கோவினுக் கருங்கலங் கோட்ட மில்லது
நாவினுக் கருங்கல நமச்சி வாயவே.

விண்ணுற வடுக்கிய விறகின் வெவ்வழல்
உண்ணிய புகிலவை யொன்று மில்லையாம்
பண்ணிய வுலகினிற் பயின்ற பாவத்தை
நண்ணிநின் றறுப்பது நமச்சி வாயவே.

இடுக்கண்பட் டிருக்கினு மிரந்தி யாரையும்
விடுக்கிற் பிரானென்று வினவுவோ மல்லோம்
அடுக்கற்கீழ்க் கிடக்கினு மருளி னாமுற்ற
நடுக்கத்தைக் கெடுப்பது நமச்சி வாயவே.

வெந்தநீ றருங்கலம் விரதி கட்கெலாம்
அந்தணர்க் கருங்கல மருமறை யாறங்கம்
திங்களுக் கருங்கலந் திகழு நீண்முடி
நங்களுக் கருங்கல நமச்சி வாயவே.

சலமிலன் சங்கரன் சார்ந்த வர்க்கலால்
நலமில னாடொறு நல்கு வானலன்
குலமில ராகிலுங் குலத்துக் கேற்பதோர்
நலமிகக் கொடுப்பது நமச்சி வாயவே.

வீடினா ருலகினில் விழுமிய தொண்டர்கள்
கூடினா ரந்நெறி கூடிச் சென்றலும்*
ஓடினே னோடிச்சென் றுருவங் காண்டலும்
நாடினே னாடிற்று நமச்சி வாயவே.

இல்லக விளக்கது விருள்கெ டுப்பது
சொல்லக விளக்கது சோதி யுள்ளது
பல்லக விளக்கது பலருங் காண்பது
நல்லக விளக்கது நமச்சி வாயவே.

முன்னெறி யாகிய முதல்வன் முக்கணன்
தன்னெறி யேசர ணாத றிண்ணமே
அந்நெறி யேசென்றங் கடைந்த வர்க்கெலாம்
நன்னெறி யாவது நமச்சி வாயவே.

மாப்பிணை தழுவிய மாதொர் பாகத்தன்
பூப்பிணை திருந்தடி பொருந்தக் கைதொழ
நாப்பிணை தழுவிய நமச்சி வாயப்பத்
தேத்தவல் லார்தமக் கிடுக்க ணில்லையே.

திருச்சிற்றம்பலம்

(பா - ம்.) *கூடசமசென்றலும்.

**பதிக வரலாறு :**

சினமிக்குள்ள கொலைக்களிற்றை விட்டும் பதிகம்பாடி யாதொரு ஊறுபாடு மில்லாதிருந்த வாகீசத் திருவடிகளைப் பார்த்து மானமும் பொறாமையும் அச்சமும் மிகுந்த சமணர்கள் மீண்டும் பல்லவ அரசனை யடைந்து 'தருமசேனர் நமது சமயத்திற் பயின்ற மந்திரம் பாவனை முட்டி முதலிய நிலைகளாற் பிழைத்துக்கொண்டார். அவரைத் தொலைத் தாலன்றி நீயும் நாங்களும் பிழைக்க இல்லோம்' என்று கூற, அரசன் 'நமது தொல்லைச் சமய மழித்து நமக்கும் துயரம் விளைத்தவன் றன்னை யாது செய்வ'தென்று கேட்டான். அதற்குத் தாங்கள் எண்ணிய சூழ்ச்சி யையே முடிக்குந் தொழிலுடையவர்களாய அருகர் 'அவரைக் கல்லு டன் கயிற்றினாற் பிணித்துக் கடலிற் பாய்ச்சுக' என்று கூற, அரசனும் அவ்வாறே செய்யும்படி பணித்தான். கொடியவர்களாகிய அருகந்தர்க ளும் அப்படியே முடித்தார்கள். சிந்தனை உறைப்புடைய மெய்த்தொண்ட ராகிய வாகீசர் 'எது எப்பரிசாயினுமாகுக யான் என் எந்தையை ஏத்து வன்' என்று திருவைந்தெழுத்தைத் துதிக்கத் தொடங்குபவராய் 'சொற் றுணை வேதியன்' என்னு மிப்பதிகத்தைப் பாடிய வளவில் அவரைப் பிணித்த பாசங்கள் அற அவரை ஏற்றிய கல்லே தெப்பமாக அதன் மீது மிதந்தருளினர். முன் மிக்கநோன்பு இயற்றினவனாகிய வருணனும் அவரைத் தன் முதுகின்மீது சுமந்து கொண்டுவந்து திருப்பாதிரிப்புலி யூருக்கு அருகே கரையேற விட்டான். நாயனாரும் பல்லாயிரந் திருக் கூட்டத்தினருடன் அரவொலியினிடையே திருக்கோயிலுக் கெழுந் தருளினர்.



## திருப்பழனம்                                                    பதிகம் கஉ

பண் - பழந்தக்கராகம்

திருச்சிற்றம்பலம்

சொன்மாலை பயில்கின்ற குயிலினங்காள் சொல்லீரே
பன்மாலை வரிவண்டு பண்மிழற்றும் பழனத்தான்
முன்மாலை நகுதிங்கண் முகிழ்விளங்கு முடிச்சென்னிப்
பொன்மாலை மார்பனென் புதுநலமுண் டிகழ்வானோ. க

கண்டகங்காண் முண்டகங்காள் கைதைகா ளெய்தல்காள்
பண்டரங்க வேடத்தான் பாட்டோவாப் பழனத்தான்
வண்டுலாந் தடமூழ்கி மற்றவனென் றளிர்வண்ணம்
கொண்டநா ளானறிவான் குறிக்கொள்ளா தொழிவானே.

மனைக்காஞ்சி யிளங்குருகே மறந்தாயோ மதமுகத்த
பனைக்கைம்மா வுரிபோர்த்தான் பலர்பாடும் பழனத்தான்
நினைக்கின்ற நினைப்பெல்லா முரையாயோ நிகழ்வண்டே
சுனைக்குவளை மலர்க்கண்ணாள் சொற்றூதாய்ச் சோர்வாளோ. ௩

புதியையா யினியையாம் பூந்தென்றால் புறங்காடு
பதியாவ திதுவென்று பலர்பாடும் பழனத்தான்
மதியாதார் வேள்விதனை மதித்திட்ட மதிகங்கை
விதியாள னென்னுயிர்மேல் விளையாடல் விடுத்தானே.

மண்பொருந்தி வாழ்பவர்க்கு மாதீர்த்த வேதியர்க்கும்
விண்பொருந்து தேவர்க்கும் வீடுபேறாய் நின்றானைப்
பண்பொருந்த விசைபாடும் பழனஞ்சே ரப்பனையென்
கண்பொருந்தும் போதத்துங் கைவிடநான் கடவேனே.

பொங்கோத மால்கடலிற் புறம்புறம்போ யிரைதேரும்
செங்கால்வெண் மடநாராய் செயற்படுவ தறியேனான்
அங்கோல வளைகவர்ந்தா னணிபொழில்சூழ் பழனத்தான்
தங்கோல நறுங்கொன்றைத் தாரருளா தொழிவானே.

துணையார முயங்கிப்போய்த் துறைசேரு மடநாராய்
பணையார வாரத்தான் பாட்டோவாப் பழனத்தான்
கணையார விருவிசும்பிற் கடியரணம் பொடிசெய்த
இணையார மார்பனென் னெழினலமுண் டிகழ்வானே.

கூவைவாய் மணிவரன்றிக் கொழித்தோடுங் காவிரிப்பூம்
பாவைவாய் முத்திலங்கப் பாய்ந்தாடும் பழனத்தான்
கோவைவாய் மலைமகள்கோன் கொல்லேற்றின் கொடியாடைப்
பூவைகாண் மழலைகாள் போகாத பொழுதுளதே. ௮

புள்ளிமான் பொறியரவம் புள்ளுயர்த்தான் மணிநாகப்
பள்ளியான் றொழுதேத்த விருக்கின்ற பழனத்தான்
உள்ளுவார் வினைதீர்க்கு மென்றுரைப்ப ருலகெல்லாம்
கள்ளியே னானிவர்க்கென் கனவளையுங் கடவேனோ.

வஞ்சித்தென் வளைகவர்ந்தான் வாரானே யாயிடினும்
பஞ்சிக்காற் சிறகன்னம் பரந்தார்க்கும் பழனத்தான்
அஞ்சிப்போய்க் கலிமெலிய வழலோம்பு மப்பூதி
குஞ்சிப்பூ வாய்நின்ற சேவடியாய் கோடியையே.

திருச்சிற்றம்பலம்

---

**பதிக வரலாறு:**

அப்பூதியடிகணாயனார் தமது பிள்ளையாகிய மூத்த திருநாவுக்கரசு நஞ்சகற்றிய திருப்பதிகத்தினால் எழுந்ததைக் கண்டும் சிறிதும் மகிழாது வாகீசப் பெருந்தகையார் திருவுணவு செயாதிருந்த வதற்கே பெரிதுந் தளர்வெய்த அடிகள் அவரது திருவகத்தில் உணவு கொண்டு அவரை மகிழ்வித்தருளினார். பின்னும் அவரது அன்புக்கு இயைந்து ஆண்டுச் சின்னாட்டங்கிய அடிகள் பின்னர் அவரோடுந் திருப்பழனத்தை யடைந்து இறைவனைக் கண்டு தீந்தமிழின் றொடைமாலை 'சொன்மாலை' என்றெடுத்து அப்பதிகத்திறுதித் திருப்பாட்டில் புரிசடையார் பொற் கழற்கீழ் அடைமாலைச் சீலமுடை யப்பூதியடிகடமை 'அஞ்சிப்போய்க் கலிமெலிய வழலோம்பு மப்பூதிகுஞ்சிப் பூவாய்நின்ற சேவடியாய்' என்று நடைமாணச் சிறப்பித்துப் பாடியருளினார்.



## திருவையாறு

பதிகம் க௫

பண் - பழந்தக்கராகம்

திருச்சிற்றம்பலம்

விடகிலே னடிநாயேன் வேண்டியக்கா லியாதொன்றும்
இடகிலே னமணர்கட மறவுரைகேட் டலமந்தேன்
தொடர்கின்றே னுன்னுடைய தூமலர்ச்சே வடிகாண்பான்
அடைகின்றே னையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே.

செம்பவளத் திருவுருவர் திகழ்சோதி குழைக்காதர்
கொம்பமருங் கொடிமருங்குற் கோல்வளையா ளொருபாகர்
வம்பவிழு மலர்க்கொன்றை வளர்சடைமேல் வைத்துகந்த
அம்பவள வையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே.

நணியானே சேயானே நம்பானே செம்பொன்னின்
துணியானே தோலானே சுண்ணவெண் ணீற்றானே
மணியானே வானவர்க்கு மருந்தாகிப் பிணிதீர்க்கும்
அணியானே யையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே.

ஊழித்தீ யாய்நின்றா யுள்குவா ருள்ளத்தாய்
வாழித்தீ யாய்நின்றாய் வாழ்த்துவார் வாயானே
பாழித்தீ யாய்நின்றாய் படர்சடைமேற் பனிமதியம்
ஆழித்தீ யையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே.

சடையானே சடையிடையே தவழுந்தண் மதியானே
விடையானே விடையேறிப் புரமெரித்த வித்தகனே
உடையானே யுடைதலைகொண் டூருருண் பலிக்குழலும்
அடையானே யையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே.

நீரானே தீயானே நெதியானே கதியானே
ஊரானே யுலகானே யுடலானே யுயிரானே
பேரானே பிறைசூடி பிணிதீர்க்கும் பெருமானென்
றாராத வையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே.

கண்ணானாய் மணியானாய் கருத்தானா யருத்தானாய்
எண்ணானா யெழுத்தானா யெழுத்தினுக்கோ ரியல்பானாய்
விண்ணானாய் விண்ணிடையே புரமெரித்த வேதியனே
அண்ணான வையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே.

மின்னானா யுருவானாய் வேதத்தின் பொருளானாய்
பொன்னானாய் மணியானாய் பொருகடல்வாய் முத்தானாய்
நின்னானா ரிருவர்க்குங் காண்பரிய நிமிர்சோதி
அன்னானே யையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே.

## திருக்கண்டியூர்வீரட்டம் பதிகம் ௯௪

### திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

வானவர் தானவர் வைகன் மலர்கொணர்ந் திட்டிறைஞ்சித்
தானவர் மால்பிர மன்னறி யாத தகைமையினன்
ஆனவ னாதிபு ராணனன் றோடிய பன்றியெய்த
கானவ னைக்கண்டி யூரண்ட வாணர் தொழுகின்றதே. க

வான மதியமும் வாளர வும்புன லோடுசடைத்
தான மதுவென வைத்துழல் வான்றழல் போலுருவன்
கான மறியொன்று கையுடை யான்கண்டி யூரிருந்த
ஊனமில் வேத முடையனை நாமடி யுள்குவதே. உ

பண்டங் கறுத்ததோர் கையுண் யான்படைத் தான்றலையை
உண்டங் கறுத்தது மூன்றோடு நாடவை தானறியும்
கண்டங் கறுத்த மிடறுடை யான்கண்டி யூரிருந்த
தொண்டர் பிரானைக்கண் டீரண்ட வாணர் தொழுகின்றதே. ௩

முடியின்முற் றாததொன் றில்லையெல் லாமுடன் றானுடையான்
கொடியு முற்றவ்விடை யேறியொர் கூற்றொரு பாலுடையான்
கடியமுற் றவ்வினை நோய்களை வான்கண்டி யூரிருந்தான்
அடியுமுற் றார்தொண்ட ரில்லைகண் டீரண்ட வானவரே.

பற்றியொ ரானையு ரித்தபி ரான்பவ ளத்திரள்போல்
முற்றும ணிந்ததோர் நீறுடை யான்முன்ன மேகொடுத்த
கற்றங் குடையவன் றானறி யான்கண்டி யூரிருந்த
குற்றமில் வேத முடையானை யாமண்டர் கூறுவதே. ௫

போர்ப்பனை யானையு ரித்தபி ரான்பொறி வாயரவம்
சேர்ப்பது வானத் திரைகடல் சூழுல கம்மிதனைக்
காப்பது காரண மாகக்கொண் டான்கண்டி யூரிருந்த
கூர்ப்புடை யொள்வாண் மழுவனை யாமண்டர் கூறுவதே.

அட்டது காலனை யாய்ந்தது வேதமா றங்கமன்று
சுட்டது காமனைக் கண்ணாத னாலே தொடர்ந்தெரியக்
கட்டவை மூன்றுமெ ரித்தபி ரான்கண்டி யூரிருந்த
குட்டமுன் வேதப் படையனை யாமண்டர் கூறுவதே. எ

அட்டு மொலிநீ ரணிமதி யும்மல ரானவெல்லாம்
இட்டுப் பொதியுஞ் சடைமுடி யானிண்டை மாலையங்கைக்
கட்டு மரவது தானுடை யான்கண்டி யூரிருந்த
கொட்டும் பறையுடைக் கூத்தனை யாமண்டர் கூறுவதே. அ

மாய்ந்தன தீவினை மங்கின நோய்கண் மறுகிவிழத்
தேய்ந்தன பாவஞ் செறுக்ககில் லாநம்மைச் செற்றநங்கைக்
காய்ந்தபி ரான்கண்டி யூரெம் பிரானங்க மாறினையும்
ஆய்ந்தபி ரானல்ல னோவடி யேனையாட் கொண்டவனே. கூ

மண்டி மலையை யெடுத்துமத் தாக்கியவ் வாசுகியைத்
தண்டி யமரர் கடைந்த கடல்விடங் கண்டருளி
உண்டபி ரானஞ் சொளித்தபி ரானஞ்சி யோடிநண்ணக்
கண்டபி ரானல்ல னோகண்டி யூரண்ட வானவனே. ௰

**திருச்சிற்றம்பலம்**

**இது சோழநாட்டிலுள்ளது.**

**இறைவன் - வீரட்டானேசுரர்; இறைவி - மங்களநாயகி.**



## திருப்பாதிரிப்புலியூர் பதிகம் கூ௬

### திருவிருத்தம்

**திருச்சிற்றம்பலம்**

ஈன்றாளு மாயெனக் கெந்தையு மாயுடன் றோன்றினராய்
மூன்றா யுலகம் படைத்துகந் தான்மனத் துள்ளிருக்க
ஏன்றா னிமையவர்க் கன்பன் றிருப்பா திரிப்புலியூர்த்
தோன்றாத் துணையா யிருந்தனன் றன்னடி யோங்களுக்கே. க

பற்றாய் நினைந்திடப் போதுநெஞ் சேயிந்தப் பாரைமுற்றும்
சுற்றா யலைகடன் மூடினுங் கண்டேன் புகனமக்கு
உற்றா னுமையவட் கன்பன் றிருப்பா திரிப்புலியூர்
முற்றா முளைமதிக் கண்ணியி னான்றன மொய்கழலே. ௨

விடையான் விரும்பியென் னுள்ளத் திருந்தா னினிநமக்கிங்
கடையா வவல மருவினை சாரா நமனையஞ்சோம்
புடையார் கமலத் தயன்போல் பவர்பா திரிப்புலியூர்
உடையா னடிய ரடியடி யோங்கட் கரியதுண்டே. ௩

மாயமெல் லாமுற்ற விட்டிரு ளீங்க மலைமகட்கே
நேயநிலாவ விருந்தா னவன்றன் றிருவடிக்கே
தேயமெல் லாநின் றிறைஞ்சுந் திருப்பா திரிப்புலியூர்
மேயநல் லான்மலர்ப் பாதமென் சிந்தையு ணின்றனவே.

வைத்த பொருணமக் காமென்று சொல்லி மனத்தடைத்துச்
சித்த மொருக்கிச் சிவாய நமவென் றிருக்கினல்லால்
மொய்த்த கதிர்மதி போல்வா ரவர்பா திரிப்புலியூர்
அத்த னருள்பெற லாமோ வறிவிலாப் பேதைநெஞ்சே. ரு

கருவாய்க் கிடந்துன் கழலேநி னையுங் கருத்துடையேன்
உருவாய்த் தெரிந்துன்ற னாமம் பயின்றே னுனதருளால்
திருவாய்ப் பொலியச் சிவாய நமவென்று நீறணிந்தேன்
தருவாய் சிவகதி நீபா திரிப்புலி யூரரனே. சா

எண்ணா தமர ரிரக்கப் பரவையு ணஞ்சையுண்டாய்
திண்ணா ரசுரர் திரிபுரந் தீயெழச் செற்றவனே
பண்ணார்ந் தமைந்த பொருள்கள் பயில்பா திரிப்புலியூர்க்
கண்ணார் நுதலாய் கழனங் கருத்தி லுடையனவே.

புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா வுன்னடி யென்மனத்தே
வழுவா திருக்க வரந்தர வேண்டுமிவ் வையகத்தே
தொழுவார்க் கிரங்கி யிருந்தருள் செய்பா திரிப்புலியூர்ச்
செழுநீர்ப் புனற்கங்கை செஞ்சடை மேல்வைத்த தீவண்ணனே.

மண்பாத லம்புக்கு மால்கடன் மூடிமற் றேழுலகும்
விண்பா றிசைகெட் டிருசுடர் வீழினு மஞ்சனெஞ்சே
திண்பா னமக்கொன் று கண்டோந் திருப்பா திரிப்புலியூர்க்
கண்பாவு நெற்றிக் கடவுட் சுடரான் கழலிணையே.

திருந்தா வமணர்தந் தீநெறிப் பட்டுத் திகைத்துமுத்தி
தருந்தா ளிணைக்கே சரணம் புகுந்தேன் வரையெடுத்த
பொருந்தா வரக்க னுடனெரித் தாய்பா திரிப்புலியூர்
இருந்தா யடியே னினிப்பிற வாமல்வந் தேன்றுகொள்ளே. ய

திருச்சிற்றம்பலம்

இது நடுநாட்டிலுள்ளது.

இறைவன் - தோன்றாத்துணையீசர்; இறைவி - தோகையம்பிகையம்மை.





திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

வான்சொட்டச் சொட்டநின் றட்டும் வளர்மதி யோடயலே
தேன்சொட்டச் சொட்டநின் றட்டுந் திருக்கொன்றை சென்னிவைத்தீர்
மான்பெட்டை நோக்கி மணாளீர் மணிநீர் மிழலையுளீர்
நான்சட்ட வும்மை மறக்கினு மென்னைக் குறிக்கொண்மினே. க

அந்தமு மாதியு மாகிநின் றீரண்ட மெண்டிசையும்
பந்தமும் வீடும் பரப்புகின் றீர்பசு வேற்றுகந்தீர்
வெந்தழ லோம்பு மிழலையுள் ளீரென்னைத் தென்றிசைந்தே
உந்திடும் போது மறக்கினு மென்னைக் குறிக்கொண்மினே. உ

அலைக்கின்ற நீர்நிலங் காற்றன லம்பர மாகிநின்றீர்
கலைக்கன்று சேருங் கரத்தீர் கலைப்பொரு ளாகிநின்றீர்
விலக்கின்றி நல்கு மிழலையு ளீர்மெய்யிற் கையொடுகால்
குலைக்கின்று நும்மை மறக்கினு மென்னைக் குறிக்கொண்மினே.

தீத்தொழி லான்றலை தீயிலிட் டுச்செய்த வேள்விசெற்றீர்
பேய்த்தொழி லாட்டியைப் பெற்றுடை யீர்பிடித் துத்திரியும்
வேய்த்தொழி லாளர் மிழலையுள் ளீர்விக்கி யஞ்செழுத்தும்
ஓத்தொழிந் தும்மை மறக்கினு மென்னைக் குறிக்கொண்மினே.

தோட்பட்ட நாகமுஞ் சூலமுஞ் சுற்றியும் பத்திமையால்
மேற்பட்ட வந்தணர் வீழியு மென்னையும் வேறுடையீர்
நாட்பட்டு வந்து பிறந்தே னிறக்க நமன்றமர்தம்
கோட்பட்டு நும்மை மறக்கினு மென்னைக் குறிக்கொண்மினே.

கண்டியிற் பட்ட கழுத்துடை யீர்கரி காட்டிலிட்ட
பண்டியிற் பட்ட பரிகலத் தீர்பதி வீழிகொண்டீர்
உண்டியிற் பட்டினி நோயி லுறக்கத்தி லும்மையைவர்
கொண்டியிற் பட்டு மறக்கினு மென்னைக் குறிக்கொண்மினே. சு

தோற்றங்கண் டான்சிர மொன்றுகொண் டீர்தூய வெள்ளெருத்தொன்
றேற்றங்கொண் டீரெழில் வீழி மிழலை யிருக்கைகொண்டீர்
சீற்றங்கொண் டென்மேற் சிவந்ததொர் பாசத்தால் வீசியவெங்
கூற்றங்கண் டும்மை மறக்கினு மென்னைக் குறிக்கொண்மினே. எ

சுழிப்பட்ட கங்கையுந் திங்களுஞ் சூடிச்சொக் கம்பயின்றீர்
பழிப்பட்ட பாம்பரைப் பற்றுடை யீர்படர் தீப்பருக
விழிப்பட்ட காமனை விட்டீர் மிழலையுள் ளீர்பிறவிச்
சுழிப்பட்டு நும்மை மறக்கினு மென்னைக் குறிக்கொண்மினே. அ

பிள்ளையிற் பட்ட பிறைமுடி யீர்மறை யோதவல்லீர்
வெள்ளையிற் பட்டதொர் நீற்றீர் விரிநீர் மிழலையுள்ளீர்
நள்ளையிற் பட்டைவர் நக்கரைப் பிக்க நமன்றமர்தம்
கொள்ளையிற் பட்டு மறக்கினு மென்னைக் குறிக்கொண்மினே. கூ

கறுக்கொண் டரக்கன் கயிலையைப் பற்றிய கையுமெய்யும்
நெறுக்கென் றிறச்செற்ற சேவடி யாற்கூற்றை நீறுசெய்தீர்
வெறிக்கொன்றை மாலை முடியீர் விரிநீர் மிழலையுள்ளீர்
இறக்கின்று நும்மை மறக்கினு மென்னைக் குறிக்கொண்மினே. ய

திருச்சிற்றம்பலம்

**இது சோழநாட்டிலுள்ளது.**

**இறைவன் - வீழியழகர்; இறைவி - சுந்தரகுசாம்பிகை.**

திருச்சத்திமுற்றம் பதிகம் ௬எ

## திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

கோவாய் முடுகி யடுதிறற் கூற்றங் குமைப்பதன்முன்
பூவா ரடிச்சுவ டென்மேற் பொறித்துவை போகவிடில்
மூவா முழுப்பழி மூடுங்கண் டாய்முழங் குந்தழற்கைத்
தேவா திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. ௧

காய்ந்தா யனங்க னுடலம் பொடிபடக் காலனைமுன்
பாய்ந்தா யுயிர்செகப் பாதம் பணிவார்தம் பல்பிறவி
ஆய்ந்தாய்ந் தறுப்பா யடியேற் கருளாயுன் னன்பர்சிந்தை
சேர்ந்தாய் திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. ௨

பொத்தார் குரம்பை புகுந்தைவர் நாளும் புகலழிப்ப
மத்தார் தயிர்போன் மறுகுமென் சிந்தை மறுக்கொழிவி
அத்தா வடியே னடைக்கலங் கண்டா யமரர்கடம்
சித்தா திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. ௩

நில்லாக் குரம்பை நிலையாக் கருதியிந் நீணிலத்தொன்
றல்லாக் குழிவீழ்ந் தயர்வுறு வேனைவந் தாண்டுகொண்டாய்
வில்லேர் புருவத் துமையாள் கணவா விடிற்கெடுவேன்
செல்வா திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. ௪

கருவுற் றிருந்துன் கழலே நினைந்தேன் கருப்புவியில்
தெருவிற் புகுந்தேன் றிகைத்தடி யேனைத் திகைப்பொழிவி
உருவிற் றிகழு முமையாள் கணவா விடிற்கெடுவேன்
திருவிற் பொலிசத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. ௫

வெம்மை நமன்றமர் மிக்கு விரவி விழுப்பதன்முன்
இம்மையுன் றாளென்றன் னெஞ்சத் தெழுதிவை யீங்கிகழில்
அம்மை யடியேற் கருளுதி யென்பதிங் காரறிவார்
செம்மை தருசத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே.

விட்டார் புரங்க ளொருநொடி வேவவொர் வெங்கணையால்
சுட்டாயென் பாசத் தொடர்பறுத் தாண்டுகொ டும்பிபம்பும்
மட்டார் குழலி மலைமகள் பூசை மகிழ்ந்தருளும்
சிட்டா திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. ௭

இகழ்ந்தவன் வேள்வி யழித்திட் டிமையோர் பொறையிரப்ப
நிகழ்ந்திட வன்றே விசயமுங் கொண்டது நீலகண்டா
புகழ்ந்த வடியேன்றன் புன்மைக டீரப் புரிந்துநல்காய்
திகழ்ந்த திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. ௮

தக்கார்வ மெய்திச் சமண்டவிர்ந் துன்றன் சரண்புகுந்தேன்
எக்காத லெப்பய னுன்றிற மல்லா லெனக்குளதே
மிக்கார் தில்லையுள் விருப்பா மிகவட மேருவென்னும்
திக்கா திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. ௯

பொறித்தே ரரக்கன் பொருப்பெடுப் புற்றவன் பொன்முடிதோள்
இறத்தா ளொருவிர லூன்றிட் டலற விரங்கியொள்வாள்
குறித்தே கொடுத்தாய் கொடியேன் செய்குற்றக் கொடுவினைநோய்
செறுத்தாய் திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. ௰

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - சிவக்கொழுந்தீசர்; இறைவி - பெரியநாயகி.



## திருநல்லூர் பதிகம் ௯௮

### திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

அட்டுமி னில்பலி யென்றென் றகங்கடை தோறும்வந்து
மட்டவி ழுங்குழ லார்வளை கொள்ளும்வ கையென்கொலோ
கொட்டிய பாணி யெடுத்திட்ட பாதமுங் கோளரவும்
நட்டநின் றாடிய நாதர்நல் லூரிடங் கொண்டவரே.

பெண்ணிட்டம் பண்டைய தன்றிவை பெய்பலிக் கென்றுழல்வார்
நண்ணிட்டு வந்து மனைபுகுந் தாருநல் லூரகத்தே
பண்ணிட்ட பாடல ராடல ராய்ப்பற்றி நோக்கிநின்று
கண்ணிட்டுப் போயிற்றுக் காரண முண்டு கறைக்கண்டரே. உ

படவே ரரவல்குற் பாவைநல் லீர்பக லேயொருவர்
இடுவா ரிடைப்பலி கொள்பவர் போலவந் தில்புகுந்து
நடவா ரடிக ணடம்பயின் றாடிய கூத்தர்கொலோ
வடபாற் கயிலையுந் தென்பானல் லூருந்தம் வாழ்பதியே. ங

செஞ்சுடர்ச் சோதிப் பவளத் திரடிகழ் முத்தனைய
நஞ்சணி கண்டனல் லூருறை நம்பனை நானொருகால்
துஞ்சிடைக் கண்டு கனவின் றலைத்தொழு தேற்கவன்றான்
நெஞ்சிடை நின்றக லான்பல காலமு நின்றனனே. ச

வெண்மதி சூடி விளங்கநின் றானைவிண் ணோர்கடொழ
நண்ணில யத்தொடு பாடல றாதநல் லூரகத்தே
திண்ணில யங்கொண்டு நின்றான் றிரிபுர மூன்றெரித்தான்
கண்ணுளு நெஞ்சத் தகத்துளு முளகழற் சேவடியே. ரு

தேற்றப் படத்திரு நல்லூ ரகத்தே சிவனிருந்தால்
தோற்றப் படச்சென்று கண்டுகொள் வார்தொண்டர் துன்மதியால்
ஆற்றிற் கெடுத்துக் குளத்தினிற் றேடிய வாதரைப்போல்
காற்றிற் கடுத்துல கெல்லாந் திரிதர்வர் காண்பதற்கே. சு

நாட்கொண்ட தாமரைப் பூத்தடஞ் சூழ்ந்தநல் லூரகத்தே
கீட்கொண்ட கோவணங் காவென்று சொல்லிக் கிறிபடத்தான்
வாட்கொண்ட நோக்கி மனைவியொடு மங்கோர் வாணிகனை
ஆட்கொண்ட வார்த்தை யுரைக்குமன் றேயிவ் வகலிடமே. எ

அறைமல்கு பைங்கழ லார்க்கநின் றானணி யார்சடைமேல்
நறைமல்கு கொன்றையந் தாருடை யானுநல் லூரகத்தே
பறைமல்கு பாடல னாடல னாகிப் பரிசழித்தான்
பிறைமல்கு செஞ்சடை தாழநின் றாடிய பிஞ்ஞகனே. அ

மன்னிய மாமறை யோர்மகிழ்ந் தேத்த மருவியெங்கும்
துன்னிய தொண்டர்க ளின்னிசை பாடித் தொழுதுநல்லூர்க்
கன்னியர் தாமுங் கனவிடை யுன்னிய காதலரை
அன்னிய ரற்றவ ரங்கண னேயரு ணல்கென்பரே. கூ

திருவமர் தாமரை சீர்வளர் செங்கழு நீர்கொணெய்தல்
குருவமர் கோங்கங் குராமகிழ் சண்பகங் கொன்றைவன்னி
மருவமர் நீள்கொடி மாட மலிமறை யோர்கணல்லூர்
உருவமர் பாகத் துமையவள் பாகனை யுள்குதுமே. ய

செல்லோ கொடியன் சிவன்பெருங் கோயில் சிவபுரமும்
வல்லேன் புகவு மதில்சூ ழிலங்கையர் காவலனைக்
கல்லார் முடியொடு தோளிறச் செற்ற கழலடியான்
நல்லூ ரிருந்தபி ரானல்ல னேநம்மை யாள்பவனே. கக

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - பெரியவாண்டவர்; இறைவி - பருவதசுந்தரி.



## திருவையாறு பதிகம் கூகூ

### திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

அந்திவட் டத்திங்கட் கண்ணிய னையா றமர்ந்துவந்தென்
புந்திவட் டத்திடைப் புக்குநின் றானையும் பொய்யென்பனோ
சிந்திவட் டச்சடைக் கற்றை யலம்பச் சிறிதலர்ந்த
நந்திவட் டத்தொடு கொன்றை வளாவிய நம்பனையே. க

பாடகக் கால்கழற் கால்பரி திக்கதி ருக்கவந்தி
நாடகக் கானங்கை முன்செங்க ணேனத்தின் பின்னடந்த
காடகக் கால்கணங் கைதொழுங் காலெங்க ணையநின்றகால்
ஆடகக் காலரி மான்றேர் வலவனை யாற்றனவே. உ

திருச்சிற்றம்பலம்

# திருக்கச்சியேகம்பம் பதிகம் ௱

## திருவிருத்தம்

### திருச்சிற்றம்பலம்

ஓதுவித் தாய்முன் னறவுரை காட்டி யமணரொடே
காதுவித் தாய்கட்ட நோய்பிணி தீர்த்தாய் கலந்தருளிப்
போதுவித் தாய்நின் பணிபிழைக் கிற்புளி யம்வளாரால்
மோதுவிப் பாயுகப் பாய்முனி வாய்கச்சி யேகம்பனே. ௧

எத்தைக்கொண் டெத்தகை யேழை யமணொ டிசைவித்தெனைக்
கொத்தைக்கு மூங்கர்வழி காட்டுவித் தென்னைக் கோகுசெய்தாய்
முத்திற் றிரளும் பளிங்கினிற் சோதியு மொய்பவளத்
தொத்தினை யேய்க்கும் படியாய் பொழிற்கச்சி யேகம்பனே. ௨

மெய்யம்பு கோத்த விசயனொ டன்றொரு வேடுவனாய்ப்
பொய்யம்பெய் தாவ மருளிச்செய் தாய்புர மூன்றெரியக்
கையம்பெய் தாய்நுன் கழலடி போற்றாக் கயவர்நெஞ்சில்
குய்யம்பெய் தாய்கொடி மாமதில் சூழ்கச்சி யேகம்பனே. ௩

குறிக்கொண் டிருந்துசெந் தாமரை யாயிரம் வைகல்வைகல்
நெறிப்பட வின்டை புனைகின்ற மாலை நிறையழிப்பான்
கறைக்கண்ட நீயொரு பூக்குறை வித்துக்கண் சூல்விப்பதே
பிறைத்துண்ட வார்சடை யாய்பெருங் காஞ்சியெம் பிஞ்ஞகனே.

உரைக்குங் கழிந்திங் குணர்வரி யானுள்கு வார்வினையைக்
கரைக்கு மெனக்கை தொழுவதல் லாற்கதி ரோர்களெல்லாம்
விரைக்கொண் மலரவன் மாலெண் வசுக்களே காதசர்கள்
இரைக்கு மமிர்தர்க் கறியவொண் ணானெங்க ளேகம்பனே. ௫

கருவுற்ற நாண்முத லாகவுன் பாதமே காண்பதற்கு
உருகிற்றெ னுள்ளமு நானுங் கிடந்தலந் தெய்த்தொழிந்தேன்
திருவொற்றி யூரா திருவால வாயா திருவாரூரா
ஒருபற்றி லாமையுங் கண்டிரங் காய்கச்சி யேகம்பனே.

அரியய னிந்திரன் சந்திரா தித்த ரமரரெல்லாம்
உரியநின் கொற்றக் கடைத்தலை யாருணங் காக்கிடந்தார்
புரிதரு புன்சடைப் போக முனிவர் புலம்புகின்றார்
எரிதரு செஞ்சடை யேகம்ப வென்னோ திருக்குறிப்பே. எ

பாம்பரைச் சேர்த்திப் படருஞ் சடைமுடிப் பால்வண்ணனே
கூம்பலைச் செய்த கரதலத் தன்பர்கள் கூடிப்பன்னாள்
சாம்பரைப் பூசித் தரையிற் புரண்டுநின் றாள்சரணென்
றேம்பலிப் பார்கட் கிரங்குகண் டாய்கச்சி யேகம்பனே. அ

ஏன்றுகொண் டாயென்னை யெம்பெரு மானினி யல்லமென்னில்
சான்றுகண் டாயிவ் வுலகமெல் லாந்தனி யேனென்றென்னை
ஊன்றிநின் றாரைவர்க் கொற்றிவைத் தாய்பின்னை யொற்றியெல்லாம்
சோன்றுகொண் டாய்கச்சி யேகம்பமேய சுடர்வண்ணனே. கூ

உந்திநின் றாருன்ற னோலக்கச் சூளைகள் வாய்தல்பற்றித்
துன்றிநின் றார்தொல்லை வானவ ரீட்டம் பணியறிவான்
வந்துநின் றாரய னுந்திரு மாலு மதிற்கச்சியாய்
இந்தநின் றோமினி யெங்ஙன மோவந் திறைஞ்சுவதே. ய

திருச்சிற்றம்பலம்

இது தொண்டைநாட்டிலுள்ளது.

இறைவன் - ஏகாம்பரநாதர்; இறைவி - காமாட்சியம்மை.



## திருவின்னம்பர் பதிகம் ௱க

### திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

மன்னு மலைமகள் கையால் வருடின மாமறைகள்
சொன்ன துறைதொறுந் தூப்பொரு ளாயின தூக்கமலத்
தன்ன வடிவின வன்புடைத் தொண்டர்க் கமுதருந்தி
இன்னல் களைவன வின்னம்ப ரான்ற னிணையடியே. க

பைதற் பிணக்குழைக் காளிவெங் கோபம்பங் கப்படுப்பான்
செய்தற் கரிய திருநடஞ் செய்தன சீர்மறையோன்
உய்தற் பொருட்டுவெங் கூற்றை யுதைத்தன வும்பர்க்கெல்லாம்
எய்தற் கரியன வின்னம்ப ரான்ற னிணையடியே. உ

சுணங்குநின் றார்கொங்கை யாளுமை சூடின தூமலரால்
வணங்கிநின் றும்பர்கள் வாழ்த்தின மன்னு மறைகடம்மில்
பிணங்கிநின் றின்னன வென்றறி யாதன பேய்க்கணத்தோ
டிணங்கிநின் றாடின வின்னம்ப ரான்ற னிணையடியே. ங

ஆறொன் றியசம யங்களி னவ்வவர்க் கப்பொருள்கள்
வேறொன்றி லாதன விண்ணோர் மதிப்பன மிக்குவமன்
மாறொன்றி லாதன மண்ணொடு விண்ணக மாய்ந்திடினும்
ஈறொன்றி லாதன வின்னம்ப ரான்ற னிணையடியே. ச

அரக்கர்தம் முப்புர மம்பொன்றி னாலட லங்கியின்வாய்க்
கரக்கமுன் வைதிகத் தேர்மிசை நின்றன கட்டுருவம்
பரக்கவெங் கானிடை வேடுரு வாயின பல்பதிதோ
றிரக்க நடந்தன வின்னம்ப ரான்ற னிணையடியே. ரு

கீண்டுங் கிளர்ந்தும்பொற் கேழன்முன் றேடின கேடுபடா
ஆண்டும் பலபல வூழியு மாயின வாரணத்தின்
வேண்டும் பொருள்கள் விளங்கநின் றாடின மேவுசிலம்
பீண்டுங் கழலின வின்னம்ப ரான்ற னிணையடியே. சு

போற்றுந் தகையன பொல்லா முயலகன் கோபப்புன்மை
ஆற்றுந் தகையன வாறு சமயத் தவரவரைத்
தேற்றுந் தகையன தேறிய தொண்டரைச் செந்நெறிக்கே
ஏற்றுந் தகையன வின்னம்ப ரான்ற னிணையடியே. எ

பயம்புன்மை சேர்தரு பாவந் தவிர்ப்பன பார்ப்பதிதன்
குயம்பொன்மை மாமல ராகக் குலாவின கூடவொண்ணாச்
சயம்புவென் றேதகு தானுவென் றேசதுர் வேதங்கணின்
றியம்புங் கழலின வின்னம்ப ரான்ற னிணையடியே. அ

அயனொடு மாலிந் திரன்சந்தி ராதித்த ரமரரெலாம்
சயசய வென்றுமுப் போதும் பணிவன தண்கடல்சூழ்
வியனில முற்றுக்கும் விண்ணுக்கு நாகர் வியனகர்க்கும்
இயபர மாவன வின்னம்ப ரான்ற னிணையடியே.

தருக்கிய தக்கன்றன் வேள்வி தகர்த்தன தாமரைப்போ
துருக்கிய செம்பொ னுவமனி லாதன வொண்கயிலை
நெருக்கிய வாளரக் கன்றலை பத்து நெரித்தவன்றன்
இருக்கியல் பாயின வின்னம்ப ரான்ற னிணையடியே. ய

திருச்சிற்றம்பலம்



## திருவாரூர் பதிகம் ௱உ

### திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

குலம்பலம் பாவரு குண்டர்முன்
னேநமக் குண்டுகொலோ
அலம்பலம் பாவரு தண்புன
லாரு ரவிர்சடையான்
சிலம்பலம் பாவரு சேவடி
யான்றிரு மூலட்டானம்
புலம்பலம் பாவரு தொண்டர்க்குத்
தொண்டராம் புண்ணியமே.

மற்றிட மின்றி மனைதுறந்
தல்லுணா வல்லமணர்
சொற்றிட மென்று துரிசுபட்
டேனுக்கு முண்டுகொலோ
விற்றிடம் வாங்கி விசயனொ
டன்றொரு வேடுவனாய்ப்
புற்றிடங் கொண்டான்றன் றொண்டர்க்குத்
தொண்டராம் புண்ணியமே.

ஒருவடி வின்றிநின் றுண்குண்டா
முன்னமக் குண்டுகொலோ
செருவடி வெஞ்சிலை யாற்புர
மட்டவன் சென்றடையாத்
திருவுடை யான்றிரு வாரூர்த்
திருமூலட் டானன்செங்கண்
பொருவிடை யானடித் தொண்டர்க்குத்
தொண்டராம் புண்ணியமே.

மாசினை யேறிய மேனியர்
வன்கண்ணர் மொண்ணரைவிட்
டீசனை யேநினைந் தேசறு
வேனுக்கு முண்டுகொலோ
தேசனை யாரூர்த் திருமூலட்
டானனைச் சிந்தைசெய்து
பூசனைப் பூசுரர் தொண்டர்க்குத்
தொண்டராம் புண்ணியமே.

அருந்தும் பொழுதுரை யாடா
வமணர் திறமகன்று
வருந்தி நினைந்தர னேயென்று
வாழ்த்துவேற் குண்டுகொலோ
திருந்திய மாமதி லாரூர்த்
திருமூலட் டானனுக்குப்
பொருந்துந் தவமுடைத் தொண்டர்க்குத்
தொண்டராம் புண்ணியமே. ௫

வீங்கிய தோள்களுந் தாள்களு
மாய்நின்று வெற்றரையே
மூங்கைகள் போலுண்ணு மூடர்முன்
னேநமக் குண்டுகொலோ
தேங்கமழ் சோலைத்தென் னாரூர்த்
திருமூலட் டானன்செய்ய
பூங்கழ லானடித் தொண்டர்க்குத்
தொண்டராம் புண்ணியமே.

பண்ணிய சாத்திரப் பேய்கள்
பறிதலைக் குண்டரைவிட்
டெண்ணில் புகழீசன் றன்னருள்
பெற்றேற்கு முண்டுகொலோ
திண்ணிய மாமதி லாரூர்த்
திருமூலட் டானனெங்கள்
புண்ணியன் றன்னடித் தொண்டர்க்குத்
தொண்டராம் புண்ணியமே.

கரப்பர்கண் மெய்யைத் தலைபறிக்
கச்சுக மென்னுங்குண்டர்
உரைப்பன கேளாதிங் குய்யப்போந்
தேனுக்கு முண்டுகொலோ
திருப்பொலி யாரூர்த் திருமூலட்
டானன் றிருக்கயிலைப்
பொருப்பன் விருப்பமர் தொண்டர்க்குத்
தொண்டராம் புண்ணியமே.

கையிலிடு சோறு நின்றுண்ணுங்
காத லமணரைவிட்
டுய்யு நெறிகண்டிங் குய்யப்போந்
தேனுக்கு முண்டுகொலோ
ஐய னணிவய லாரூர்த்
திருமூலட் டானனுக்குப்
பொய்யன் பிலாவடித் தொண்டர்க்குத்
தொண்டராம் புண்ணியமே.

குற்ற முடைய வமணர்
திறமது கையகன்றிட்
டுற்ற கருமஞ்செய் துய்யப்போந்
தேனுக்கு முண்டுகொலோ

மற்பொலி தோளா னிராவணன்
றன்வலி வாட்டுவித்த
பொற்கழ லானடித் தொண்டர்க்குத்
தொண்டராம் புண்ணியமே. ௰

திருச்சிற்றம்பலம்

---

**பதிக வரலாறு :**

*திருநாவுக்கரசுநாயனர் திருவாரூருக்கு எழுந்தருள்கையில் அவ்வூர்த் திருவருட் டொண்டர்கள், வல்லமண் குண்டர் மாயை நீங்கிக்கல்லே மிதப்பாகக் கடனீந்திய கடவுட் டொண்டர் வந்தார் என்று திரு வீதியைத் திருமலி மங்கலஞ் செய்து எல்லேப் புறத்து எதிர்கொள்ள, அடிகள் 'புற்றிடங் கொண்டார் தம் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே, பாதக வமணர் தம்மால் உற்றபிணி யொழிந்துய்யப் போந் தேன் பெறலாவதோ?' என்று அவ் வடியவரை விறைவி யித் திருவிருத் தத்தை அருளிச் செய்து அவரோடு கலந்து திருவீதியுள் ளணைந்தார்.*



திருவாரூர் பதிகம் ௱௩

## திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

வேம்பினைப் பேசி விடக்கினை யோம்பி வினைபெருக்கித்
தூம்பினைத் தூர்த்தங்கோர் சுற்றந் துணையென் றிருத்திர்தொண்டீர்
ஆம்பலம் பூம்பொய்கை யாரூ ரமர்ந்தா னடிநிழற்கீழ்ச்
சாம்பலைப் பூசிச் சலமின்றித் தொண்டுபட் டுய்ம்மின்களே.

ஆராய்ந் தடித்தொண்ட ராணிப்பொ னாரூ ரகத்தடக்கிப்
பாரூர் பரிப்பத்தம் பங்குனி யுத்திரம் பாற்படுத்தான்
ஆரூர் நறுமலர் நாத னடித்தொண்ட னம்பிநந்தி
நீராற் றிருவிளக் கிட்டமை நீணா டறியுமன்றே.

பூம்படி மக்கலம் பொற்படி மக்கல மென்றிவற்றால்
ஆம்படி மக்கல மாகிலு மாரூ ரினிதமர்ந்தார்
தாம்படி மக்கலம் வேண்டுவ ரேற்றமிழ் மாலைகளால்
நாம்படி மக்கலஞ் செய்து தொழுது மடநெஞ்சமே.

துடிக்கின்ற பாம்பரை யார்த்துத் துளங்கா மதியணிந்து
முடித்தொண்ட ராகிமுனிவர் பணிசெய்வ தேயுமன்றிப்
பொடிக்கொண்டு பூசிப் புகுந்தொண்டர் பாதம் பொறுத்தபொற்பால்
அடித்தொண்ட னந்தியென் பானுள னாரூ ரமுதினுக்கே.

கரும்பு பிடித்தவர் காயப்பட் டாரங்கோர் கோடலியால்
இரும்பு பிடித்தவ ரின்புறப் பட்டா ரிவர்கணிற்க
அரும்பவிழ் தண்பொழில் சூழணி யாரூ ரமர்ந்தபெம்மான்
விரும்பு மனத்தினை யாதொன்று நானுன்னை வேண்டுவனே. ௫

கொடிகொள் விதானங் கவரி பறைசங்கங் கைவிளக்கோ
டிடிவில் பெருஞ்செல்வ மெய்துவ ரெய்திய மூனமில்லா
அடிகளு மாரூ ரகத்தின ராயினு மந்தவளப்
பொடிகொண் டணிவார்க் கிருளொக்கு நந்தி புறப்படிலே. ௬

*                *                *                *                * ௭

*                *                *                *                * ௮

*                *                *                *                * ௯

சங்கொலிப் பித்திடு மின்சிறு காலைத் தடவழலில்
குங்குலி யப்புகைக் கூட்டென்றுங் காட்டி யிருபதுதோள்
அங்குலம் வைத்தவன் செங்குரு திப்புன லோடவஞ்ஞான்
றங்குலி வைத்தா னடித்தா மரையென்னை யாண்டனவே. ௰

திருச்சிற்றம்பலம்

**பதிக வரலாறு :**

ஆளுடைய அரசுகள் திருவாரூரை வணங்கிப்பாடி வழிபட்டவர் அங்கேயுள்ள அரனெறியை யடைந்து வணங்கும்போது அக்கோயிலில்

நீருடறிய நீரால் விளக்கெரித்த நமிநந்தி யடிகளுடைய அருந் திருத்தொண்டின் நன்மைத் தன்மையை இரண்டாந் திருப்பாட்டில், 'அடித்தொண்டர் ஆணிப்பொன்' என்றும், 'பங்குனியுத் திரம்பாற் படுத்தான்' என்றும், 'நீராற் றிருவிளக் கிட்டமை நீணா டறியுமன்றே' என்றும் வைத்துச் சிறப்பித்தருளினர்.



திருநாகைக்காரோணம்                                                    பதிகம் ௯௪

## திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

வடிவுடை மாமலை மங்கைபங் காகங்கை வார்சடையாய்
கடிகமழ் சோலை சுலவு கடனாகைக் காரோணனே
பிடிமதவா ரணம் பேணுந் துரகநிற் கப்பெரிய
இடிகுரல் வெள்ளெரு தேறுமி தென்னைகொ லெம்மிறையே. ௧

கற்றார் பயில்கட னாகைக்கா ரோணத்தெங் கண்ணுதலே
விற்றாங் கியகரம் வேனெடுங் கண்ணி வியன்கரமே
நற்றா ணெடுஞ்சிலை நாண்வலித் தகர நின்கரமே
செற்றார் புரஞ்செற்ற சேவக மென்னைகொல் செப்புமினே. ௨

தூமென் மலர்க்கணை கோத்துத்தீ வேள்வி தொழிற்படுத்த
காமன் பொடிபடக் காய்ந்த கடனாகைக் காரோணநின்
நாமம் பரவி நமச்சி வாயவென் னுமஞ்செழுத்தும்
சாமன் றுரைக்கத் தருதிகண் டாயெங்கள் சங்கரனே. ௩

பழிவழி யோடிய பாவிப் பறிதலைக் குண்டர்தங்கள்
மொழிவழி யோடி முடிவேன் முடியாமைக் காத்துக்கொண்டாய்
கழிவழி யோத முலவு கடனாகைக் காரோணவென்
வழிவழி யாளாகும் வண்ண மருளெங்கள் வானவனே. ௪

செந்துவர் வாய்க்கருங் கண்ணிணை வெண்ணகைத் தேன்மொழியார்
வந்து வலஞ்செய்து மாநட மாட மலிந்தசெல்வக்
கந்த மலிபொழில் சூழ்கட னாகைக்கா ரோணமென்றும்
சிந்தை செய்வாரைப் பிரியா திருக்குந் திருமங்கையே. ௫

பனைபுரை கைம்மத யானை யுரித்த பரஞ்சுடரே
கனைகடல் சூழ்தரு நாகைக்கா ரோணத்தெங் கண்ணுதலே
மனைதுறந் தல்லுணா வல்லமண் குண்டர் மயக்கநீக்கி
எனைநினைந் தாட்கொண்டாய்க் கென்னினி யான்செயு மிச்சைகளே. ௬

சீர்மலி செல்வம் பெரிதுடைய செம்பொன் மாமலையே
கார்மலி சோலை சுலவு கடனாகைக் காரோணனே
வார்மலி மென்முலை யார்பலி வந்திடச் சென்றிரந்து
ஊர்மலி பிச்சைகொண் டுண்பது மாதிமை யோவுரையே. ௭

வங்க மலிகட னாகைக்கா ரோணத்தெம் வானவனே
எங்கள் பெருமானோர் விண்ணப்ப முண்டது கேட்டருளீர்
கங்கை சடையுட் கரந்தாயக் கள்ளத்தை மெள்ளவுமை
நங்கை யறியிற்பொல் லாதுகண் டாயெங்க ணாயகனே. ௮

* * * * * . ௯

கருந்தடங் கண்ணியுந் தானுங் கடனாகைக் காரோணத்தான்
இருந்த திருமலை யென்றிறைஞ் சாதன் றெடுக்கலுற்றான்
பெருந்தலை பத்து மிருபது தோளும் பிதிர்ந்தலற
இருந்தரு ளிச்செய்த தேமற்றுச் செய்தில னெம்மிறையே. ௰

திருச்சிற்றம்பலம்



## திருவதிகைவீரட்டானம்                பதிகம் ௫

### திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

மாசிலொள் வாள்போன் மறியு மணிநீர்த் திரைத்தொகுதி
ஊசலை யாடியங் கொண்சிறை யன்ன முறங்கலுற்றால்
பாசறை நீலம் பருகிய வண்டுபண் பாடல்கண்டு
வீசுங் கெடில வடகரைத் தேயெந்தை வீரட்டமே. ௧

பைங்காற் றவளை பறைகொட்டப் பாசிலை நீர்ப்படுகர்
அங்காற் குவளைமே லாவி யுயிர்ப்ப வருகுலவும்
செங்காற் குருகிவை சேருஞ் செறிகெடி லக்கரைத்தே
வெங்காற் குருசிலை வீர னருள்வைத்த வீரட்டமே. ௨

அம்மலர்க் கண்ணிய ரஞ்சனஞ் செந்துவர் வாயிளையார்
வெம்முலைச் சாந்தம் விலைபெறு மாலை யெடுத்தவர்கள்
தம்மருங் குற்கிரங் கார்தடந் தோண்மெலி யக்குடைவார்
விம்மு புனற்கெடி லக்கரைத் தேயெந்தை வீரட்டமே. ௩

மீனுடைத் தண்புனல் வீரட்ட ரேறும்மை வேண்டுகின்ற
தியானுடைச் சில்குறை யொன்றுள தானறுந் தண்ணெருக்கின்
தேனுடைக் கொன்றைச் சடையுடைக் கங்கைத் திரைதவழும்
கூனுடைத் திங்கட் குழவியெப் போதுங் குறிக்கொண்மினே. ௪

ஆரட்ட தேனு மிரந்துண் டகமக வன்றிரிந்து
வேரட்ட நிற்பித் திடுகின்ற தால்விரி நீர்ப்பரவைச்
சூரட்ட வேலவன் றாதையைச் சூழ்வய லாரதிகை
வீரட்டத் தானை விரும்பா வரும்பாவ வேதனையே. ௫

படர்பொற் சடையும் பகுவா யரவும் பனிமதியும்
சுடலைப் பொடியுமெல் லாமுள வேயவர் தூயதெண்ணீர்க்
கெடிலக் கரைத்திரு வீரட்ட ராவர்கெட் டேனடைந்தார்
நடலைக்கு நற்றுணை யாகுங்கண் டீரவர் நாமங்களே. ௬

காளங் கடந்ததொர் கண்டத்த ராகிக்கண் ணார்கெடில
நாளங் கடிக்கொர் நகரமு மாதிற்கு நன்கிசைந்த
தாளங்கள் கொண்டுங் குழல்கொண்டுந் தாமங்ஙனே
வேடங்கள் கொண்டும் விசும்புசெல் வாரவர் வீரட்டரே. ௭

* * * * *. ௮

* * * * *. ௯

* * * * *. ௰

திருச்சிற்றம்பலம்

இது நடுநாட்டிலுள்ளது.

இறைவன் - அதிகைவீரட்டநாதர்; இறைவி - அதிகைநாயகி.



திருப்புகலூர் பதிகம் ௱௬

## திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

தன்னைச் சரணென்று தாளடைந் தேன்றன் னடியடையப்
புன்னைப் பொழிற்புக லூரண்ணல் செய்வன கேண்மின்களோ
என்னைப் பிறப்பறுத் தென்வினை கட்டறுத் தேழ்நரகத்
தென்னைக் கிடக்கவொட் டான்சிவ லோகத் திருத்திடுமே. ௧

பொன்னை வகுத்தன்ன மேனிய னேபுணர் மென்முலையாள்
தன்னை வகுத்தன்ன பாகத்த னேதமி யேற்கிரங்காய்
புன்னை மலர்த்தலை வண்டுறங் கும்புக லூரரசே
என்னை வகுத்திலை யேலிடும் பைக்கிடம் யாதுசொல்லே. ௨

* * * * *. ௩

பொன்னள வார்சடைக் கொன்றையி னாய்புக லூரரசே
மன்னுள தேவர்கள் தேடு மருந்தே வலஞ்சுழியாய்
என்னள வேயுனக் காட்பட் டிடைக்கலத் தேகிடப்பார்
உன்னள வேயெனக் கொன்று மிரங்காத வுத்தமனே.

*  *  *  *  *  . ௫

*  *  *  *  *  . ௬

*  *  *  *  *  . ௭

*  *  *  *  *  . ௮

*  *  *  *  *  . ௯

ஓணப் பிரானு மொளிர்மா மலர்மிசை யுத்தமனும்
காணப் பராவியுங் காண்கின் றிலர்கர நாலைந்துடைத்
தோணப் பிரானை வலிதொலைத் தோன்றொல்லை நீர்ப்புகலூர்க்
கோணப் பிரானைக் குறுகக் குறுகா கொடுவினையே. ௰

திருச்சிற்றம்பலம்



## திருக்கழிப்பாலை பதிகம் ௭௭

### திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

நெய்தற் குருகுதன் பிள்ளையென் றெண்ணி நெருங்கிச்சென்று
கைதை மடற்புல்கு தென்கழிப் பாலை யதனுறைவாய்
பைதற் பிறையொடு பாம்புடன் வைத்த பரிசறியோம்
எய்தப் பெறினிரங் காதுகண் டாய்நம் மிறையவனே. ௧

பருமா மணியும் பவளமு முத்தும் பரந்துந்திவரை
பொருமால் கரைமேற் றிரைகொணர்ந் தெற்றப் பொலிந்திலங்கும்
கருமா மிடறுடைக் கண்டனெம் மான்கழிப் பாலையெந்தை
பெருமா னவனென்னை யாளுடை யானிப் பெருநிலத்தே. ௨

நாட்பட் டிருந்தின்ப மெய்தலுற் றிங்கு நமன்றமராற்
கோட்பட் டொழிவதன் முந்துற வேகுளி ரார்தடத்துத்
தாட்பட்ட தாமரைப் பொய்கையந் தண்கழிப் பாலையண்ணற்
காட்பட் டொழிந்தமன் றேவல்ல மாயிவ் வகலிடத்தே. ௩

*  *  *  *  *  . ௪

* * * * * . ௫

* * * * * . ௬

* * * * * . ௭

* * * * * . ௮

* * * * * . ௯

* * * * * . ௰

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - பால்வண்ணநாதர்; இறைவி - வேதநாயகி.



## திருக்கடவூர்வீரட்டம் பதிகம் ௱௮

### திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

மருட்டுயர் தீரவன் றர்ச்சித்த மாணிமார்க் கண்டேயற்காய்
இருட்டிய மேனி வளைவா ளெயிற்றெரி போலுங்குஞ்சிச்
சுருட்டிய நாவில்வெங் கூற்றம் பதைப்ப வுதைத்துங்ஙனே
உருட்டிய சேவடி யான்கடவூருறை யுத்தமனே. ௧

பதத்தெழு மந்திர மஞ்செழுத் தோதிப் பரிவினொடும்
இதத்தெழு மாணித னின்னுயி ருண்ணவெ குண்டடர்த்த
கதத்தெழு காலனைக் கண்குரு திப்புன லாறொழுக
உதைத்தெழு சேவடி யான்கட வூருறை யுத்தமனே. ௨

கரப்புறு சிந்தையர் காண்டற் கரியவன் காமனையும்
நெருப்புமிழ் கண்ணின னீள்புனற் கங்கையும் பொங்கரவும்
பரப்பிய செஞ்சடைப் பால்வண்ணன் காலனைப் பண்டொருகால்
உரப்பிய சேவடி யான்கட வூருறை யுத்தமனே. ௩

மறித்திகழ் கையினன் வானவர் கோனை மனமகிழ்ந்து
குறித்தெழு மாணித னாருயிர் கொள்வான் கொதித்தசிந்தைக்
கறுத்தெழு மூவிலை வேலுடைக் காலனைத் தானலற
உறுக்கிய சேவடி யான்கட வூருறை யுத்தமனே. ௪

குழைத்திகழ் காதினன் வானவர் கோனைக் குளிர்ந்தெழுந்து
பழக்கமோ டர்ச்சித்த மாணித னாருயிர் கொள்ளவந்த
தழற்பொதி மூவிலை வேலுடைக் காலனைத் தானலற
உழக்கிய சேவடி யான்கட வூருறை யுத்தமனே. ௫

பாலனுக் காயன் றுபாற்கட லீந்து பணைத்தெழுந்த
ஆலினிற் கீழிருந் தாரண மோதி யருமுனிக்காய்ச்
சூலமும் பாசமுங் கொண்டு தொடர்ந்தடர்ந் தோடிவந்த
காலனைக் காய்ந்தபி ரான்கட வூருறை யுத்தமனே. ௬

படர்சடைக் கொன்றையும் பன்னக மாலை பணிகயிறா
உடைதலை கோத்துழன் மேனிய னுண்பலிக் கென்றுழல்வோன்
சுடர்பொதி மூவிலை வேலுடைக் காலனைத் துண்டமதா
உடறிய சேவடி யான்கட வூருறை யுத்தமனே. ௭

வெண்டலை மாலையுங் கங்கை கரோடி விரிசடைமேல்
பெண்டணி நாயகன் பேயுகந் தாடும் பெருந்தகையான்
கண்டணி நெற்றியன் காலனைக் காய்ந்து கடலின்விடம்
உண்டருள் செய்தபி ரான்கட வூருறை யுத்தமனே. ௮

கேழல தாகிக் கிளறிய கேசவன் காண்பரிதாய்
வாழிநன் மாமலர்க் கண்ணிடந் திட்டவம் மாலவற்கன்
றாழியு மீந்து வடிதிறற் காலனை யன்றடர்த்து
ஊழியு மாயபி ரான்கட வூருறை யுத்தமனே. ௯

தேன்றிகழ் கொன்றையுங் கூவிளமாலை திருமுடிமேல்
ஆன்றிக ழைந்துகந் தாடும்பி ரான்மலை யார்த்தெடுத்த
கூன்றிகழ் வாளரக் கன்முடி பத்துங் குலைந்துவிழ
ஊன்றிய சேவடி யான்கட வூருறை யுத்தமனே. ௰

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவர் - அமிர்தகடேசர்; இறைவி - அபிராமி.

## திருமாற்பேறு பதிகம் ௱௯

### திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

மாணிக் குயிர்பெறக் கூற்றை யுதைத்தன மாவலிபால்
காணிக் கிரந்தவன் காண்டற் கரியன கண்டதொண்டர்
பேணிக் கிடந்து பரவப் படுவன பேர்த்துமஃதே
மாணிக்க மாவன மாற்பே றுடையான் மலரடியே. ௧

கருடத் தனிப்பாகன் காண்டற் கரியன காதல்செய்யில்
குருடர்க்கு முன்னே குடிகொண் டிருப்பன கோலமல்கு
செருடக் கடிமலர்ச் செல்விதன் செங்க மலக்கரத்தால்
வெருடச் சிவப்பன மாற்பே றுடையான் மலரடியே. ௨

* * * * * . ௩

* * * * * . ௪

* * * * * . ௫

* * * * * . ௬

* * * * * . ௭

* * * * * . ௮

* * * * * . ௯

* * * * * . ௰

திருச்சிற்றம்பலம்

இது தொண்டைநாட்டிலுள்ளது.

இறைவர் - மால்வணங்குமீசர்; இறைவி - கருணைநாயகி.



## திருத்தூங்கானைமாடம் பதிகம் ௱௰

### திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

பொன்னார் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம் போற்றிசெய்யும்
என்னாவி காப்பதற் கிச்சையுண் டேலிருங் கூற்றகல
மின்னாரு மூவிலைச் சூலமென் மேற்பொறி மேவுகொண்டல்
துன்னார் கடந்தையுட் டூங்கானை மாடச் சுடர்க்கொழுந்தே. ௧

ஆவா சிறுதொண்ட னென்னினைந் தானென் றரும்பிணிநோய்
காவா தொழியிற் கலக்குமுன் மேற்பழி காதல்செய்வார்
தேவா திருவடி நீறென்னைப் பூசுசெந் தாமரையின்
பூவார் கடந்தையுட் டூங்கானை மாடத்தெம் புண்ணியனே. ௨

* * * * *. ௩
* * * * *. ௪
* * * * *. ௫
* * * * *. ௬
* * * * *. ௭
* * * * *. ௮
* * * * *. ௯

கடவுந் திகிரி கடவா தொழியக் கயிலையுற்றான்
படவுந் திருவிர லொன்றுவைத் தாய்பனி மால்வரைபோல்
இடவம் பொறித்தென்னை யேன்றுகொள் ளாயிருஞ் சோலைதிங்கள்
தடவுங் கடந்தையுட் டூங்கானை மாடத்தெந் தத்துவனே. ௰

திருச்சிற்றம்பலம்

இது நடுநாட்டிலுள்ளது.

இறைவன் - சுடர்க்கொழுந்துநாதர் ; இறைவி - கடந்தைநாயகி.

---

**பதிக வரலாறு :**

திருவதிகைத் திருவீரட்டானத்தில் எழுந்தருளியிருந்த இனிய தமிழரசராகிய வாகீசர் இறைவனது பல திருப் பதிகளையுங் கண்டு வணங்கிப் பாடித் தொண்டுசெய்ய விரும்பிப் புறப்பட்டுத் திருவெண்ணெய்நல்லூர்,

திருவாமாத்தூர், திருக்கோவலூர் முதலிய திருப்பதிகளை வழிபட்டுத் திருப்பெண்ணாகடத்தை யடைந்து ஆண்டுள்ள திருத்தூங்கானைமாடத் திருக்கோயிலை உற்று முன்னவனை இறைஞ்சி நின்று, 'எம்பிரானே, புன்னெறியாய சமணசமயத் தொடக்குண்டு வந்தவிந்த உடலோடுவாழத் தரிக்கமாட்டேன்; அதனைப் பொருந்தி வாழ்தற்கு உன்னுடைய சூல விடப விலச்சினைகளை இட்டருளவேண்டு' மென்று 'பொன்னார் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம்' என்னும் இத்திருவிருத்தத்தைப் பாடியரு ளலும், இறைவன தின்னருளால் ஓர் சிவபூதம் ஒருவருமறியாமல் ஆண்ட வரசினது திருத்தோளில் மூவிலைச் சூலத்தைச் சின விடையினுடன் சாத்திச் சென்றது. அதனைக்கண்ட தமிழ் முனிவர் மனங்களித்துத் திருவருளை நினைந்து ஆனந்த வருவி பொழிய விழுந்தெழுந்து ஆர்வம் பெருகிய சிந்தையுடன் உய்ந்தொழிந்தேன் என்று அடிபரவிப் பிறபதி களையும் வணங்கச் சென்றார்.



பொது பதிகம் ககக

## பசுபதித் திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

சாம்பலைப் பூசித் தரையிற் புரண்டுநின் றாள்பரவி
ஏம்பலிப் பார்கட் கிரங்குகண் டாயிருங் கங்கையென்னும்
காம்பலைக் கும்பணைத் தோளி கதிர்ப்பூண் வனமுலைமேல்
பாம்பலைக் குஞ்சடை யாயெம்மை யாளும் பசுபதியே.

உடம்பைத் தொலைவித் துன்பாதந் தலைவைத்த வுத்தமர்கள்
இடும்பைப் படாம லிரங்குகண் டாயிரு ளோடச்செந்தீ
அடும்பொத் தனைய வழன்மழு வாவழ லேயுமிழும்
படம்பொத் தரவரை யாயெம்மை யாளும் பசுபதியே.

தாரித் திரந்தவி ராவடி யார்தடு மாற்றமென்னும்
மூரித் திரைப்பௌவ நீக்குகண் டாய்முன்னை நாளொருகால்
வேரித்தண் பூஞ்சுட ரைங்கணை வேள்வெந்து வீழச்செந்தீப்
பாரித்த கண்ணுடை யாயெம்மை யாளும் பசுபதியே.

ஒருவரைத் தஞ்சமென் றெண்ணா துன்பாத மிறைஞ்சுகின்றார்
அருவினைச் சுற்ற மகல்விகண் டாயண்ட மேயணவும்
பெருவரைக் குன்றம் பிளிறப் பிளந்துவேய்த் தோளியஞ்சப்
பருவரைத் தோலுரித் தாயெம்மை யாளும் பசுபதியே. ச

இடுக்கொன் றுமின்றியெஞ் சாமையுன் பாதமிறைஞ்சுகின்றார்க்
கடர்க்கின்ற நோயை விலக்குகண் டாயண்ட மெண்டிசையும்
சுடர்த்திங்கள் சூடிச் சுழல்கங்கை யோடுஞ் சுரும்புதுன்றிப்
படர்க்கொண்ட செஞ்சடை யாயெம்மை யாளும் பசுபதியே. ரு

அடலைக் கடல்கழி வானின் னடியிணை யேயடைந்தார்
நடலைப் படாமை விலக்குகண் டாய்நறுங் கொன்றைதிங்கள்
சுடலைப் பொடிச்சுண்ண மாசுணஞ் சூளா மணிகிடந்து
படரச் சுடர்மகு டாவெம்மை யாளும் பசுபதியே. சா

துறவித் தொழிலே புரிந்துன் சுரும்படி யேதொழுவார்
மறவித் தொழிலது மாற்றுகண் டாய்மதின் மூன்றுடைய
அறவைத் தொழில்புரிந் தந்தரத் தேசெல்லு மந்திரத்தேர்ப்
பறவைப் புரமெரித் தாயெம்மை யாளும் பசுபதியே. எ

* * * * * . அ

* * * * * . கூ

சித்தத் துருகிச் சிவனெம் பிரானென்று சிந்தையுள்ளே
பித்துப் பெருகப் பிதற்றுகின் றார்பிணி தீர்த்தருளாய்
மத்தத் தரக்க னிருபது தோளு முடியுமெல்லாம்
பத்துற் றுறநெரித் தாயெம்மை யாளும் பசுபதியே. ய

திருச்சிற்றம்பலம்



பொது பதிகம் கக௨

## சரக்கறைத் திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

விடையும் விடைப்பெரும் பாகாவென் விண்ணப்பம் வெம்மழுவாட்
படையும் படையாய் நிரைத்தபல் பூதமும் பாய்புலித்தோல்
உடையு முடைதலை மாலையு மாலைப் பிறையொதுங்கும்
சடையு மிருக்குஞ் சரக்கறை யோவென் றனிநெஞ்சமே. க

விஞ்சத் தடவரை வெற்பாவென் விண்ணப்ப மேலிலங்கு
சங்கக் கலனுஞ் சரிகோ வணமுந் தமருகமும்
அந்திப் பிறையு மனல்வா யரவும் விரவியெல்லாம்
சந்தித் திருக்குஞ் சரக்கறை யோவென் றனிநெஞ்சமே. உ

வீந்தார் தலைகல னேந்தியென் விண்ணப்ப மேலிலங்கு
சாந்தாய வெந்த தவளவெண் ணீறுந் தகுணிச்சமும்
பூந்தா மரைமே னிப்புள்ளி யுழைமா னதள்புலித்தோல்
தாந்தா மிருக்குஞ் சரக்கறை யோவென் றனிநெஞ்சமே. ௩

வெஞ்சமர் வேழத் துரியாயென் விண்ணப்ப மேலிலங்கு
வஞ்சமா வந்த வருபுனற் கங்கையும் வான்மதியும்
நஞ்சமா நாக நகுசிர மாலை நகுவெண்டலை
தஞ்சமா வாழுஞ் சரக்கறை யோவென் றனிநெஞ்சமே. ச

வேலைக் கடனஞ்ச முண்டாயென் விண்ணப்ப மேலிலங்கு
காலற்க டந்தா னிடங்கயி லாயமுங் காமர்கொன்றை
மாலைப் பிறையு மணிவா யரவும் விரவியெல்லாம்
சாலக் கிடக்குஞ் சரக்கறை யோவென் றனிநெஞ்சமே. ரு

வீழிட்ட கொன்றையந் தாராயென் விண்ணப்ப மேலிலங்கு
சூழிட் டிருக்குநற் சூளா மணியுஞ் சுடலைநீறும்
ஏழிட் டிருக்குநல் லக்கு மரவுமென் பாவையோடும்
தாழிட் டிருக்குஞ் சரக்கறை யோவென் றனிநெஞ்சமே.

விண்டார் புரமூன்று மெய்தாயென் விண்ணப்ப மேலிலங்கு
தொண்டா டியதொண் டடிப்பொடி நீறுந் தொழுதுபாதம்
கண்டார்கள் கண்டிருக் குங்கயி லாயமுங் காமர்கொன்றைத்
தண்டா ரிருக்குஞ் சரக்கறை யோவென் றனிநெஞ்சமே. எ

விடுபட்டி யேறுகந் தேறீயென் விண்ணப்ப மேலிலங்கு
கொடுகொட்டி கொக்கரை தக்கை குழலுளம் வீணைமொந்தை
வடுவிட்ட கொன்றையும் வன்னியு மத்தமும் வாளரவும்
தடுகுட்ட மாடுஞ் சரக்கறை யோவென் றனிநெஞ்சமே. அ

வெண்டிரைக் கங்கை விகிர்தாவென் விண்ணப்ப மேலிலங்கு
கண்டிகை பூண்டு கடிசூத் திரமேற் கபாலவடம்
குண்டிகை கொக்கரை கோணற் பிறைகுறட் பூதப்படை
தண்டிவைத் திட்ட சரக்கறை யோவென் றனிநெஞ்சமே. கூ

வேதித்த வெம்மழு வாளீயென் விண்ணப்ப மேலிலங்கு
சோதித் திருக்குநற் சூளா மணியுஞ் சுடலைநீறும்
பாதிப் பிறையும் படுதலைத் துண்டமும் பாய்புலித்தோல்
சாதித் திருக்குஞ் சரக்கறை யோவென் றனிநெஞ்சமே. ம

விவந்தா டியகழ லெந்தாயென் விண்ணப்ப மேலிலங்கு
தவந்தா னெடுக்கத் தலைபத் திறுத்தனை தாழ்புலித்தோல்
சிவந்தா டியபொடி நீறுஞ் சிரமாலை சூடிநின்று
தவந்தா னிருக்குஞ் சரக்கறை யோவென் றனிநெஞ்சமே. கக

திருச்சிற்றம்பலம்



பொது பதிகம் ககங

## தனித் திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

வெள்ளிக் குழைத்துணி போலுங் கபாலத்தன் வீழ்ந்திலங்கு
வெள்ளிப் புரியன்ன வெண்புரி நூலன் விரிசடைமேல்
வெள்ளித் தகடன்ன வெண்பிறை சூடிவெள் ளென்பணிந்து
வெள்ளிப் பொடிப்பவ ளப்புறம் பூசிய வேதியனே.

உடலைத் துறந்துல கேழுங் கடந்துல வாததுன்பக்
கடலைக் கடந்துய்யப் போயிட லாகுங் கனகவண்ணப்
படலைச் சடைப்பர வைத்திரைக் கங்கைப் பனிப்பிறைவெண்
சுடலைப் பொடிக்கட வுட்கடி மைக்கட் டுணிநெஞ்சமே. ௨

முன்னே யுரைத்தான் முகமனே யொக்குமிம் மூவுலகுக்
கன்னையு மத்தனு மாவா யழல்வணா நீயலையோ
உன்னை நினைந்தே கழியுமென் றாவி கழிந்ததற்பின்
என்னை மறக்கப் பெறுமெம் பிரானுன்னை வேண்டியதே.

நின்னையெப் போது நினையலொட் டாய்நீ நினையப்புகில்
பின்னையப் போதே மறப்பித்துப் பேர்த்தொன்று நாடுவித்தி
உன்னையெப் போது மறந்திட் டுனக்கினி தாவிருக்கும்
என்னையொப் பாருள ரோசொல்லு வாழி யிறையவனே. ௪

முழுத்தழன் மேனித் தவளப் பொடியன் கனகக்குன்றத்
தெழிற்பரஞ் சோதியை யெங்கள்பி ரானை யிகழ்திர்கண்டீர்
தொழப்படுந் தேவர் தொழப்படு வானைத் தொழுதபின்னைத்
தொழப்படுந் தேவர்தம் மாற்றொழு விக்குந்தன் றொண்டரையே. ௫

விண்ணகத் தான்மிக்க வேதத்து ளான்விரி நீருடுத்த
மண்ணகத் தான்றிரு மாலகத் தான்மரு வற்கினிய
பண்ணகத் தான்பத்தர் சித்தத்து ளான்பழ நாயடியேன்
கண்ணகத் தான்மனத் தான்சென்னி யானெங் கறைக்கண்டனே. ௬

பெருங்கடன் மூடிப் பிரளயங் கொண்டு பிரமனும்போய்
இருங்கடன் மூடி யிறக்கு மிறந்தான் களேபரமும்
கருங்கடல் வண்ணன் களேபர முங்கொண்டு கங்காளராய்
வருங்கடன் மீளநின் றெம்மிறை நல்வீணை வாசிக்குமே. ௭

வானந் துளங்கிலென் மண்கம்ப மாகிலென் மால்வரையும்
தானந் துளங்கித் தலைதடு மாறிலென் தண்கடலும்
மீனம் படிலென் விரிசுடர் வீழிலென் வேலைநஞ்சுண்
டூனமொன் றில்லா வொருவனுக் காட்பட்ட வுத்தமர்க்கே. ௮

சிவனெனு நாமந் தனக்கே யுடையசெம் மேனியெம்மான்
அவனெனை யாட்கொண் டளித்திடு மாகி லவன்றனையான்
பவனெனு நாமம் பிடித்துத் திரிந்துபன் னாளழைத்தால்
இவனெனைப் பன்னா ளழைப்பொழி யானென் றெதிர்ப்படுமே.

என்னையொப் பாருன்னை யெங்ஙனங் காண்ப ரிகலியுன்னை
நின்னையொப் பார்நின்னைக் காணும் படித்தன்று நின்பெருமை
பொன்னையொப் பாரித் தழலைவ ளாவிச்செம் மானஞ்செற்று
மின்னையொப் பார மிளிருஞ் சடைக்கற்றை வேதியனே. ம

திருச்சிற்றம்பலம்



பொது பதிகம் ககரு

## தனித் திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

பவளத் தடவரை போலுந்திண் டோள்களத் தோண்மிசையே
பவளக் குழைதழைத் தாலொக்கும் பல்சடை யச்சடைமேல்
பவளக் கொழுந்தன்ன பைம்முக நாகமந் நாகத்தொடும்
பவளக்கண் வால மதியெந்தை சூடும் பனிமலரே. க

முருகார் நறுமல ரிண்டை தழுவிவண் டேமுரலும்
பெருகா றடைசடைக் கற்றையி னாய்பிணி மேய்ந்திருந்த
இருகாற் குரம்பை யிதுநா னுடைய திதுபிரிந்தால்
தருவா யெனக்குன் றிருவடிக் கீழோர் தலைமறைவே. உ

மூவா வுருவத்து முக்கண் முதல்வமிக் கூரிடும்பை
காவா யெனக்கடை தூங்கு மணியைக் கையாலமரர்
நாவா யசைத்த வொலியொலி மாறிய தில்லையப்பால்
தீயா யெரிந்து பொடியாய்க் கழிந்த திரிபுரமே. ந

பந்தித்த பாவங்க ளம்மையிற் செய்தன விம்மைவந்து
சந்தித்த பின்னைச் சமழ்ப்பதென் னேவந் தமரர்முன்னாள்
முந்திச் செழுமல ரிட்டு முடி தாழ்த் தடிவணங்கும்
நந்திக்கு முந்துற வாட்செய்கி லாவிட்ட நன்னெஞ்சமே. ௪

அந்திவட் டத்திளங் கண்ணிய னறமர் செஞ்சடையான்
புந்திவட் டத்திடைப் புக்குநின் றானையும் பொய்யென்பனோ
சந்திவட் டச்சடைக் கற்றை யலம்பச் சிறிதலர்ந்த
நந்திவட் டத்தொடு கொன்றைவ ளாவிய நம்பனையே. ௫

உன்மத் தகமலர் சூடி யுலகந் தொழச்சுடலைப்
பன்மத் தகங்கொண்டு பல்கடை தோறும் பலிதிரிவான்
என்மத் தகத்தே யிரவும் பகலும் பிரிவரியான்
தன்மத் தகத்தோ ரிளம்பிறை சூடிய சங்கரனே. ௬

அரைப்பா லுடுப்பன கோவணச் சின்னங்க ளையமுணல்
வரைப்பா வையைக்கொண்ட தெக்குடி வாழ்க்கைக்கு வானிரைக்கும்
இரைப்பா படுதலை யேந்துகை யாமறை தேடுமெந்தாய்
உரைப்பா ருரைப்பன வேசெய்தி யாலெங்க ளுத்தமனே. ௭

துறக்கப் படாத வுடலைத் துறந்துவெந் தூதுவரோ
டிறப்ப னிறந்தா லிருவிசும் பேறுவ னேறிவந்து
பிறப்பன் பிறந்தாற் பிறையணி வார்சடைப் பிஞ்ஞகன்பேர்
மறப்பன்கொ லோவென்றென் னுள்ளங் கிடந்து மறுகிடுமே. ௮

வேரி வளாய விரைமலர்க் கொன்றை புனைந்தனகன்
சேரி வளாயவென் சிந்தை புகுந்தான் றிருமுடிமேல்
வாரி வளாய வருபுனற் கங்கை சடைமறிவாய்
ஏரி வளாவிக் கிடந்தது போலு மிளம்பிறையே.

கன்னெடுங் காலம் வெதும்பிக் கருங்கட னீர்சுருங்கிப்
பன்னெடுங் கால மழைதான் மறுக்கினும் பஞ்சமுண்டென்
றென்னொடுஞ் சூளறு மஞ்சனெஞ் சேயிமை யாதமுக்கண்
பொன்னெடுங் குன்றமொன் றுண்டுகண் டீரிப் புகலிடத்தே. ௰

மேலு மறிந்தில னான்முகன் மேற்சென்று கீழிடந்து
மாலு மறிந்திலன் மாலுற்ற தேவழி பாடுசெய்யும்
பாலன் மிசைச்சென்று பாசம் விசிறி மறிந்தசிந்தைக்
கால னறிந்தா னறிதற் கரியான் கழலடியே.

திருச்சிற்றம்பலம்



## விடுபட்ட பதிக வரலாறுகள்

**நகூ-ம் பதிக வரலாறு :** (பக்கம் ௱எ)

திருநாவுக்கரசுநாயனார் திருவீழிமிழலையினின்றும் புறப்பட்டுப் பிற தலங்களையும் வணங்கிக் கொண்டு திருவாவடுதுறையை யடைந்து ஆவுக்கருளு மாவடுதண்டுறையார் பாத மணைந்திறைஞ்சி, ஞான போனகராகிய பிள்ளையாருக்குச் செம்பொனாயிரங் கொண்ட வுலவாக் கிழியருளிய செய்தியைத் தமது திருநேரிசையில் 'காயிரும் பொழில்கள் சூழ்ந்த கழுமலவூரர்க் கம்பொன், ஆயிரங்கொடுப்பர் போலு மாவடு துறையனாரே' என்று வைத்துப்பாடி யருளினார்.

---

**அக-ம் பதிக வரலாறு :** (பக்கம் கசஅ)

சிதம்பரத்திலே திருக்கோயிலை யடைந்து நடேசப்பிரானது திரு முன்னரிருந்து கும்பிட்டு ஆர்வம் பெருகிய வாகீசர் 'என்றெய்தினை யென மன்றாடும் அத்தன் றிருவருள் பொழியுங் கடைவிழி யருள்பெற் றிடவரும் ஆநந்தமெய்த் தன்மையில்' 'கருநட்டகண்டனை' என்னுந் திரு விருத்தத்தை எடுத்து அதில் இரண்டாந் திருப்பாட்டில் 'என்றுவந்தா யென்னு மெம்பெருமான் றன்றிருக் குறிப்பே' என்று இறைவன் றமக் குச்செய்த திருவருட் டிறத்தைக் குறிப்பித்துப் பாடியருளினார்.

திருச்சிற்றம்பலம்



உ

திருச்சிற்றம்பலம்



திருநாவுக்கரசு சுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரப்பதிகங்கள்

# ஐந்தாந் திருமுறை

கோயில் — பதிகம் ககரு

## திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

அன்னம் பாலிக்குந் தில்லைச்சிற் றம்பலம்
பொன்னம் பாலிக்கு மேலுமிப் பூமிசை
என்னம் பாலிக்கு மாறுகண் டின்புற
இன்னம் பாலிக்கு மோவிப் பிறவியே. க

அரும்பற் றப்பட வாய்மலர் கொண்டுநீர்
சுரும்பற் றப்படத் தூவித் தொழுமினோ
கரும்பற் றச்சிலைக் காமனைக் காய்ந்தவன்
பெரும்பற் றப்புலி யூரெம் பிரானையே. உ

அரிச்சுற் றவினை யாலடர்ப் புண்டுநீர்
எரிச்சுற் றக்கிடந் தாரென் றயலவர்
சிரிச்சுற் றுப்பல பேசப்ப டாமுனந்
திருச்சிற் றம்பலஞ் சென்றடைந் துய்ம்மினே. ௩

அல்ல லென்செயு மருவினை யென்செயுந்
தொல்லை வல்வினைத் தொண்டன்று னென்செயுந்
தில்லை மாநகர்ச் சிற்றம் பலவனார்க்
கெல்லை யில்லதோ ரடிமைபூண் டேனுக்கே. ௪

ஊனி லாவி யுயிர்க்கும் பொழுதெலாம்
நானி லாவி யிருப்பனென் னாதனைத்
தேனி லாவிய சிற்றம் பலவனார்
வானி லாவி யிருக்கவும் வைப்பரே. ௫

சிட்டர் வானவர் சென்று வரங்கொளுஞ்
சிட்டர் வாழ்தில்லைச் சிற்றம் பலத்துறை
சிட்டன் சேவடி கைதொழச் செல்லுமச்
சிட்டர் பாலணு கான்செறு காலனே. ௬

ஒருத்த னாருல கங்கட் கொருசுடர்
திருத்த னார்தில்லைச் சிற்றம் பலவனார்
விருத்த னாரிளை யார்விட முண்டவெம்
அருத்த னாரடி யாரை யறிவரே. ௭

விண்ணி றைந்ததோர் வெவ்வழ லின்னுரு
எண்ணி றைந்த விருவர்க் கறிவொணாக்
கண்ணி றைந்த கடிபொழி லம்பலத்
துண்ணி றைந்துநின் றாடு மொருவனே. ௮

வில்லைவட் டப்பட வாங்கி யவுணர்தம்
வல்லைவட் டம்மதின் மூன்றுடன் மாய்த்தவன்
றில்லைவட் டத்திசை கைதொழு வார்வினை
ஒல்லைவட் டங்கடந் தோடுத லுண்மையே. ௯

நாடி நாரண னான்முக னென்றிவர்
தேடி யுந்திரிந் துங்காண வல்லரோ
மாட மாளிகை சூழ்தில்லை யம்பலத்
தாடி பாதமென் னெஞ்சு ளிருக்கவே. ௰

மதுர வாய்மொழி மங்கையோர் பங்கினன்
சதுரன் சிற்றம் பலவன் றிருமலை
அதிர வார்த்தெடுத் தான்முடி பத்திற
மிதிகொள் சேவடி சென்றடைந் துய்ம்மினே. கக

திருச்சிற்றம்பலம்



கோயில் பதிகம் ககசு

## திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பனைக்கை மும்மத வேழ முரித்தவன்
நினைப்ப வர்மனங் கோயிலாக் கொண்டவன்
அனைத்து வேடமா மம்பலக் கூத்தனைத்
தினைத்த னைப்பொழு தும்மறந் துய்வனே. க

தீர்த்த னைச்சிவ னைச்சிவ லோகனை
மூர்த்தி யைமுத லாய வொருவனைப்
பார்த்த னுக்கருள் செய்தசிற் றம்பலக்
கூத்த னைக்கொடி யேன்மறந் துய்வனே. உ

கட்டும் பாம்புங் கபாலங்கை மான்மறி
இட்ட மாயிடு காட்டெரி யாடுவான்
சிட்டர் வாழ்தில்லை யம்பலக் கூத்தனை
எட்ட னைப்பொழு தும்மறந் துய்வனே. ௩

மாணி பால்கறந் தாட்டி வழிபட
நீணு லகெலா மாளக் கொடுத்தவென்
ஆணி யைச்செம்பொ னம்பலத் துண்ணின்ற
தாணு வைத்தமி யேன்மறந் துய்வனே. ச

பித்த னைப்பெருங் காடரங் காவுடை
முத்த னைமுளை வெண்மதி சூடியைச்
சித்த னைச்செம்பொ னம்பலத் துண்ணின்ற
அத்த னையடி யேன்மறந் துய்வனே. ரு

நீதி யைநிறை வைமறை நான்குடன்
ஓதி யையொரு வர்க்கு மறிவொணாச்
சோதி யைச்சுடர்ச் செம்பொனி னம்பலத்
தாதி யையடி யேன்மறந் துய்வனே. சா

மைகொள் கண்டனெண் டோளன்முக் கண்ணினன்
பைகொள் பாம்பரை யார்த்த பரமனார்
செய்ய மாதுறை சிற்றம் பலத்தெங்கள்
ஐய னையடி யேன்மறந் துய்வனே. எ

முழுதும் வானுல கத்துள தேவர்கள்
தொழுதும் போற்றியுந் தூயசெம் பொன்னினால்
எழுதி மேய்ந்தசிற் றம்பலக் கூத்தனை
இழுதை யேன்மறந் தெங்ஙன முய்வனே. அ

காரு லாமலர்க் கொன்றையந் தாரனை
வாரு லாமுலை மங்கை மணாளனைத்
தேரு லாவிய 'தில்லையுட் கூத்தனை
ஆர்கி லாவமு தைமறந் துய்வனே. சு

ஓங்கு மால்வரை யேந்தலுற் றான்சிரம்
வீங்கி விம்முற வூன்றிய தாளினான்
றேங்கு நீர்வயல் சூழ்தில்லைக் கூத்தனைப்
பாங்கி லாத்தொண்ட னேன்மறந் துய்வனே. ய

திருச்சிற்றம்பலம்

---

**பதிக வரலாறு :**

திருவேட்களம், திருக்கழிப்பாலை என்னுந் திருப்பதிகளை வணங்கிய திருநாவுக்கரசுநாயனார் மீண்டுந் திருக்கோயிலை (சிதம்பரத்தை) வணங்க விரும்பி எழுந்தருளும்போது 'பனைக்கை முமமத வேழம்' என்னுமித் திருப்பதிகத்தை எடுத்து 'அம்பலக் கூத்தனைத் தினைத் தனைப் பொழுதும் மறந்துய்வனோ' என்று பாடிக்கொண்டே திருத்தில்லையை யடைந்தார்.

## திருநெல்வாயிலரத்துறை                    பதிகம் ௧௧௭

### திருக்குறுந்தொகை

**திருச்சிற்றம்பலம்**

கடவு ளைக்கட லுள்ளெழு நஞ்சுண்ட
உடலு ளானையொப் பாரியி லாதவெம்
அடலு ளானை யரத்துறை மேவிய
சுடரு ளானைக்கண் டீர்நாந் தொழுவதே. ௧

கரும்பொப் பானைக் கரும்பினிற் கட்டியை
விரும்பொப் பானைவிண் ணோரு மறிகிலா
அரும்பொப் பானை யரத்துறை மேவிய
சுரும்பொப் பானைக்கண் டீர்நாந் தொழுவதே. ௨

ஏறொப் பானையெல் லாவுயிர்க் கும்மிறை
வேறொப் பானைவிண் ணோரு மறிகிலா
ஆறொப் பானை யரத்துறை மேவிய
ஊறொப் பானைக்கண் டீர்நாந் தொழுவதே. ௩

பரப்பொப் பானைப் பகலிரு ணன்னிலா
இரப்பொப் பானை யிளமதி சூடிய
அரப்பொப் பானை யரத்துறை மேவிய
சுரப்பொப் பானைக்கண் டீர்நாந் தொழுவதே. ௪

நெய்யொப் பானைநெய் யிற்சுடர் போல்வதோர்
மெய்யொப் பானைவிண் ணோரு மறிகிலார்
ஐயொப் பானை யரத்துறை மேவிய
கையொப் பானைக்கண் டீர்நாந் தொழுவதே. ௫

நெதியொப் பானை நெதியிற் கிழவனை
விதியொப் பானைவிண் ணோரு மறிகிலார்
அதியொப் பானை யரத்துறை மேவிய
கதியொப் பானைக்கண் டீர்நாந் தொழுவதே. ௬

புனலொப் பானைப் பொருந்தலர் தம்மையே
மினலொப் பானைவிண் ணேரு மறிகிலார்
அனலொப் பானை யரத்துறை மேவிய
கனலொப் பானைக்கண் டீர்நாந் தொழுவதே. ௭

பொன்னைப் பானைப்பொன் னிற்சுடர் போல்வதோர்
மின்னைப் பானைவிண் ணேரு மறிகிலார்
அன்னைப் பானை யரத்துறை மேவிய
தன்னைப் பானைக்கண் டீர்நாந் தொழுவதே. ௮

காழி யானைக் கனவிடை யூருமெய்
வாழி யானைவல் லோருமென் றின்னவர்
ஆழி யான்பிர மற்கு மரத்துறை
ஊழி யானைக்கண் டீர்நாந் தொழுவதே. ௯

கலையொப் பானைக்கற் றார்க்கோ ரமுதினை
மலையொப் பானை மணிமுடி யூன்றிய
அலையொப் பானை யரத்துறை மேவிய
நிலையொப் பானைக்கண் டீர்நாந் தொழுவதே. ௰

திருச்சிற்றம்பலம்

இது நடுநாட்டிலுள்ளது.
இறைவன் - அரத்துறைநாதர்; இறைவி - ஆனந்தநாயகி.



## திருவண்ணாமலை பதிகம் ௧௧௮

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

வட்ட னைம்மதி சூடியை வானவர்
சிட்ட னைத்திரு வண்ணா மலையனை
இட்ட னையிகழ்ந் தார்புர மூன்றையும்
அட்ட னையடி யேன்மறந் துய்வனோ. ௧

வானனைம்மதி சூடிய மைந்தனைத்
தேனனைத்திரு வண்ணா மலையனை
ஏனனையிகழ்ந் தார்புர மூன்றெய்த
ஆனனையடி யேன்மறந் துய்வனோ. ௨

மத்தனைம்மத யானை யுரித்தவெம்
சித்தனைத்திரு வண்ணா மலையனை
முத்தனைம்முனிந் தார்புரமூன் றெய்த
அத்தனையடி யேன்மறந் துய்வனோ. ௩

காற்றனைக்கலக் கும்வினை போயறத்
தேற்றனைத்திரு வண்ணா மலையனைக்
கூற்றனைக்கொடி யார்புர மூன்றெய்த
ஆற்றனையடி யேன்மறந் துய்வனோ. ௪

மின்னனைவினை தீர்த்தெனை யாட்கொண்ட
தென்னனைத்திரு வண்ணா மலையனை
என்னனையிகழ்ந் தார்புர மூன்றெய்த
அன்னனையடி யேன்மறந் துய்வனோ. ௫

மன்றனைம்மதி யாதவன் வேள்விமேல்
சென்றனைத்திரு வண்ணா மலையனை
வென்றனைவெகுண் டார்புர மூன்றையும்
கொன்றனைக்கொடி யேன்மறந் துய்வனோ. ௬

வீரனைவிட முண்டனை விண்ணவர்
தீரனைத்திரு வண்ணா மலையனை
ஊரனையுண ரார்புர மூன்றெய்த
ஆரனையடி யேன்மறந் துய்வனோ. ௭

கருவினைக்கடல் வாய்விட முண்டவெம்
திருவினைத்திரு வண்ணா மலையனை
உருவினையுண ரார்புர மூன்றெய்த
அருவினையடி யேன்மறந் துய்வனோ. ௮

அருத்த னையர வைந்தலை நாகத்தைத்
திருத்த னைத்திரு வண்ணா மலையனைக்
கருத்த னைக்கடி யார்புர மூன்றெய்த
அருத்த னையடி யேன்மறந் துய்வனே.

அரக்க னையல றவ்விர லூன்றிய
திருத்த னைத்திரு வண்ணா மலையனை
இரக்க மாயென் னுடலுறு நோய்களைத்
துரக்க னைத்தொண்ட னேன்மறந் துய்வனே.

திருச்சிற்றம்பலம்



## திருவண்ணாமலை பதிகம் ககக

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பட்டி யேறுகந் தேறிப் பலவிலம்
இட்ட மாக விரந்துண் டுழிதரும்
அட்ட மூர்த்தியண் ணாமலை கைதொழக்
கெட்டுப் போம்வினை கேடில்லை காண்மினே.

பெற்ற மேறுவர் பெய்பலிக் கென்றவர்
சுற்ற மாமிகு தொல்புக ழாளொடும்
அற்றந் தீர்க்குமண் ணாமலை கைதொழ
நற்ற வத்தொடு ஞானத் திருப்பரே.

பல்லி லோடுகை யேந்திப் பலவிலம்
ஒல்லை சென்றுணங் கல்கவர் வாரவர்
அல்லல் தீர்க்குமண் ணாமலை கைதொழ
நல்ல வாயின நம்மை யடையுமே.

பாடிச் சென்று பலிக்கென்று நின்றவர்
ஓடிப் போயினர் செய்வதொன் றென்கொலோ
ஆடிப் பாடியண் ணாமலை கைதொழ
ஓடிப் போகுநம் மேலைவி னைகளே.

தேடிச் சென்று திருந்தடி யேத்துமின்
நாடி வந்தவர் நம்மையு மாட்கொள்வர்
ஆடிப் பாடியண் ணாமலை கைதொழ
ஓடிப் போநம துள்ள வினைகளே. ரு

கட்டி யொக்குங் கரும்பி னிடைத்துணி
வெட்டி வீணைகள் பாடும் விகிர்தனார்
அட்ட மூர்த்தியண் ணாமலை மேவிய
நட்ட மாடியை நண்ணநன் காகுமே. சா

கோணிக் கொண்டையர் வேடமுன் கொண்டவர்
பாணி நட்டங்க ளாடும் பரமனார்
ஆணிப் பொன்னனண் ணாமலை கைதொழப்
பேணி நின்ற பெருவினை போகுமே. எ

கண்டந் தான்கறுத் தான்கால னாருயிர்
பண்டு கால்கொடு பாய்ந்த பரமனார்
அண்டத் தோங்குமண் ணாமலை கைதொழ
விண்டு போகுநம் மேலை வினைகளே. அ

முந்திச் சென்றுமுப் போதும் வணங்குமின்
அந்தி வாயொளி யான்றனண் ணாமலை
சிந்தி யாவெழு வார்வினை தீர்த்திடும்
கந்த மாமலர் சூடுங் கருத்தனே. கூ

மறையி னானொடு மாலவன் காண்கிலா
நிறையு நீர்மையு நின்றருள் செய்தவன்
உறையு மாண்பினண் ணாமலை கைதொழப்
பறையு நாஞ்செய்த பாவங்க ளானவே. ω

திருச்சிற்றம்பலம்

திருவாரூர் பதிகம் ௬௨

## திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

எப்போ தும்மிறை யும்மற வாதுநீர்
முப்போ தும்பிர மன்முரு ழ நின்றவன்
செப்போ தும்பொனின் மேனிச் சிவனவன்
அப்போ தைக்கஞ்ச லென்னுமா ரூரனே.

சடையின் மேலுமொர் தையலை வைத்தவர்
அடைகி லாவர வையரை யார்த்தவர்
படையி னேர்தடங் கண்ணுமை பாகமா
அடைவர் போலிடு காடரா ரூரரே.

விண்ட வெண்டலை யேகல னாகவே
கொண்ட கம்பலி தேருங் குழகனார்
துண்ட வெண்பிறை வைத்த விறையவர்
அண்ட வாணர்க் கருளுமா ரூரரே.

விடையு மேறுவர் வெண்டலை யிற்பலி
கடைக டோறுந் திரியுமெங் கண்ணுதல்
உடையுஞ் சீரை யுறைவது காட்டிடை
அடைவர் போலரங் காகவா ரூரரே.

துளைக்கை வேழத் துரியுடல் போர்த்தவர்
வளைக்கை யாளையொர் பாக மகிழ்வெய்தித்
திளைக்குந் திங்கட் சடையிற் றிசைமுழு
தளக்குஞ் சிந்தையர் போலுமா ரூரரே.

பண்ணி னின்மொழி யாளையொர் பாகமா
விண்ணி னார்விளங் கும்மதி சூடியே
சுண்ண நீறுமெய்ப் பூசிச் சுடலையின்
அண்ணி யாடுவர் போலுமா ரூரரே.

மட்டு வார்குழ லாளொடு மால்விடை
இட்ட மாவுகந் தேறு மிறைவனார்
கட்டு வாங்கங் கனன்மழு மான்றனோ
டட்ட மாம்புய மாகுமா ரூரரே. ௭

தேய்ந்த திங்கட் கமழ்சடை யன்கனல்
ஏந்தி யெல்லியு ளாடு மிறைவனார்
காய்ந்து காமனை நோக்கின கண்ணினார்
ஆய்ந்த நான்மறை யோதுமா ரூரரே. ௮

உண்டு நஞ்சுகண் டத்து ளடக்கியங்
கிண்டை செஞ்சடை வைத்த வியல்பினான்
கொண்ட கோவண வாடையன் கூரெரி
அண்ட வாண ரடையுமா ரூரரே. ௯

மாலு நான்முக னும்மறி கிற்கிலார்
கால னைய வவனைக் கடந்திட்டுச்
சூல மான்மழு வேந்திய கையினார்
ஆல முண்டழ காயவா ரூரரே. ௰

திருச்சிற்றம்பலம்



## திருவாரூர்　　　　பதிகம் கஉக

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

கொக்க ரைகுழல் வீணை கொடுகொட்டி
பக்க மேபகு வாயன பூதங்கள்
ஒக்க வாட லுகந்துடன் கூத்தராய்
அக்கி னோடர வார்ப்பரா ரூரரே. ௧

எந்த மாதவஞ் செய்தனை நெஞ்சமே
பந்தம் வீடவை யாய பராபரன்
அந்த மில்புக ழாரூ ரரனெறி
சிந்தை யுள்ளுஞ் சிரத்துளுந் தங்கவே. ௨

வண்டு லாமலர் கொண்டு வளர்சடைக்
கிண்டை மாலை புனைந்து மிராப்பகல்
தொண்ட ராகித் தொடர்ந்து விடாதவர்க்
கண்ட மாளவும் வைப்பரா ரூரரே. ௩

துன்பெ லாமற நீங்கிச் சுபத்தராய்
என்பெ லாநெக் கிராப்பக லேத்திநின்
றின்ப ராய்நினைந் தென்று மிடையறு
அன்ப ராமவர்க் கன்பரா ரூரரே. ௪

முருட்டு மெத்தையின் முன்கிடத் தாமுனம்
அரட்ட ரைவரை யாசறுத் திட்டுநீர்
முரட்ட டித்தவத் தக்கன்றன் வேள்வியை
அரட்ட டக்கித னாரூ ரடைமினே. ௫

எம்மை யாரிலை யானு முளேனலேன்
எம்மை யாரு மிதுசெய வல்லரே
அம்மை யாரெனக் கென்றென் றரற்றினேற்
கம்மை யாரைத்தந் தாராரூ ரையரே. ௬

தண்ட வாளியைத் தக்கன்றன் வேள்விசைச்
செண்ட தாடிய தேவ ரகண்டனைக்
கண்டு கண்டிவள் காதலித் தன்பதாய்க்
கொண்டி யாயின வாறென்றன் கோதையே. ௭

இவண மைப்பல பேசத் தொடங்கினாள்
அவண மன்றெனி லாரூ ரரனெனும்
பவனி வீதி விடங்கனைக் கண்டிவள்
தவனி யாயின வாறென்றன் றையலே.

நீரைச் செஞ்சடை வைத்த நிமலனார்
காரொத் தமிடற் றர்கனல் வாயரா
ஆரத் தருறை யும்மணி யாரூரைத்
தூரத் தேதொழு வார்வினை தூளியே. க௯

உள்ள மேயொ ருறுதி யுரைப்பனன்
வெள்ளந் தாங்கு விரிசடை வேதியன்
அள்ளல் நீர்வய லாரூ ரமர்ந்தவெம்
வள்ளல் சேவடி வாழ்த்தி வணங்கிடே. ௰

விண்ட மாமலர் மேலுறை வானொடும்
கொண்டல் வண்ணனுங் கூடி யறிகிலா
அண்ட வாணன்ற னாரூ ரடிதொழப்
பண்டை வல்வினை நில்லா பறையுமே. கக

மையு லாவிய கண்டத்த னண்டத்தன்
கையு லாவிய சூலத்தன் கண்ணுதல்
ஐய னாரூ ரடிதொழு வார்க்கெலாம்
உய்ய லாமல்ல லொன்றிலை காண்மினே. கஉ

திருச்சிற்றம்பலம்



## திருஅன்னியூர் பதிகம் கஉஉ

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பாற லைத்த படுவெண் டலையினன்
நீற லைத்தசெம் மேனியன் நேரிழை
கூற லைத்தமெய் கோளர வாட்டிய
ஆற லைத்தச டையன்னி யூரரே. க

பண்டொத் தமொழி யாளையொர் பாகமாய்
இண்டைச் செஞ்சடை யன்னிருள் சேர்ந்ததோர்
கண்டத் தன்கரி யின்னுரி போர்த்தவன்
அண்டத் தப்புறத் தானன்னி யூரரே. உ

பரவி நாளும் பணிந்தவர் தம்வினை
துரவை யாகத் துடைப்பவர் தம்மிடம்
குரவ நாறுங் குழலுமை கூறராய்
அரவ மாட்டுவர் போலன்னி யூரரே. ௩

வேத கீதர்விண் ணோர்க்கு முயர்ந்தவர்
சோதி வெண்பிறை துன்று சடைக்கணி
நாதர் நீதியி னலடி யார்தமக்
காதி யாகிநின் றரன்னி யூரரே. ௪

எம்பி ரானிமை யோர்க டமக்கெலாம்
இன்ப ராகி யிருந்தவெம் மீசனார்
துன்ப வல்வினை போகத் தொழுமவர்க்
கன்ப ராகிநின் றரன்னி யூரரே. ௫

வெந்த நீறுமெய் பூசுநன் மேனியர்
கந்த மாமலர் சூடுங் கருத்தினர்
சிந்தை யார்சிவ னார்செய்ய தீவண்ணர்
அந்த ணாளர்கண் டரன்னி யூரரே. ௬

ஊனை யார்தலை யிற்பலி கொண்டுழல்
வானை வானவர் தாங்கள் வணங்கவே
தேனை யார்குழ லாளையொர் பாகமா
ஆனை யீருரி யாரன்னி யூரரே. ௭

காலை போய்ப்பலி தேர்வர்கண் ணார்நெற்றி
மேலை வானவர் வந்து விரும்பிய
சோலை சூழ்புறங் காடரங் காகவே
ஆலின் கீழறத் தாரன்னி யூரரே. ௮

எரிகொண் மேனிய ரென்பணிந் தின்பராய்த்
திரியு மூவெயி றீயெழச் செற்றவர்
கரிய மாலொடு நான்முகன் காண்பதற்
கரிய ராகிநின் றூரன்னி யூரரே. கூ

வஞ்ச ரக்கன் கரமுஞ் சிரத்தொடும்
அஞ்சு மஞ்சுமொ ராறுநான் கும்மிறப்
பஞ்சின் மெல்விர லாலடர்த் தாயிழை
அஞ்ச லஞ்சலென் றூரன்னி யூரரே. ௰

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.
இறைவன் - ஆபத்சகாயர்; இறைவி - பெரியநாயகி.



## திருமறைக்காடு பதிகம் கஉசு

திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

ஓத மால்கடல் பாவி யுலகெலாம்
மாத ரார்வலங் கொண்மறைக் காடரோ
காதல் செய்து கருதப் படுமவர்
பாத மேத்தப் பறையுநம் பாவமே. க

பூக்குந் தாழை புறணி யருகெலாம்
ஆக்கந் தானுடை மாமறைக் காடரோ
ஆர்க்குங் காண்பரி யீரடி யார்தம்மை
நோக்கிக் காண்பது நும்பணி செய்பிலே. உ

புன்னை ஞாழல் புறணி யருகெலாம்
மன்னி னார்வலங் கொண்மறைக் காடரோ
அன்ன மென்னடை யாளையொர் பாகமாச்
சின்ன வேட முகப்பது செல்வமே. ௩

அட்ட மாமலர் சூடி யடும்பொடு
வட்டப் புன்சடை மாமறைக் காடரோ
நட்ட மாடியு நான்மறை பாடியும்
இட்ட மாக விருக்கு மிடமிதே. ௪

நெய்த லாம்பல் நிறைவயல் சூழ்தரும்
மெய்யி னார்வலங் கொண்மறைக் காடரோ
தையல் பாகங்கொண் டீர்கவர் புன்சடைப்
பைதல் வெண்பிறை பாம்புடன் வைப்பதே. ௫

துஞ்சும் போதுந் துயிலின்றி யேத்துவார்
வஞ்சின் றிவலங் கொண்மறைக் காடரோ
பஞ்சின் மெல்லடிப் பாவை பலிகொணர்ந்
தஞ்சி நிற்பது மைந்தலை நாகமே. ௬

திருவி னார்செல்வ மல்கு விழாவணி
மருவி னார்வலங் கொண்மறைக் காடரோ
உருவி னாளுமை யாளையொர் பாகமாய்
மருவி னாய்கங்கை யைச்சென்னி தன்னிலே. ௭

சங்கு வந்தலைக் குந்தடங் கானல்வாய்
வங்க மார்வலங் கொண்மறைக் காடரோ
கங்கை செஞ்சடை வைப்பது மன்றியே
அங்கை யில்லன லேந்த லழகிதே. ௮

* * * * * . ௯

குறைக்காட் டான்விட்ட தேர்குத்த மாமலை
இறைக்காட் டியெடுத் தான்றலை யீரைந்தும்
மறைக்காட் டானிறை யூன்றலும் வாய்விட்டான்
இறைக்காட் டாயெம்பி ரானுனை யேத்தவே. ௰

திருச்சிற்றம்பலம்

## திருமறைக்காடு

பதிகம் கஉச

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பண்ணி னேர்மொழி யாளுமை பங்கரோ
மண்ணி னார்வலஞ் செய்ம்மறைக் காடரோ
கண்ணி னாலுமைக் காணக் கதவினைத்
திண்ண மாகத் திறந்தருள் செய்ம்மினே. க

ஈண்டு செஞ்சடை யாகத்து ளீசரோ
மூண்ட கார்முகி லின்முறிக் கண்டரோ
ஆண்டு கொண்டநீ ரேயருள் செய்திடும்
நீண்ட மாக்கத வின்வலி நீக்குமே. உ

அட்ட மூர்த்திய தாகிய வப்பரோ
துட்டர் வான்புரஞ் சுட்ட சுவண்டரோ
பட்டங் கட்டிய சென்னிப் பரமரோ
சட்ட விக்கத வந்திறப் பிம்மினே. ங

அரிய நான்மறை யோதிய நாவரோ
பெரிய வான்புரஞ் சுட்டசு வண்டரோ
விரிகொள் கோவண வாடை விருத்தரோ
பெரிய வான்கத வம்பிரி விக்கவே. ச

மலையி னீடிருக் கும்மறைக் காடரோ
கலைகள் வந்திறைஞ் சுங்கழ லேத்தரோ
விலையின் மாமணி வண்ண வுருவரோ
தொலைவி லாக்கத வந்துணை நீக்குமே. ரு

பூக்குந் தாழை புறணி யருகெலாம்
ஆக்குந் தண்பொழில் சூழ்மறைக் காடரோ
ஆர்க்குங் காண்பரி யீரடி கேளுமை
நோக்கிக் காணக் கதவைத் திறவுமே. சா

வெந்த வெண்பொடிப் பூசும் விகிர்தரோ
அந்த மில்லி யணிமறைக் காடரோ
எந்தை நீயடி யார்வந் திறைஞ்சிட
இந்த மாக்கத வம்பிணி நீக்குமே. எ

ஆறு சூடு மணிமறைக் காடரோ
கூறு மாதுமைக் கீந்த குழகரோ
ஏற தேறிய வெம்பெரு மானிந்த
மாறி லாக்கத வம்வலி நீக்குமே அ

சுண்ண வெண்பொடிப் பூசுஞ் சுவண்டரோ
பண்ணி யேறுகந் தேறும் பரமரோ
அண்ண லாதி யணிமறைக் காடரோ
திண்ண மாக்கத வந்திறப் பிம்மினே. கூ

விண்ணு ளார்விரும் பியெதிர் கொள்ளவே
மண்ணு ளார்வணங் கும்மறைக் காடரோ
கண்ணி னாலுமைக் காணக் கதவினைத்
திண்ண மாகத் திறந்தருள் செய்ம்மினே. ௰

அரக்க னைவிர லாலடர்த் திட்டநீர்
இரக்க மொன்றிலீ ரெம்பெரு மானிரே
சுரக்கும் புன்னைகள் சூழ்மறைக் காடரோ
சரக்க விக்கத வந்திறப் பிம்மினே. கக

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

**இறைவன் - மறைக்காட்டீசர்; இறைவி - யாழைப்பழித்தமொழியம்மை.**

---

**பதிக வரலாறு :**

**திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரும், திருநாவுக்கரசுநாயனாரும் திருமறைக்காட்டை யடைந்து திருக்கோயிலிற்சென்று வலம்வந்து கடவுள் திருமுன் சென்று, முன்னுள் மறைகள் வழிபாடுசெய்து திருக் காப்பிட்ட திருக்கதவம் திறக்கப் பெறாமையால், அங்குள்ளவர்கள் வேறு வழியாற்சென்று கடவுளை வணங்குகின்றார்கள் என்பதைக் கேட்டார் கள். அப்போது பிள்ளையார் அரசரை, அப்பரே ! யாம் எப்படியும்**

இறைவனை நேர்முகத்துத் திருவாயிலைத் திறந்தே வணங்கவேண்டும். ஆதலால் தேவரீர் இத் திருக்கதவு திறக்கப்பாடும் என்றருள, அரசுகளும் அவ்வாறே 'பண்ணினேர்மொழியாள்' என்னு மித் திருக்குறுந்தொகையை யெடுத்துப் பத்துப் பாட்டுப் பாடியும் கதவு திறக்கப்படாமையால், 'இரக்கமொன்றிலீர்' என்று பாடி யிறைஞ்சுதலும் திருக்கதவு திறக்கப்பட, நாயன்மார் இருவரும் உள்ளே சென்று கடவுளை வணங்கினார்கள்.



## திருமீயச்சூரிளங்கோயில்                                                 பதிகம் ௧௨௬

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

தோற்றுங் கோயிலுந் தோன்றிய கோயிலும்
வேற்றுக் கோயில் பலவுள மீயச்சூர்க்
கூற்றம் பாய்ந்த குளிர்புன் சடையரற்
கேற்றங் கோயில்கண் டீரிளங் கோயிலே. ௧

வந்த னையடைக் கும்மடித் தொண்டர்கள்
பந்த னைசெய்து பாவிக்க நின்றவன்
சிந்த னைதிருத் துந்திரு மீயச்சூர்
எந்த மையுடை யாரிளங் கோயிலே. ௨

பஞ்ச மந்திர மோதும் பரமனார்
அஞ்ச வானை யுரித்தன லாடுவார்
நெஞ்சம் வாழி நினைந்திரு மீயச்சூர்
எந்த மையுடை யாரிளங் கோயிலே. ௩

நாறு மல்லிகை கூவிளஞ் செண்பகம்
வேறு வேறு விரித்த சடையிடை
ஆறு கொண்டுகந் தான்றிரு மீயச்சூர்
ஏறு கொண்டுகந் தாரிளங் கோயிலே. ௪

வெவ்வ வண்ணத்து நாகம் வெருவவே
கவ்வ வண்ணக் கனல்விரித் தாடுவர்
செவ்வ வண்ணந் திகழ்திரு மீயச்சூர்
எவ்வ வண்ணம் பிரானிளங் கோயிலே. ௫

பொன்னங் கொன்றையும் பூவணி மாலையும்
பின்னுஞ் செஞ்சடை மேற்பிறை சூடிற்று
மின்னு மேகலை யாளொடு மீயச்சூர்
இன்ன நாளக லாரிளங் கோயிலே. ௬

படைகொள் பூதத்தன் பைங்கொன்றைத் தாரினன்
சடைகொள் வெள்ளத்தன் சாந்தவெண் ணீற்றினன்
விடைகொ ளூர்தியி னன்திரு மீயச்சூர்
இடைகொண் டேத்தநின் றாரிளங் கோயிலே. ௭

ஆறு கொண்ட சடையினர் தாமுமோர்
வேறு கொண்டதொர் வேடத்த ராகிலும்
கூறு கொண்டுகந் தாளொடு மீயச்சூர்
ஏறு கொண்டுகந் தாரிளங் கோயிலே. ௮

வேதத் தானென்பர் வேள்வியு ளானென்பர்
பூதத் தானென்பர் புண்ணியன் றன்னையே
கீதத் தான்கிள ருந்திரு மீயச்சூர்
ஏதந் தீர்க்கநின் றாரிளங் கோயிலே. ௯

கடுக்கண் டன்கயி லாய மலைதனை
எடுக்க லுற்ற விரா்வண னீடற
விடுக்க ணின்றி வெகுண்டவன் மீயச்சூர்
இடுக்கண் டீர்க்கநின் றாரிளங் கோயிலே. ௰

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - சகலபுவனேசர்; இறைவி - மின்னுமேகலையாள்.

## திருவீழிமிழலை                    பதிகம் ௧௨௬

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

கரைந்து கைதொழு வாரையுங் காதலன்
வரைந்து வைதெழு வாரையும் வாடலன்
நிரந்த பாரிடத் தோடவர் நித்தலும்
விரைந்து போவது வீழி மிழலைக்கே. ௧

ஏற்று வெல்கொடி யீசன்ற னாதிரை
நாற்றஞ் சூடுவர் நன்னறுந் திங்களார்
நீற்றுச் சந்தன வெள்ளை விரவலார்
வேற்றுக் கோலங்கொள் வீழி மிழலையே. ௨

புனைபொற் சூலத்தன் போர்விடை யூர்தியான்
வினைவெ னாகத்தன் வெண்மழு வாளினான்
நினைய நின்றவ னீசனை யேயெனா
வினையி லார்தொழும் வீழி மிழலையே. ௩

மாடத் தாடு மனத்துடன் வைத்தவர்
கோடத் தார்குருக் கேத்திரத் தார்பலர்
பாடத் தார்பழிப் பார்பழிப் பல்லதோர்
வேடத் தார்தொழும் வீழி மிழலையே. ௪

எடுத்த வெல்கொடி யேறுடை யான்றமர்
உடுப்பர் கோவண முண்பது பிச்சையே
கெடுப்ப தாவது கீழ்நின்ற வல்வினை
விடுத்துப் போவது வீழி மிழலைக்கே. ௫

குழலை யாழ்மொழி யாரிசை வேட்கையால்
உழலை யாக்கையை யூனு முணர்விலீர்
தழலை நீர்மடிக் கொள்ளன்மின் சாற்றினோம்
மிழலை யானடி சாரவிண் ணாள்வரே. ௬

தீரன் றீத்திர ளன்சடைத் தங்கிய
நீர னாடிய நீற்றன்வண் டார்கொன்றைத்
தாரன் மாலையன் றண்ணறுங் கண்ணியன்
வீரன் வீழி மிழலை விகிர்தனே.

எரிய னாிறை* யாரிடு காட்டிடை
நரியி னார்பரி யாமகிழ் கின்றதோர்
பெரிய னார்தம் பிறப்பொடு சாதலை
விரியி னார்தொழும் வீழி மிழலையே.

நீண்ட சூழ்சடை மேலொர் நிலாமதி
காண்டு சேவடி மேலோர் கனைகழல்
வேண்டு வாரவர் வீதி புகுந்திலர்
மீண்டும் போவது வீழி மிழலைக்கே.

பாலை யாழொடு செவ்வழி பண்கொள
மாலை வானவர் வந்து வழிபடும்
ஆலை யாரழ லந்தண ராகுதி
வேலை யார்தொழும் வீழி மிழலையே.

மழலை யேற்று மணாளன் றிருமலை
சுழல வார்த்தெடுத் தான்முடி தோளிறக்
கழல்கொள் காலிற் றிருவிர லூன்றலும்
மிழலை யானடி வாழ்கென விட்டதே.

திருச்சிற்றம்பலம்



## திருவீழிமிழலை பதிகம் கஉ௪

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

என்பொ னேயிமை யோர்தொழு பைங்கழல்
நன்பொ னேநலந் தீங்கறி வொன்றிலேன்
செம்பொ னேதிரு வீழி மிழலையுள்
அன்ப னேயடி யேனைக் குறிக்கொளே.

---

(பா - ம்) *எரியி னாிறை.

கண்ணி னுற்களி கூரக்கை யாற்றொழு
தெண்ணு மாறறி யாதிளைப் பேன்றனை
விண்ணு ளார்தொழும் வீழி மிழலையுள்
அண்ண லேயடி யேனைக் குறிக்கொளே. உ

ஞால மேவிசும் பேநலந் தீமையே
கால மேகருத் தேகருத் தாற்றொழும்
சீல மேதிரு வீழி மிழலையுள்
கோல மேயடி யேனைக் குறிக்கொளே. ந

முத்த னேமுதல் வாமுகி ழும்முளை
ஒத்த னேயொரு வாவுரு வாகிய
சித்த னேதிரு வீழி மிழலையுள்
அத்த னேயடி யேனைக் குறிக்கொளே. ச

கருவ னேகரு வாய்த்தெளி வார்க்கெலாம்
ஒருவ னேயுயிர்ப் பாயுணர் வாய்நின்ற
திருவ னேதிரு வீழி மிழலையுள்
குருவ னேயடி யேனைக் குறிக்கொளே. ரு

காத்த னேபொழி லேழையுங் காதலால்
ஆத்த னேயம ரர்க்கயன் றன்றலை
சேர்த்த னேதிரு வீழி மிழலையுள்
கூத்த னேயடி யேனைக் குறிக்கொளே. சா

நீதி வானவர் நித்த னியமஞ்செய்
தோதி வானவ ரும்முண ராததோர்
வேதி யாவிகிர் தாதிரு வீழியுள்
ஆதி யேயடி யேனைக் குறிக்கொளே. எ

பழகி நின்னடி சூடிய பாலனைக்
கழகின் மேல்வைத்த காலனைச் சாடிய
அழக னேயணி வீழி மிழலையுள்
குழக னேயடி யேனைக் குறிக்கொளே. அ

அண்ட வானவர் கூடிக் கடைந்தநஞ்
சுண்ட வானவ னேயுணர் வொன்றிலேன்
விண்ட வான்பொழில் வீழி மிழலையுள்
கொண்ட னேயடி யேனைக் குறிக்கொளே. ௯

ஒருத்த னேங்கலைத் தாங்கலுற் றானுரம்
வருத்தி னாய்வஞ்ச னேன்மன மன்னிய
திருத்த னேதிரு வீழி மிழலையுள்
ஒருத்த னேயடி யேனைக் குறிக்கொளே. ௰

திருச்சிற்றம்பலம்



## திருவிடைமருதூர் பதிகம் ௧௨௮

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பாச மொன்றில ராய்ப்பல பத்தர்கள்
வாச நாண்மலர் கொண்டடி வைகலும்
ஈச னெம்பெரு மானிடை மருதினில்
பூச நாம்புகு தும்புன லாடவே. ௧

மறையி னண்மலர் கொண்டடி வானவர்
முறையி னன்முனி கள்வழி பாடுசெய்
இறைவ னெம்பெரு மானிடை மருதினில்
உறையு மீசனை யுள்குமெ னுள்ளமே. ௨

கொன்றை மாலையுங் கூவிள மத்தமும்
சென்று சேரத் திகழ்சடை வைத்தவன்
என்று மெந்தை பிரானிடை மருதினை
நன்று கைதொழு வார்வினை நாசமே. ௩

இம்மை வானவர் செல்வம் விளைத்திடும்
அம்மை யேற்பிற வித்துயர் நீத்திடும்
எம்மை யாளு மிடைமரு தன்கழல்
செம்மை யேதொழு வார்வினை சிந்துமே. ச

வண்ட ணைந்தன வன்னியுங் கொன்றையும்
கொண்ட ணிந்த சடைமுடிக் கூத்தனார்
எண்டி சைக்கு மிடைமரு தாவென
விண்டு போயறு மேலை வினைகளே. ரு

ஏற தேறு மிடைமரு தீசனார்
கூறு வார்வினை தீர்க்குங் குழகனார்
ஆறு செஞ்சடை வைத்த வழகனார்க்
கூறி யூறி யுருகுமெ னுள்ளமே. சா

விண்ணு ளாரும் விரும்பப் படுபவர்
மண்ணு ளாரு மதிக்கப் படுபவர்
எண்ணி னார்பொழில் சூழிடை மருதினை
நண்ணி னாரைநண் ணாவினை நாசமே. எ

வெந்த வெண்பொடிப் பூசும் விகிர்தனார்
கந்த மாலைகள் சூடுங் கருத்தனார்
எந்தை யென்னிடை மருதினி லீசனைச்
சிந்தை யானினை வார்வினை தேயுமே. அ

வேத மோதும் விரிசடை யண்ணலார்
பூதம் பாடநின் றாடும் புனிதனார்
ஏதந் தீர்க்கு மிடைமரு தாவென்று
பாத மேத்தப் பறையுநம் பாவமே. கூ

கனியி னுங்கட்டி பட்ட கரும்பினும்
பனிம லர்க்குழற் பாவைநல் லாரினும்
தனிமு டிகவித் தாளு மரசினும்
இனியன் றன்னடைந் தார்க்கிடை மருதனே. ய

முற்றி லாமதி சூடு முதல்வனார்
ஒற்றி னார்மலை யாலரக் கன்முடி
எற்றி னார்கொடி யாரிடை மருதினைப்
பற்றி னாரைப்பற் றாவினை பாவமே.

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - மருதப்பர் ; இறைவி - நன்முலைநாயகி.



## திருவிடைமருதூர் பதிகம் கஉகூ

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பறையி னோசையும் பாடலி னோசையும்
மறையி னோசையும் வைகு மயலெலாம்
இறைவ னெங்கள் பிரானிடை மருதினில்
உறையு மீசனை யுள்குமென் னுள்ளமே. க

மனத்துண் மாயனை மாசறு சோதியைப்
புனிற்றுப் பிள்ளைவெள் ளைம்மதி சூடியை
எனக்குத் தாயையெம் மானிடை மருதனை
நினைத்திட் டூறி நிறைந்தெதன் னுள்ளமே. உ

வண்ட லணைந்தன வன்னியு மத்தமும்
கொண்ட ணிந்த சடைமுடிக் கூத்தனை
எண்டி சைக்கு மிடைமரு தாவென
விண்டு போயறு மேலை வினைகளே. ங

துணையி லாமையிற் றூங்கிருட் பேய்களோ
டணைய லாவதெ மக்கரி தேயெனா
இணையி லாவிடை மாமரு தில்லெழு
பணையி லாகமஞ் சொல்லுந்தன் பாங்கிக்கே. ச

மண்ணை யுண்டமால் காணான் மலரடி
விண்ணை விண்டயன் காணான் வியன்முடி
மொண்ணை மாமரு தாவென்றென் மொய்குழல்
பண்ணை யாயமுந் தானும் பயிலுமே. ரு

மங்கை காணக்கொ டார்மண மாலையைக்
கங்கை காணக்கொ டார்முடிக் கண்ணியை
நங்கை மீரிடை மருதரீங் நங்கைக்கே
எங்கு வாங்கிக் கொடுத்தா ரிதழியே. சு

* * * * * . எ
* * * * * . அ
* * * * * . கூ
* * * * * . ய

திருச்சிற்றம்பலம்



## திருப்பேரெயில் பதிகம் கஙூ

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

மறையு மோதுவர் மான்மறிக் கையினர்
கறைகொள் கண்ட முடைய கபாலியார்
துறையும் போகுவர் தூயவெண் ணீற்றின
பிறையுஞ் சூடுவர் பேரெயி லாளரே.

கணக்கி லாரையுங் கற்றுவல் லாரையும்
வணக்கி லாநெறி கண்டுகொண் டாரையும்
தணக்கு வார்தணிப் பாரெப் பொருளையும்
பிணக்கு வாரவர் பேரெயி லாளரே.

சொரிவிப் பார்மழை சூழ்கதிர்த் திங்களை
விரிவிப் பார்வெயிற் பட்ட விளங்கொளி
எரிவிப் பார்தணிப் பாரெப் பொருளையும்
பிரிவிப் பாரவர் பேரெயி லாளரே. ௩

செறுவிப் பார்சிலை யான்மதி தீர்த்தங்கள்
உறுவிப் பார்பல பத்தர்க ளூழ்வினை
அறுவிப் பாரது வன்றியு நல்வினை
பெறுவிப் பாரவர் பேரெயி லாளரே. ௪

மற்றை யாரறி யார்மழு வாளினார்
பற்றி யாட்டியோ ரைந்தலைப் பாம்பரைச்
சுற்றி யாரவர் தூநெறி யான்மிகு
பெற்றி யாரவர் பேரெயி லாளரே. ௫

திருக்கு வார்குழற் செல்வன சேவடி
இருக்கு வாய்மொழி யாற்றனை யேத்துவார்
சுருக்கு வார்துயர் தோற்றங்க ளாற்றறப்
பெருக்கு வாரவர் பேரெயி லாளரே. ௬

முன்னை யார்மயி லூர்தி முருகவேள்
தன்னை யாரெனிற் றானோர் தலைமகன்
என்னை யாளு மிறையவ னெம்பிரான்
பின்னை யாரவர் பேரெயி லாளரே. ௭

உழைத்துந் துள்ளியு முள்ளத்து ளேயுரு
இழைத்து மெந்தை பிரானென் றிராப்பகல்
அழைக்கு மன்பின ராய வடியவர்
பிழைப்பு நீக்குவர் பேரெயி லாளரே. ௮

நீரு லாகிமிர் புன்சடை யாவெனா
எரு லாவநங் கன்றிறல் வாட்டிய
வாரு லாவன மென்முலை யாளொடும்
பேரு ளாரவர் பேரெயி லாளரே. ௯

பாணி யார்படு தம்பெயர்ந் தாடுவர்
தூணி யார்விச யற்கருள் செய்தவர்
மாணி யாய்மண் ணளந்தவ னான்முகன்
பேணி யாரவர் பேரெயி லாளரே. ௰

மதத்த வாளரக் கன்மணிப் புட்பகம்
சிதைக்க வேதிரு மாமலைக் கீழ்ப்புக்குப்
பதைத்தங் கார்த்தெடுத் தான்பத்து நீண்முடி
பிதக்க வூன்றிய பேரெயி லாளரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - ஜகதீச்சுரர்; இறைவி - பெண்ணமிர்தநாயகி.



## திருவெண்ணியூர் பதிகம் கஉஉ

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

முத்தி னைப்பவ ளத்தை முளைத்தவெம்
தொத்தி னைச்சுட ரைச்சுடர் போலொளிப்
பித்தி னைக்கொலு நஞ்சினை வானவர்
நித்த னைநெரு நற்கண்ட வெண்ணியே. ௧

வெண்ணித் தொன்னகர் மேயவெண் டிங்களார்
கண்ணித் தொத்த சடையர் கபாலியார்
எண்ணித் தம்மை நினைந்திருந் தேனுக்கு
அண்ணித் திட்டமு தாறுமென் னாவுக்கே. ௨

காற்றி னைக்கன லைக்கதிர் மாமணி
நீற்றி னைநினைப் பார்வினை நீக்கிடும்
கூற்றி னையுதைத் திட்ட குணமுடை
வீற்றி னைநெரு நற்கண்ட வெண்ணியே. ௩

நல்ல னைத்திகழ் நான்மறை யோதியைச்
சொல்ல னைச்சுட ரைச்சுடர் போலொளிர்
கல்ல னைக்கடி மாமதின் மூன்றெய்த
வில்ல னைநெரு நற்கண்ட வெண்ணியே. ௪

சுடரைப் போலொளிர் சுண்ணவெண் ணீற்றனை
அடருஞ் சென்னியில் வைத்த வமுதினைப்
படருஞ் செஞ்சடைப் பான்மதி சூடியை
இடரை நீக்கியை யான்கண்ட வெண்ணியே. ௫

பூத நாதனைப் பூம்புக லூரனைத்
தாதெ னத்தவ ழும்மதி சூடியை
நாத னைநல்ல நான்மறை யோதியை
வேத னைநெரு நற்கண்ட வெண்ணியே. ௬

ஒருத்தி யையொரு பாகத் தடக்கியும்
பொருத்தி யபுனி தன்புரி புன்சடைக்
கருத்த னைக்கறைக் கண்டனைக் கண்ணுதல்
நிருத்த னைநெரு நற்கண்ட வெண்ணியே. ௭

சடைய னைச்சரி கோவண வாடைகொண்
டுடைய னையுணர் வார்வினை தீர்த்திடும்
படைய னைமழு வாளொடு பாய்தரும்
விடைய னைநெரு நற்கண்ட வெண்ணியே. ௮

பொருப்ப னைப்புன லாளொடு புன்சடை
அருப்ப னையிளந் திங்களங் கண்ணியான்
பருப்ப தம்பர வித்தொழுந் தொண்டர்கள்
விருப்ப னைநெரு நற்கண்ட வெண்ணியே. ௯

சூல வஞ்சனை வல்லவெஞ் சுந்தரன்
கோல மாவருள் செய்ததோர் கொள்கையான்
கால னஞ்ச வுதைத்திருள் கண்டமாம்
வேலை நஞ்சனைக் கண்டது வெண்ணியே. ௰

இலையி னார்கொன்றை சூடிய வீசனார்
மலையி னலரக் கன்றிறல் வாட்டினார்
சிலையி னன்மதி லெய்தவன் வெண்ணியைத்
தலையி னாற்றொழு வார்வினை தாவுமே. கக

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - வெண்ணிநாதர்; இறைவி - அழகியநாயகி.



## திருக்கடம்பந்துறை                                                  பதிகம் கஙஉ

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

முற்றி லாமுலை யாளிவ ளாகிலும்
அற்றந் தீர்க்கு மறிவில ளாகிலும்
கற்றைச் செஞ்சடை யான்கடம் பந்துறைப்
பெற்ற மூர்தியென் றாளெங்கள் பேதையே. க

தனகி ருந்ததொர் தன்மைய ராகிலும்
முனகு தீரத் தொழுதெழு மின்களோ
கனகப் புன்சடை யான்கடம் பந்துறை
நினைய வல்லவர் நீள்விசும் பாள்வரே. உ

ஆரி யந்தமி ழோடிசை யானவன்
கூரி யகுணத் தார்குறி நின்றவன்
காரி கையுடை யான்கடம் பந்துறைச்
சீரி யல்பத்தர் சென்றடை மின்களே. ங

பண்ணி னின்மொழி கேட்கும் பரமனை
வண்ண நன்மல ரான்பல தேவரும்
கண்ண னும்மறி யான்கடம் பந்துறை
நண்ண நம்வினை யாயின நாசமே. ச

மறைகொண் டம்மனத் தானை மனத்துளே
நிறைகொண் டந்நெஞ்சி னுள்ளுற வைம்மினோ
கறைகொண் டானுறை யுங்கடம் பந்துறை
சிறைகொண் டவ்வினை தீரத் தொழுமினே. ௫

நங்கை பாகம்வைத் தந்நறுஞ் சோதியைப்
பங்க மின்றிப் பணிந்தெழு மின்களோ
கங்கைச் செஞ்சடை யான்கடம் பந்துறை
அங்க மோதி யரனுறை கின்றதே. ௬

அரிய நான்மறை யாறங்க மாயைந்து
புரியன் றேவர்க ளேத்தநஞ் சுண்டவன்
கரிய கண்டத்தி னன்கடம் பந்துறை
உரிய வாறு நினைமட நெஞ்சமே. ௭

பூமென் கோதை யுமையொரு பாகனை
ஓமஞ் செய்து முணர்மின்க ளுள்ளத்தால்
காமற் காய்ந்த பிரான்கடம் பந்துறை
நாம மேத்தநந் தீவினை நாசமே. ௮

பார ணங்கி வணங்கிப் பணிசெய
நார ணன்பிர மன்னறி யாததோர்
கார ணன்கடம் பந்துறை மேவிய
ஆர ணங்கொரு பாலுடை மைந்தனே. ௯

நூலா னன்று நினைமின்க ளேய்கெடப்
பாலா னஞ்சுட னாடும் பரமனார்
காலா லூன்றுகந் தான்கடம் பந்துறை
மேலா னுஞ்செய்த வல்வினை வீடுமே. ௰

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - கடம்பவனநாதர்; இறைவி - முற்றிலாமுலையாள்

திருக்கடம்பூர் பதிகம் கநடு

## திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

தளருங் கோளர வத்தொடு தண்மதி
வளருங் கோல வளர்சடை யார்க்கிடம்
கிளரும் பேரிசைக் கின்னரம் பாட்டறாக்
களருங் கார்க்கடம் பூர்க்கரக் கோயிலே. க

வெலவ லான்புல னைந்தொடு வேதமும்
சொலவ லான்சுழ லுந்தடு மாற்றமும்
அலவ லான்மனை யார்ந்தமென் றோளியைக்
கலவ லான்கடம் பூர்க்கரக் கோயிலே. உ

பொய்தொ ழாது புலியுரி யோன்பணி
செய்தெ ழாவெழு வார்பணி செய்தெழா
வைதெ ழாதெழு வாரவ ரெள்கநீர்
கைதொ ழாவெழு மின்கரக் கோயிலே. ங

துண்ணெ னுமனத் தாற்றொழு நெஞ்சமே
பண்ணி னுன்முனம் பாடலது செய்தே
எண்ணி லாரெயின் மூன்று மெரித்தழுக்
கண்ணி னுன்கடம் பூர்க்கரக் கோயிலே. ச

சுனையு ணீல மலரன கண்டத்தன்
புனையும் பொன்னிறக் கொன்றை புரிசடைக்
கனையும் பைங்கழ லான்கரக் கோயிலை
நினையு முள்ளத் தவர்வினை நீங்குமே. ரு

குணங்கள் சொல்லியுங் குற்றங்கள் பேசியும்
வணங்கி வாழ்த்துவ ரன்புடை யாரெலாம்
வணங்கி வான்மலர் கொண்டடி வைகலும்
கணங்கள் போற்றிசைக் குங்கரக் கோயிலே. சா

பண்ணி னார்மறை பல்பல பூசனை
மண்ணி னார்செய்வ தன்றியும் வைகலும்
விண்ணி னார்கள் வியக்கப் படுவன
கண்ணி னார்கடம் பூர்க்கரக் கோயிலே. ௭

அங்கை யாரழ லேந்திநின் றாடலன்
மங்கை பாட மகிழ்ந்துடன் வார்சடைக்
கங்கை யானுறை யுங்கரக் கோயிலைத்
தங்கை யாற்றொழு வார்வினை சாயுமே. ௮

நங்க டம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்க டம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே. ௯

பணங்கொள் பாற்கடற் பாம்பணை யானொடு
மணங்க மழ்மலர்த் தாமரை யானவன்
பிணங்கும் பேரழ லெம்பெரு மாற்கிடம்
கணங்கள் போற்றிசைக் குங்கரக் கோயிலே. ௰

வரைக்க ணுலஞ்சு தோளுடை யான்றலை
அரைக்க வூன்றி யருள்செய்த வீசனார்
திரைக்குந் தண்புனல் சூழ்கரக் கோயிலை
உரைக்கு முள்ளத் தவர்வினை போயுமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன்-அமுதகடேச்சுவரர்; இறைவி - சோதிமின்னம்மை.



ம்பூர் பதிகம் க௱ச

திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பரு மூவரு மாயவன்
ய குழக னுறைவிடம்
குதி கொள்ளும் பழனஞ்சூழ்
தாங்கடம் பூர்க்கரக் கோயிலே...

வன்னி மத்தம் வளரிளந் திங்களோர்
கன்னி யாளைக் கதிர்முடி வைத்தவன்
பொன்னின் மல்கு புணர்முலை யாளொடும்
மன்னி னான்கடம் பூர்க்கரக் கோயிலே.

இல்லக் கோலமு மிந்த விளமையும்
அல்லற் கோல மறுத்துய வல்லிரே
ஒல்லைச் சென்றடை யுங்கடம் பூர்நகர்ச்
செல்வக் கோயி றிருக்கரக் கோயிலே. ௩

வேறு சிந்தை யிலாதவர் தீவினை
கூறு செய்த குழக னுறைவிடம்
ஏறு செல்வத் திமையவர் தாந்தொழும்
ஆறு சேர்கடம் பூர்க்கரக் கோயிலே. ௪

திங்க டங்கிய செஞ்சடை மேலுமோர்
மங்கை தங்கு மணாள னிருப்பிடம்
பொங்கு சேர்மணற் புன்னையு ஞாழலும்
தெங்கு சேர்கடம் பூர்க்கரக் கோயிலே. ௫

மல்லை ஞாலத்து வாழு முயிர்க்கெலாம்
எல்லை யான பிரானா ரிருப்பிடம்
கொல்லை முல்லை கொழுந்தகை மல்லிகை
நல்ல சேர்கடம் பூர்க்கரக் கோயிலே. ௬

தளரும் வாளர வத்தொடு தண்மதி
வளரும் பொற்சடை யார்க்கிட மாவது
கிளரும் பேரொலி கின்னரம் பாட்டறாக்
களரி யார்கடம் பூர்க்கரக் கோயிலே. ௭

உற்றா ராயுற வாகி யுயிர்க்கெலாம்
பெற்றா ராய பிரானா ருறைவிடம்
முற்றார் மும்மதி லெய்த முதல்வனார்
கற்றார் சேர்கடம் பூர்க்கரக் கோயிலே. ௮

* * * * ௯

வெள்ளை நீறணி மேனி யவர்க்கெலாம்
உள்ள மாய பிரானு ருறைவிடம்
பிள்ளை வெண்பிறை சூடிய சென்னியான்
கள்வன் சேர்கடம் பூர்க்கரக் கோயிலே. ௰

பரப்பு நீரிலங் கைக்கிறை வன்னவன்
உரத்தி னலடிக் கல்லெடுக் கல்லுற
இரக்க மின்றி யிறைவிர லாற்றலை
அரக்கி னன்கடம் பூர்க்கரக் கோயிலே. ௧௧

திருச்சிற்றம்பலம்



## திருவின்னம்பர் பதிகம் ௧௩௫

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

என்னி லாரு மெனக்கினி யாரில்லை
என்னி லும்மினி யானொரு வன்னுளன்
என்னு ளேயுயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக்
கென்னு ளேநிற்கு மின்னம்ப ரீசனே. ௧

மட்டுண் பார்கண் மடந்தையர் வாட்கணால்
கட்டுண் பார்கள் கருதுவ தென்கொலோ
தட்டி முட்டித்தள் ளாடித் தழுக்குழி
எட்டு மூர்த்திய ரின்னம்ப ரீசனே. ௨

கனலுங் கண்ணியுந் தண்மதி யோடுடன்
புனலுங் கொன்றையுஞ் சூடும் புரிசடை
அனலுஞ் சூலமு மான்மறிக் கையினர்
எனலு மென்மனத் தின்னம்ப ரீசனே. ௩

மழைக்கண் மாமயி லாலு மகிழ்ச்சியான்
அழைக்குந் தன்னடி யார்கட மன்பினைக்
குழைக்குந் தன்னைக் குறிக்கொள வேண்டியே
இழைக்கு மென்மனத் தின்னம்ப ரீசனே. ௪

தென்ன வன்னென்னை யாளுஞ் சிவனவன்
மன்ன வன்மதி யம்மறை யோதியான்
முன்ன மன்னவன் சேர்வன பூழியான்
இன்ன மின்புற்ற வின்னம்ப ரீசனே. ௫

விளக்கும் வேறு படப்பிற ருள்ளத்தில்
அளக்குந் தன்னடி யார்மனத் தன்பினைக்
குளக்கு மென்னைக் குறிக்கொள வேண்டியே
இளக்கு மென்மனத் தின்னம்ப ரீசனே. ௬

சடைக்க ணாள்புன லாளனல் கையதோர்
கடைக்க ணான்மங்கை நோக்கிம வான்மகள்
படைக்க ணாற்பரு கப்படு வானமக்
கிடைக்க ணாய்நின்ற வின்னம்ப ரீசனே. ௭

தொழுது தூமலர் தூவித் துதித்துநின்
றழுது காமுற் றரற்றுகின் றாரையும்
பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்
எழுதுங் கீழ்க்கணக் கின்னம்ப ரீசனே. ௮

விரியுந் தண்ணிள வேனிலில் வெண்பிறை
புரியுங் காமனை வேவப் புருவமும்
திரியு மெல்லையின் மும்மதி தீயெழுந்
தெரிய நோக்கிய வின்னம்ப ரீசனே. ௯

சனியும் வெள்ளியுந் திங்களு ஞாயிறும்
முனிவ னாய்முடி பத்துடை யான்றனைக்
கனிய வூன்றிய காரண மென்கொலோ
இனிய னாய்நின்ற வின்னம்ப ரீசனே. ௰

திருச்சிற்றம்பலம்

## திருக்குடமூக்கு பதிகம் ௧௩௯

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பூவ ணத்தவன் புண்ணிய னண்ணியங்
காவ ணத்துடை யானடி யார்களைத்
தீவ ணத்திரு நீறுமெய் பூசியோர்
கோவ ணத்துடை யான்குட மூக்கிலே. ௧

பூத்தா டிக்கழி யாதேநீர் பூமியீர்
தீத்தா டித்திறஞ் சிந்தையுள் வைம்மினோ
வேர்த்தா டுங்காளி தன்விசை தீர்கென்று
கூத்தா டியுறை யுங்குட மூக்கிலே. ௨

நங்கை யாளுமை யாளுறை நாதனார்
அங்கை யாளொ டறுபதந் தாழ்சடைக்
கங்கை யாளவள் கன்னி யெனப்படுங்
கொங்கை யாளுறை யுங்குட மூக்கிலே. ௩

ஓதா நாவன் றிறத்தை யுரைத்திரேல்
ஏதா னும்மினி தாகும் மியமுனை
சேதா வேறுடை யானமர்ந் தவிடம்
கோதா விரியுறை யுங்குட மூக்கிலே. ௪

நக்க ரையனை நாடொறு நன்னெஞ்சே
வக்க ரையுறை வானை வணங்குநீ
அக்க ரையோ டரவரை யார்த்தவன்
கொக்க ரையுடை யான்குட மூக்கிலே. ௫

துறவி நெஞ்சின ராகிய தொண்டர்காள்
பிறவி நீங்கப் பிதற்றுமின் பித்தராய்
மறவ னாய்ப்பார்த்தன் மேற்கணை தொட்டவெங்
குறவ னாருறை யுங்குட மூக்கிலே. ௬

தொண்ட ராகித் தொழுது பணிமினோ
பண்டை வல்வினை பற்றற வேண்டுவீர்
விண்ட வர்புர மூன்றொரு மாத்திரைக்
கொண்ட வன்னுறை யுங்குட மூக்கிலே. எ

காமி யஞ்செய்து காலங் கழியாதே
ஓமி யஞ்செய்தங் குள்ளத் துணர்மினோ
சாமி யோடு சரச்சு வதியவள்
கோமி யும்முறை யுங்குட மூக்கிலே. அ

சிரமஞ் செய்து சிவனுக்குப் பத்தராய்ப்
பரம னைப்பல நாளும் பயிற்றுமின்
பிரமன் மாலொடு மற்றொழிந் தார்க்கெலாம்
குரவ னுறை யுங்குட மூக்கிலே. கூ

அன்று தானரக் கன்கயி லாயத்தைச்
சென்று தானெடுக் கவுமை யஞ்சலும்
நன்று தானக்கு நல்விர லூன்றிப்பின்
கொன்று கீதங்கேட் டான்குட மூக்கிலே. ய

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.
இறைவன் - கும்பேசர்; இறைவி - மங்களநாயகி.



## திருநின்றியூர் பதிகம் கந-எ

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

கொடுங்கண் வெண்டலை கொண்டு குறைவிலை
படுங்க ணொன்றில ராய்ப்பலி தேர்ந்துண்பர்
நெடுங்கண் மங்கைய ராட்டயர் நின்றியூர்க்
கடுங்கைக் கூற்றுதைத் திட்ட கருத்தரே.

வீதி வேனெடுங் கண்ணியர் வெள்வளை
நீதி யேகொளப் பாலது நின்றியூர்
வேத மோதி விளங்குவெண் டோட்டராய்க்
காதில் வெண்குழை வைத்தவெங் கள்வரே.

புற்றி னாரர வம்புலித் தோல்மிசைச்
சுற்றி னார்சுண்ணப் போர்வைகொண் டார்சுடர்
நெற்றிக் கண்ணுடை யாரமர் நின்றியூர்
பற்றி னாரைப்பற் றாவினை பாவமே.

பறையி னோசையும் பாடலி னோசையும்
மறையி னோசையு மல்கி யயலெலாம்
நிறையும் பூம்பொழில் சூழ்திரு நின்றியூர்
உறையு மீசனை யுள்குமென் னுள்ளமே

சுனையு ணீலஞ் சுளியு நெடுங்கணாள்
இனைய னென்றென்று மேசுவ தென்கொலோ
நினையுந் தண்வயல் சூழ்திரு நின்றியூர்ப்
பனையி னீருரி போர்த்த பரமரே.

உரைப்பக் கேண்மினு முச்சியு ளான்றனை
நிரைப்பொன் மாமதில் சூழ்திரு நின்றியூர்
உரைப்பொற் கற்றைய ராரிவ ரோவெனில்
திரைத்துப் பாடித் திரிதருஞ் செல்வரே.

கன்றி யூர்முகில் போலுங் கருங்களி
றின்றி யேறல னாலிது வென்கொலோ
நின்றி யூர்பதி யாக நிலாயவன்
வென்றி யேறுடை யெங்கள் விகிர்தனே.

நிலையி லாவெள்ளை மாலைய னீண்டதோர்
கொலைவி லாலெயி லெய்த கொடியவன்
நிலையி னார்வயல் சூழ்திரு நின்றியூர்
உரையி னாற்றொழு வார்வினை யோயுமே.

அஞ்சி யாகிலு மன்புபட் டாகிலும்
நெஞ்சம் வாழி நினைநின்றி யூரைநீ
இஞ்சி மாமதி லெய்திமை யோர்தொழக்
குஞ்சி வான்பிறை சூடிய கூத்தனே. ௯

எளிய னமொழி யாவிலங் கைக்கிறை
களியி னற்கயி லாய மெடுத்தவன்
நெளிய வூன்றவ லானமர் நின்றியூர்
அளியி னற்றொழு வார்வினை யல்குமே. ௰

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - மகாலட்சுமிநாதர்; இறைவி - உலகநாயகி.



## திருவொற்றியூர் பதிகம் கூ௲அ

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

ஒற்றி யூரு மொளிமதி பாம்பினை
ஒற்றி யூருமப் பாம்பு மதனையே
ஒற்றி யூர வொருசடை வைத்தவன்
ஒற்றி யூர்தொழ நம்வினை யோயுமே. ௧

வாட்ட மொன்றுரைக் கும்மலை யான்மகள்
ஈட்ட வேயிரு ளாடி யிடுபிணக்
காட்டி லோரி கடிக்க வெடுத்ததோர்
ஓட்டை வெண்டலைக் கையொற்றி யூரரே. ௨

கூற்றுத் தண்டத்தை யஞ்சிக் குறிக்கொண்மின்
ஆற்றுத் தண்டத் தடக்கு மரனடி
நீற்றுத் தண்டத்த ராய்வினை வார்க்கெலாம்
ஊற்றுத் தண்டொப்பர் போலொற்றி யூரரே. ௩

சுற்றும் பேய்சுழ லச்சுடு காட்டெரி
பற்றி யாடுவர் பாய்புலித் தோலினர்
மற்றை யூர்களெல் லாம்பலி தேர்ந்துபோய்
ஒற்றி யூர்புக் குறையு மொருவரே.

புற்றில் வாளர வாட்டி யுமையொடு
பெற்ற மேறுகந் தேறும் பெருமையான்
மற்றை யாரொடு வானவ ருந்தொழ
ஒற்றி யூருறை வானோர் கபாலியே.

போது தாழ்ந்து புதுமலர் கொண்டுநீர்
மாது தாழ்சடை வைத்த மணாளனார்
ஓது வேதிய னார்திரு வொற்றியூர்
பாத மேத்தப் பறையுநம் பாவமே.

பலவு மன்னங்கள் பன்மலர் மேற்றுஞ்சும்
கலவ மஞ்ஞைகள் காரென வெள்குறும்
உலவு பைம்பொழில் சூழ்திரு வொற்றியூர்
நிலவி னானடி யேயடை நெஞ்சமே.

ஒன்று போலு முகந்தவ ரேறிற்று
ஒன்று போலு முதைத்துக் களைந்தது
ஒன்று போலொளி மாமதி சூடிற்று
ஒன்று போலுகந் தாரொற்றி யூரரே.

படைகொள் பூதத்தர் வேதத்தர் கீதத்தர்
சடைகொள் வெள்ளத்தர் சாந்தவெண் ணீற்றின
உடையுந் தோலுகந் தாருறை யொற்றியூர்
அடையு முள்ளத் தவர்வினை யல்குமே.

வரையி னாலுயர் தோளுடை மன்னனை
வரையி னார்வலி செற்றவர் வாழ்விடம்
திரையி னார்புடை சூழ்திரு வொற்றியூர்
உரையி னாற்பொலிந் தாருயர்ந் தார்களே.

திருச்சிற்றம்பலம்

## திருப்பாசூர் பதிகம் கடுக

### திருக்குறுந்தொகை

*திருச்சிற்றம்பலம்*

முந்தி மூவெயி லெய்த முதல்வனார்
சிந்திப் பார்வினை தீர்த்திடுஞ் செல்வனார்
அந்திக் கோன்றனக் கேயருள் செய்தவர்
பந்திச் செஞ்சடைப் பாசூ ரடிகளே. க

மடந்தை பாக மகிழ்ந்த மணாளனார்
தொடர்ந்த வல்வினை போக்கிடுஞ் சோதியார்
கடந்த காலனைக் கால்கொடு பாய்ந்தவர்
படர்ந்த நாகத்தர் பாசூ ரடிகளே. உ

நாறு கொன்றையு நாகமுந் திங்களும்
ஆறுஞ் செஞ்சடை வைத்த வழகனார்
காறு கண்டத்தர் கையதோர் சூலத்தர்
பாறி னோட்டினர் பாசூ ரடிகளே. ங

வெற்றி யூருறை வேதிய ராவர்நல்
ஒற்றி யேறுகந் தேறு மொருவனார்
நெற்றிக் கண்ணினர் நீள ரவந்தனைப்
பற்றி யாட்டுவர் பாசூ ரடிகளே. ச

மட்ட விழ்ந்த மலர்நெடுங் கண்ணிபால்
இட்ட வேட்கைய ராகி யிருப்பவர்
துட்ட ரேலறி யேனிவர் சூழ்ச்சிமை
பட்ட நெற்றியர் பாசூ ரடிகளே. ரு

பல்லி லோடுகை யேந்திப் பகலெலாம்
எல்லி நின்றிடு பெய்பலி யேற்பவர்
சொல்லிப் போய்ப்புகு மூரறி யேன்சொலீர்
பல்கு நீற்றினர் பாசூ ரடிகளே. சா

கட்டி விட்ட சடையர் கபாலியர்
எட்டி நோக்கிவந் தில்புகுந் தவ்வவர்
இட்ட மாவறி யேனிவர் செய்வன
பட்ட நெற்றியர் பாசூ ரடிகளே. எ

வேத மோதிவந் தில்புகுந் தாரவர்
காதில் வெண்குழை வைத்த கபாலியார்
நீதி யொன்றறி யார்நிறை கொண்டனர்
பாதி வெண்பிறைப் பாசூ ரடிகளே. அ

சாம்பல் பூசுவர் தாழ்சடை கட்டுவர்
ஓம்பன் மூதெரு தேறு மொருவனார்
தேம்பல் வெண்மதி சூடுவர் தீயதோர்
பாம்பு மாட்டுவர் பாசூ ரடிகளே. கூ

மாலி னோடு மறையவன் றானுமாய்
மேலுங் கீழு மளப்பரி தாயவர்
ஆலி னீழ லறம்பகர்ந் தார்மிகப்
பால்வெண் ணீற்றினர் பாசூ ரடிகளே. ய

திரியு மூவெயில் செங்கணை யொன்றினால்
எரிய வெய்தன ரேறு மிலங்கைக்கோன்
நெரிய வூன்றியிட் டார்விர லொன்றினால்
பரியர் நுண்ணியர் பாசூ ரடிகளே. கக

திருச்சிற்றம்பலம்

இது தொண்டைநாட்டிலுள்ளது.

இறைவன் - பாசூர்நாதர்; இறைவி - பசுபதிநாயகி.



திருவன்னியூர் பதிகம் கசுமி

## திருக்குறுந்தொகை

### திருச்சிற்றம்பலம்

காடு கொண்டரங் காக்கங்குல் வாய்க்கணம்
பாட மாநட மாடும் பரமனார்
வாட மானிறங் கொள்வர் மணங்கமழ்
மாட மாமதில் சூழ்வன்னி யூரரே. க

செங்கணாகமரையது தீத்திரள்
அங்கை யேந்திநின் றெரி யாடுவர்
கங்கை வார்சடை மேலிடங் கொண்டவர்
மங்கை பாகம்வைத் தார்வன்னி யூரரே. உ

ஞானங் காட்டுவர் நன்னெறி காட்டுவர்
தானங் காட்டுவர் தம்மடைந் தார்க்கெலாம்
தானங் காட்டித்தன் றாளடைந் தார்கட்கு
வானங் காட்டுவர் போல்வன்னி யூரரே. ங

இம்மை யம்மை யெனவிரண் டும்மிவை
மெய்ம்மை தானறி யாது விளம்புவர்
மெய்ம்மை யானினை வார்கடம் வல்வினை
வம்மின் றீர்ப்பர்கண் டீர்வன்னி யூரரே. ச

பிறைகொள் வாணுதற் பெய்வளைத் தோளியர்
நிறையைக் கொள்பவர் நீறணி மேனியர்
கறைகொள் கண்டத்தர் வெண்மழு வாளினர்
மறைகொள் வாய்மொழி யார்வன்னி யூரரே. ரு

திளைக்கும் வண்டொடு தேன்படு கொன்றையர்
துளைக்கை வேழத்தர் தோலர் சுடர்மதி
முளைக்கு மூரற் கதிர்கண்டு நாகந்நா
வளைக்கும் வார்சடை யார்வன்னி யூரரே. சு

குணங்கொள் கோளெட்டு மூர்த்தி யிணையடி
இணங்கு வார்கட் கினியனு மாய்நின்றான்
வணங்கி மாமலர் கொண்டவர் வைகலும்
வணங்கு வார்மனத் தார்வன்னி யூரரே.

இயலு மாலொடு நான்முகன் செய்தவம்
முயலிற் காண்பரி தாய்நின்ற மூர்த்திதான்
அயலெ லாமன்ன மேயுமந் தாமரை
வயலெ லாங்கயல் பாய்வன்னி யூரரே.

* * * *

நலங்கொள் பாகனை நன்று முனிந்திடா
விலங்கல் கோத்தெடுத் தானது மிக்கிட
இலங்கை மன்ன னிருபது தோளினை
மலங்க வூன்றிவைத் தார்வன்னி யூரரே.

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - அக்கினீச்சுரர்; இறைவி - பார்வதியம்மை.



## திருவையாறு

பதிகம் ௧௩௪

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

சிந்தை வாய்தலு ளான்வந்து சீரியன்
பொந்து வார்புலால் வெண்டலைக் கையினன்
முந்தி வாயதோர் மூவிலை வேல்பிடித்
தந்தி வாயதோர் பாம்பரை யாறரே.

பாக மாலை மகிழ்ந்தனர் பான்மதி
போக வானையி னீருரி போர்த்தவர்
கோக மாலை குலாயதோர் கொன்றையும்
ஆக வானெயஞ் சாடுமை யாறரே.

நெஞ்ச மென்பதோர் நீள்கயந் தன்னுளே
வஞ்ச மென்பதோர் வான்சுழிப் பட்டுநான்
துஞ்சும் போழ்துநின் னுமைத் திருவெழுத்
தஞ்சுந் தோன்ற வருளுமை யாறரே. ௩

நினைக்கு நெஞ்சினு ளார்நெடு மாமதில்
அனைத்து மொள்ளழல் வாயெரி யூட்டினார்
பனைக்கை வேழத் துரியுடல் போர்த்தவர்
அனைத்து வாய்தலு ளாருமை யாறரே. ௪

பரியர் நுண்ணியர் பார்த்தற் கரியவர்
அரிய பாடல ராடல ரன்றியும்
கரிய கண்டத்தர் காட்சி பிறர்க்கெலாம்
அரியர் தொண்டர்க் கெளியரை யாறரே. ௫

புலரும் போது மிலர்பட்ட பொற்சுடர்
மலரும் போதுக ளாற்பணி யச்சிலர்
இலரும் போதுமி லாதது மன்றியும்
அலரும் போது மணியுமை யாறரே. ௬

பங்க மாலைக் குழலியோர் பானிறக்
கங்கை மாலையர் காதன்மை செய்தவர்
மங்கை மாலை மதியமுங் கண்ணியும்
அங்க மாலையுஞ் சூடுமை யாறரே. ௭

முன்னை யாறு முயன்றெழு வீரெலாம்
பின்னை யாறு பிரியெனும் பேதைகாள்
மன்னை யாறு மருவிய மாதவன்
தன்னை யாறு தொழத்தவ மாகுமே. ௮

ஆனை யாறென வாடுகின் றான்முடி
வானை யாறு வளாயது காண்மினோ
நானை யாறுபுக் கேற்கவ னின்னருள்
தேனை யாறு திறந்தாலே யொக்குமே. ௯

அரக்கின் மேனி யனந்தளிர் மேனியள்
அரக்கின் சேவடி யாளஞ்ச வஞ்சிலின்
றரக்க னீரைந்து வாயு மலறவே
அரக்கி னானடி யாலுமை யாறனே. ௰

திருச்சிற்றம்பலம்



திருவையாறு பதிகம் ௬௰௨

## திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

சிந்தை வண்ணத்த ராய்த்திறம் பாவணம்
முந்தி வண்ணத்த ராய்முழு நீறணி
சந்தி வண்ணத்த ராய்த்தழல் போல்வதோர்
அந்தி வண்ணமு மாவரை யாறரே.

மூல வண்ணத்த ராய்முத லாகிய
கோல வண்ணத்த ராகிக் கொழுஞ்சுடர்
நீல வண்ணத்த ராகி நெடும்பளிங்
கால வண்ணத்த ராவரை யாறரே.

சிந்தை வண்ணமுந் தீயதோர் வண்ணமும்
அந்திப் போதழ காகிய வண்ணமும்
பந்திக் காலனைப் பாய்ந்ததோர் வண்ணமும்
அந்தி வண்ணமு மாவரை யாறரே.

இருளின் வண்ணமு மேழிசை வண்ணமும்
சுருளின் வண்ணமுஞ் சோதியின் வண்ணமும்
மருளு நான்முகன் மாலொடு வண்ணமும்
அருளும் வண்ணமு மாவரை யாறரே.

இழுக்கின் வண்ணங்க ளாகிய வெவ்வழல்
குழைக்கும் வண்ணங்க ளாகியுங் கூடியும்
மழைக்கண் மாமுகி லாகிய வண்ணமும்
அழைக்கும் வண்ணமு மாவரை யாறரே. ரு

இண்டை வண்ணமு மேழிசை வண்ணமும்
தொண்டர் வண்ணமுஞ் சோதியின் வண்ணமும்
கண்ட வண்ணங்க ளாய்க்கனன் மாமணி
அண்ட வண்ணமு மாவரை யாறரே. சா

விரும்பும் வண்ணமும் வேதத்தின் வண்ணமும்
கரும்பி னின்மொழிக்* காரிகை வண்ணமும்
விரும்பு வார்வினை தீர்த்திடும் வண்ணமும்
அரும்பின் வண்ணமு மாவரை யாறரே. எ

ஊழி வண்ணமு மொண்சுடர் வண்ணமும்
வேழ வீருரி போர்த்ததோர் வண்ணமும்
வாழித் தீயுரு வாகிய வண்ணமும்
ஆழி வண்ணமு மாவரை யாறரே. அ

செய்த வன்றிரு நீறணி வண்ணமும்
எய்த நோக்கரி தாகிய வண்ணமுங்
கைது காட்சி யரியதோர் வண்ணமும்
ஐது வண்ணமு மாவரை யாறரே. கூ

எடுத்த வாளரக் கன்றிறல் வண்ணமும்
இடர்க்கள் போற்பெரி தாகிய வண்ணமும்
கடுத்த கைந்நரம் பாலிசை வண்ணமும்
அடுத்த வண்ணமு மாவரை யாறரே. ய

திருச்சிற்றம்பலம்



(பா - ம்) *கரும்பின்மென்மொழி.

## திருவாவடுதுறை பதிகம் ௧௪௩

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

நிறைக்க வாலிய ளல்லளிந் நேரிழை
மறைக்க வாலிய ளல்லளிம் மாதராள்
பிறைக்க வாலப் பெரும்புன லாவடு
துறைக்க வாலியோ டாடிய சுண்ணமே. ௧

தவள மாமதிச் சாயலோர் சந்திரன்
பிளவு சூடிய பிஞ்ஞக னெம்மிறை
அளவு கண்டில ளாவடு தண்டுறைக்
களவு கண்டன ளொத்தனள் கன்னியே. ௨

பாதிப் பெண்ணொரு பாகத்தன் பன்மறை
ஓதி யென்னுளங் கொண்டவ னொண்பொருள்
ஆதி யாவடு தண்டுறை மேவிய
சோதி யேசுட ரேயென்று சொல்லுமே. ௩

கார்க்கொண் மாமுகில் போல்வதோர் கண்டத்தன்
வார்க்கொண் மென்முலை சேர்ந்திறு மார்ந்திவள்
ஆர்க்கொள் கொன்றைய னாவடு தண்டுறைத்
தார்க்கு நின்றிவ டாழுமா காண்மினே. ௪

கருகு கண்டத்தன் காய்கதிர்ச் சோதியன்
பருகு பாலமு தேயெனும் பண்பினன்
அருகு சென்றில ளாவடு தண்டுறை
ஒருவ னென்னை யுடையகோ வென்னுமே. ௫

குழலுங் கொன்றையுங் கூவிள மத்தமும்
தழலுந் தையலோர் பாகமாத் தாங்கினான்
அழக னாவடு தண்டுறை யாவெனக்
கழலுங் கைவளை காரிகை யாளுக்கே. ௬

பஞ்சின் மெல்லடிப் பாவையோர் பங்கனைத்
தஞ்ச மென்றிறு மாந்திவ ளாரையும்
அஞ்சு வாளல்ல ளாவடு தண்டுறை
மஞ்ச னேடிவ ளாடிய மையலே. எ

பிறையுஞ் சூடிநற் பெண்ணொடா ணாகிய
நிறையு நெஞ்சமு நீர்மையுங் கொண்டவன
அறையும் பூம்பொழி லாவடு தண்டுறை
இறைவ னென்னை யுடையவ னென்னுமே. அ

வையந் தானளந் தானு மயனுமாய்
மெய்யைக் காணலுற் றார்க்கழ லாயினான்
ஐய னாவடு தண்டுறை யாவெனக்
கையில் வெள்வளை யுங்கழல் கின்றதே.

பக்கம் பூதங்கள் பாடப் பலிகொள்வான்
மிக்க வாளரக் கன்வலி வீட்டினான்
அக்க ணிந்தவ னாவடு தண்டுறை
நக்க னென்னுமிந் நாணிலி காண்மினே. ய

திருச்சிற்றம்பலம்



## திருப்பராய்த்துறை பதிகம் கஉச

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

கரப்பர் கால மடைந்தவர் தம்வினை
சுருக்கு மாறுவல் லார்கங்கை செஞ்சடைப்
பரப்பு நீர்வரு காவிரித் தென்கரைத்
திருப்ப ராய்த்துறை மேவிய செல்வரே.

ஓடி னார்களி யானையி னீருரி
பாடி னார்மறை நான்கினோ டாறங்கம்
சேட னார்தென் பராய்த்துறைச் செல்வரைத்
தேடிக் கொண்டடி யேன்சென்று காண்பனே. உ

பட்ட நெற்றியர் பான்மதிக் கீற்றினர்
நட்ட மாடுவர் நள்ளிரு ளேமமும்
சிட்ட னார்தென் பராய்த்துறைச் செல்வனார்
இட்ட மாயிருப் பாரை யறிவரே. ங

முன்பெ லாஞ்சில மோழைமை பேசுவர்
என்பெ லாம்பல பூண்டங் குழிதர்வர்
தென்ப ராய்த்துறை மேவிய செல்வனார்
அன்ப ராயிருப் பாரை யறிவரே. ச

போது தாதொடு கொண்டு புனைந்துடன்
தாத விழ்சடைச் சங்கரன் பாதத்துள்
வாதை தீர்க்கவென் றேத்திப் பராய்த்துறைச்
சோதி யானைத் தொழுதெழுந் துய்ம்மினே. ரு

நல்ல நான்மறை யோதிய நம்பனைப்
பல்லில் வெண்டலை யிற்பலி கொள்வனைத்
தில்லை யான்றென் பராய்த்துறைச் செல்வனை
வல்லை யாய்வணங் கித்தொழு வாய்மையே. சு

நெருப்பி னுற்குவித் தாலொக்கு நீள்சடைப்
பருப்ப தம்மத யானை யுரித்தவன்
திருப்ப ராய்த்துறை யார்திரு மார்பினால்
பொருப்ப ராவி யிழிபுனல் போன்றதே. எ

எட்ட விட்ட விடுமண லெக்கர்மேல்
பட்ட நுண்டுளி பாயும் பராய்த்துறைச்
சிட்டன் சேவடி சென்றடை கிற்றிரேல்
விட்டு நம்வினை யுள்ளன விடுமே.

நெருப்ப ராய்நிமிர்ந் தாலொக்கு நீள்சடை
மருப்ப ராய்வளைந் தாலொக்கும் வாண்மதி
திருப்ப ராய்த்துறை மேவிய செல்வனார்
விருப்ப ராயிருப் பாரை யறிவரே.

தொண்டு பாடியுந் தூமலர் தூவியும்
இண்டை கட்டி யிணையடி யேத்தியும்
பண்ட ரங்கர் பராய்த்துறைப் பாங்கரைக்
கண்டு கொண்டடி யேனுய்ந்து போவனே. ௰

அரக்க னுற்ற லழித்த வழகனைப்
பரக்கு நீர்ப்பொன்னி மன்னு பராய்த்துறை
இருக்கை மேவிய வீசனை யேத்துமின்
பொருக்க நும்வினை போயறுங் காண்மினே. கக

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - பராய்த்துறைநாதர்; இறைவி - பொன்மயிலம்மை.



திருவானைக்கா பதிகம் கசரு

## திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

கோனைக் காவிக் குளிர்ந்த மனத்தராய்த்
தேனைக் காவியுண் ணார்சில தெண்ணர்கள்
ஆனைக் காவிலெம் மானை யணைகிலார்
ஊனைக் காவி யுழிதர்வ ருமரே.

திருகு சிந்தையைத் தீர்த்துச்செம் மைசெய்து
பருகி யூறலைப் பற்றிப் பதமறிந்
துருகி நைபவர்க் கூனமொன் றின்றியே
அருகு நின்றிடு மானைக்கா வண்ணலே. ௨

துன்ப மின்றித் துயரின்றி யென்றுநீர்
இன்பம் வேண்டி லிராப்பக லேத்துமின்
என்பொ னீசனி றைவனென் றுள்குவார்க்
கன்ப னாயிடு மானைக்கா வண்ணலே.

நாவா லன்று நறுமலர்ச் சேவடி
ஓவா தேத்தி யுளத்தடைத் தார்வினை
காவா யென்றுதங் கைதொழு வார்க்கெலாம்
ஆவா வென்றிடு மானைக்கா வண்ணலே.

வஞ்ச மின்றி வணங்குமின் வைகலும்
வெஞ்சொ லின்றி விலகுமின் வீடற
நைஞ்சு நைஞ்சுநின் றுள்குளிர் வார்க்கெலாம்
அஞ்ச லென்றிடு மானைக்கா வண்ணலே.

நடையை மெய்யென்று நாத்திகம் பேசாதே
படைகள் போல்வரும் பஞ்சமா பூதங்கள்
தடையொன் றின்றியே தன்னடைந் தார்க்கெலாம்
அடைய நின்றிடு மானைக்கா வண்ணலே.

ஒழுகு மாடத் துளொன்பது வாய்தலும்
கழுக ரிப்பதன் முன்னங் கழலடி
தொழுது கைகளாற் றூமலர் தூவிநின்
றழும வர்க்கன்ப னானைக்கா வண்ணலே.

உருளும் போதறி வொண்ணா வுலகத்தீர்
தெருளுஞ் சிக்கெனத் தீவினை சேராதே
இருள றுத்துநின் றீசனென் பார்க்கெலாம்
அருள்கொ டுத்திடு மானைக்கா வண்ணலே.

நேச மாகி நினைமட நெஞ்சமே
நாச மாய குலநலஞ் சுற்றங்கள்
பாச மற்றுப் பராபர வானந்த
ஆசை யுற்றிடு மானைக்கா வண்ணலே.

உ௱அ

ஓத மாகடல் சூழிலங் கைக்கிறை
கீதங் கின்னரம் பாடக் கெடுவினான்
பாதம் வாங்கிப் பரிந்தருள் செய்தங்கோர்
ஆதி யாயிடு மானைக்கா வண்ணலே. ௰

திருச்சிற்றம்பலம்.

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - சம்புகேசுவரர்; இறைவி - அகிலாண்டநாயகி.



## திருப்பூந்துருத்தி

பதிகம் ௧௪௯

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

கொடிகொள் செல்வ விழாக்குண லையறாக்
கடிகொள் பூம்பொழிற் கச்சியே கம்பனார்
பொடிகள் பூசிய பூந்துருத் திந்நகர்
அடிகள் சேவடிக் கீழ்நா மிருப்பதே. ௧

ஆர்த்த தோலுடை கட்டியோர் வேடனாய்ப்
பார்த்த னோடு படைதொடு மாகிலும்
பூத்த நீள்பொழிற் பூந்துருத் திந்நகர்த்
தீர்த்தன் சேவடிக் கீழ்நா மிருப்பதே. ௨

மாதி னைமதித் தானொரு பாகமாக்
காத லாற்கரந் தான்சடைக் கங்கையைப்
பூத நாயகன் பூந்துருத் திந்நகர்க்
காதி சேவடிக் கீழ்நா மிருப்பதே. ௩

மூவ னாய்முத லாயிவ் வுலகெலாம்
காவ னாய்க்கடுங் காலனைக் காய்ந்தவன்
பூவி னாயகன் பூந்துருத் திந்நகர்த்
தேவன் சேவடிக் கீழ்நா மிருப்பதே. ௪

செம்பொ னேயொக்கு மேனியன் றேசத்தில்
உம்ப ராரவ ரோடங் கிருக்கிலும்
பொன்பொ னூர்செல்வப் பூந்துருத் திந்நகர்
நம்பன் சேவடிக் கீழ்நா மிருப்பதே.

வல்லம் பேசி வலிசெய்மூன் றாரினைக்
கொல்லம் பேசிக் கொடுஞ்சர நூறினன்
புல்லம் பேசியும் பூந்துருத் திந்நகர்ச்
செல்வன் சேவடிக் கீழ்நா மிருப்பதே.

ஒருத்த னுயுல கேழுந் தொழநின்று
பருத்த பாம்பொடு பான்மதி கங்கையும்
பொருத்த னுகிலும் பூந்துருத் திந்நகர்த்
திருத்தன் சேவடிக் கீழ்நா மிருப்பதே.

அதிரர் தேவ ரியக்கர்விச் சாதரர்
கருத நின்றவர் காண்பரி தாயினன்
பொருத நீர்வரு பூந்துருத் திந்நகர்ச்
சதுரன் சேவடிக் கீழ்நா மிருப்பதே.

செதுக ருமனத் தார்புறங் கூறினும்
கொதுக ருக்கண்ணி னேன்பிகள் கூறினும்
பொதுவி னுயகன் பூந்துருத் திந்நகர்க்
கதிபன் சேவடிக் கீழ்நா மிருப்பதே.

துடித்த தோள்வலி வாளரக் கன்றனைப்
பிடித்த கைஞ்ஞெரிந் துற்றன கண்ணெலாம்
பொடிக்க வூன்றிய பூந்துருத் திந்நகர்ப்
படிக்கொள் சேவடிக் கீழ்நா மிருப்பதே.

திருச்சிற்றம்பலம்



திருச்சோற்றுத்துறை பதிகம் கசஎ

திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

கொல்லை யேற்றினர் கோளர வத்தினர்
தில்லைச் சிற்றம் பலத்துறை செல்வனார்
தொல்லை யூழியர் சோற்றுத் துறையர்க்கே
வல்லை யாய்ப்பணி செய்மட நெஞ்சமே.

முத்தி யாக வொருதவஞ் செய்திலை
அத்தி யாலடி யார்க்கொன் றளித்திலை
தொத்து நின்றலர் சோற்றுத் துறையர்க்கே
பத்தி யாய்ப்பணி செய்மட நெஞ்சமே.

ஒட்டி நின்ற வுடலுறு நோய்வினை
கட்டி நின்ற கழிந்தவை போயறத்
தொட்டு நின்றுமச் சோற்றுத் துறையர்க்கே
பட்டி யாய்ப்பணி செய்மட நெஞ்சமே.

ஆதி யானண்ட வாணர்க் கருணல்கும்
நீதி யானென்று நின்மல னேயென்றும்
சோதி யானென்றுஞ் சோற்றுத் துறையர்க்கே
வாதி யாய்ப்பணி செய்மட நெஞ்சமே.

ஆட்டி னுயடி யேன்வினை யாயின
ஓட்டி னுயொரு காதி லிலங்குவெண்
தோட்டி னுயென்று சோற்றுத் துறையர்க்கே
நீட்டி நீபணி செய்மட நெஞ்சமே.

பொங்கி நின்றெழுந் தகட னஞ்சினைப்
பங்கி யுண்டதோர் தெய்வமுண் டோசொலாய்
தொங்கி நீயென்றுஞ் சோற்றுத் துறையர்க்குத்
தங்கி நீபணி செய்மட நெஞ்சமே.

ஆணி போலநீ யாற்ற வலியைகாண்
ஏணி போலிழிந் தேறியு மேங்கியும்
தோணி யாகிய சோற்றுத் துறையர்க்கே
பூணி யாய்ப்பணி செய்மட நெஞ்சமே. எ

பெற்ற மேறிலென் பேய்படை யாகிலென்
புற்றி லாடர வேயது பூணிலென்
சுற்றி நீயென்றுஞ் சோற்றுத் துறையர்க்கே
பற்றி நீபணி செய்மட நெஞ்சமே. அ

அல்லி யானர வைந்தலை நாகணைப்
பள்ளி யானறி யாத பரிசெலாம்
சொல்லி நீயென்றுஞ் சோற்றுத் துறையர்க்கே
புல்லி நீபணி செய்மட நெஞ்சமே. க

மிண்ட ரோடு விரவியும் விறிலாக்
குண்டர் தம்மைக் கழிந்துய்யப் போந்துநீ
தொண்டு செய்தென்றுஞ் சோற்றுத் துறையர்க்கே
உண்டு நீபணி செய்மட நெஞ்சமே. ய

வாழ்ந்த வன்வலி வாளரக் கன்றனை
ஆழ்ந்து போயல றவ்விர லூன்றினான்
சூழ்ந்த பாரிடஞ் சோற்றுத் துறையர்க்குத்
தாழ்ந்து நீபணி செய்மட நெஞ்சமே. கக

திருச்சிற்றம்பலம்



## திருநெய்த்தானம் பதிகம் கசஅ

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

கொல்லி யான்குளிர் தூங்குகுற் றாலத்தான்
புல்லி யார்புர மூன்றெரி செய்தவன்
நெல்லி யானிலை யானநெய்த் தானனைச்
சொல்லி மெய்தொழு வார்சுடர் வாணரே.

இரவ னையிடு வெண்டலை யேந்தியைப்
பரவ னைப்படை யார்மதின் மூன்றையும்
நிரவ னைநிலை யானநெய்த் தானனைக்
குரவ னைத்தொழு வார்கொடி வாணரே. ௨

ஆனி டையைந்து மாடுவ ராரிருள்
கானி டைநட மாடுவர் காண்மினோ
தேனி டைமலர் பாயுநெய்த் தானனை
வானி டைத்தொழு வார்வலி வாணரே. ௩

விண்ட வர்புர மூன்றும்வெண் ணீறெழக்
கண்ட வன்கடி தாகிய நஞ்சினை
உண்ட வன்னொளி யானநெய்த் தானனைத்
தொண்ட ராய்த்தொழு வார்சுடர் வாணரே. ௪

மூன்கை நோவக் கடைந்தவர் நிற்கவே
சங்கி யாது சமுத்திர நஞ்சுண்டான்
நங்கை யோடு நவின்றநெய்த் தானனைத்
தங்கை யாற்றொழு வார்தலை வாணரே. ௫

சுட்ட நீறுமெய் பூசிச் சுடலையுள்
நட்ட மாடுவர் நள்ளிருட் பேயொடே
சிட்டர் வானவர் தேருநெய்த் தானனை
இட்ட மாய்த்தொழு வாரின்ப வாணரே. ௬

கொள்ளித் தீயெரி வீசிக் கொடியதோர்
கள்ளிக் காட்டிடை யாடுவர் காண்மினோ
தெள்ளித் தேறித் தெளிந்துநெய்த் தானனை
உள்ளத் தாற்றொழு வாரும்பர் வாணரே. ௭

உச்சி மேல்விளங் கும்மிள வெண்பிறை
பற்றி யாடர வோடுஞ் சடைப்பெய்தான்
நெற்றி யாரழற் கண்டநெய்த் தானனைச்
சுற்றி மெய்தொழு வார்சுடர் வாணரே. ௮

மாலோ டும்மறை யோதிய நான்முகன்
காலோ டும்முடி காண்பரி தாயினான்
சேலோ டுஞ்செருச் செய்யுநெய்த் தானனை
மாலோ டுந்தொழ வார்வினை வாடுமே. ௯

வலிந்த தோள்வலி வாளரக் கன்றனை
நெருங்க நீள்வரை யூன்றுநெய்த் தானனார்
புரிந்து கைந்நரம் போடிசை பாடலும்
பரிந்த னைப்பணி வார்வினை பாறுமே. ௰

திருச்சிற்றம்பலம்



## திருப்பழனம் பதிகம் கசஅ

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

அருவ னாயத்தி யீருரி போர்த்துமை
உருவ னாயொற்றி யூர்பதி யாகிலும்
பருவ ரால்வயல் சூழ்ந்த பழனத்தான்
திருவி னாற்றிரு வேண்டுமித் தேவர்க்கே. க

வையம் வந்து வணங்கி வலங்கொளும்
ஐய னையறி யார்சில ராதர்கள்
பைகொ ளாட்டர வார்த்த பழனன்பால்
பொய்யர் காலங்கள் போக்கிடு வார்களே. உ

வண்ண மாக முறுக்கிய வாசிகை
திண்ண மாகத் திருச்சடைச் சேர்த்தியே
பண்ணு மாகவே பாடும் பழனத்தான்
எண்ணு நீரவ னாயிர நாமமே. ௩

மூர்க்கப் பாம்பு பிடித்தது மூச்சிட
வாக்கப் பாம்பினைக் கண்ட துணிமதி
பாக்கப் பாம்பினைப் பற்றும் பழனத்தான்
தார்க்கொண் மாலை சடைக்கணிந் திட்டதே.

நீல முண்ட மிடற்றின னேர்ந்ததோர்
கோல முண்ட குணத்தா னிறைந்ததோர்
பாலு முண்டு பழனன்பா லென்னிடை
மாலு முண்டிறை யென்றன் மனத்துளே. ௫

மந்த மாக வளர்பிறை சூடியோர்
சந்த மாகத் திருச்சடை சாத்துவான்
பந்த மாயின தீர்க்கும் பழனத்தான்
எந்தை தாய்தந்தை யெம்பெரு மானுமே. ௬

மார்க்க மொன்றறி யார்மதி யில்லிகள்
பூக்க ரத்திற் புரிகிலர் மூடர்கள்
பார்க்க நின்று பரவும் பழனத்தான்
தாட்க ணின்று தலைவணங் கார்களே. ௭

ஏறி னாரிமை யோர்கள் பணிகண்டு
தேறு வாரலர் தீவினை யாளர்கள்
பாறி னார்பணி வேண்டும் பழனத்தான்
கூறி னானுமை யாளொடுங் கூடவே. ௮

சுற்று வார்தொழு வார்சுடர் வண்ணன்மேல்
தெற்றி னார்திரி யும்புர மூன்றெய்தான்
பற்றி னார்வினை தீர்க்கும் பழனனை
எற்றி னான்மறக் கேனெம் பிரானையே. ௯

பொங்கு மாகடல் சூழிலங் கைக்கிறை
அங்க மான விறுத்தருள் செய்தவன்
பங்க னென்றும் பழன னுமையொடும்
தங்கன் றாளடி யேனுடை யுச்சியே. ௰

திருச்சிற்றம்பலம்

## திருச்செம்பொன்பள்ளி பதிகம் கநுய

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

கான றாத கடிபொழில் வண்டினம்
தேன றாத திருச்செம்பொன் பள்ளியான்
ஊன றாததோர் வெண்டலை யிற்பலி
தான றாததோர் கொள்கையன் காண்மினே. க

என்பு மாமையும் பூண்டங் குழிதர்வர்க்
கன்பு மாயிடு மாயிழை யீரினிச்
செம்பொன் பள்ளியு ளான்சிவ லோகனை
நம்பொன் பள்ளியுள் கவினை நாசமே. உ

வேறு கோலத்த ராணலர் பெண்ணலர்
கீறு கோவண வைதுகி லாடையர்
தேற லாவதொன் றன்றுசெம் பொன்பள்ளி
ஆறு சூடிய வண்ண லவனையே. ௩

அருவ ராததோர் வெண்டலை யேந்திவந்
திருவ ராயிடு வார்கடை தேடுவார்
தெருவெ லாமுழல் வார்செம்பொன் பள்ளியார்
ஒருவர் தாம்பல பேருளர் காண்மினே. ச

பூவு லாஞ்சடை மேற்புனல் சூடினன்
ஏவ லாலெயின் மூன்று மெரித்தவன்
தேவர் சென்றிறைஞ் சுஞ்செம்பொன் பள்ளியான்
மூவ ராய்முத லாய்நின்ற மூர்த்தியே. ரு

சலவ ராயொரு பாம்பொடு தண்மதிக்
கலவ ராவதின் காரண மென்கொலோ
திலக நீண்முடி யார்செம்பொன் பள்ளியார்
குலவி லாலெயில் மூன்றெய்த கூத்தரே. சா

கைகொள் சூலத்தர் கட்டுவாங் கத்தினர்
மைகொள் கண்டத்த ரர்கி யிருசுடர்
செய்ய மேனிவெண் ணீற்றர்செம் பொன்பள்ளி
ஐயர் கையதோ ரைந்தலை நாகமே. எ

வெங்க ணாகம் வெருவுற வார்த்தவர்
பைங்க ணானையி னீருரி போர்த்தவர்
செங்கண் மால்விடை யார்செம்பொன் பள்ளியார்
அங்க ணாயடைந் தார்வினை தீர்ப்பரே. அ

நன்றி நாரண னான்முக னென்றிவர்
நின்ற நீண்முடி யோடடி காண்புற்றுச்
சென்று காண்பரி யான்செம்பொன் பள்ளியான்
நின்ற சூழலி னீளெரி யாகியே. கூ

திரியு மும்மதிள் செங்கணை யொன்றினால்
எரிய வெய்தன லோட்டி யிலங்கைக்கோன்
நெரிய வூன்றியிட் டார்செம்பொன் பள்ளியார்
அரிய வான மவரருள் செய்வரே. ம

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - சொர்ணபுரீசர்; இறைவி - சுகந்தவனநாயகி.



## திருக்கடவூர் வீரட்டம் பதிகம் கஙுக

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

மலைக்கொ ளானை மயக்கிய வல்வினை
நிலைக்கொ ளானை நினைப்புறு நெஞ்சமே
கொலைக்கை யானையுங் கொன்றிடு மாதலால்
கலைக்கை யானைகண் டீர்கட வூரரே. க

வெள்ளி மால்வரை போல்வதொ ரானையார்
உள்ள வாறெனை யுள்புகு மானையார்
கொள்ள மாகிய கோயிலு ளானையார்
கள்ள வானைகண் டேர்கட வூரரே.

ஞான மாகிய நன்குண ரானையார்
ஊனை வேவ வுருக்கிய வானையார்
வேன லானை யுரித்துமை யஞ்சவே
கான லானைகண் டேர்கட வூரரே.

ஆல முண்டழ காயதொ ரானையார்
நீல மேனி நெடும்பளிங் கானையார்
கோல மாய கொழுஞ்சுட ரானையார்
கால வானைகண் டேர்கட வூரரே.

அளித்த வானஞ்சு மாடிய வானையார்
வெளுத்த நீள்கொடி யேறுடை யானையார்
எளித்த வேழத்தை யெள்குவித் தானையா
களித்த வானைகண் டேர்கட வூரரே.

விடுத்த மால்வரை விண்ணுற வானையார்
தொடுத்த மால்வரை தூயதொ ரானையார்
கடுத்த காலனைக் காய்ந்ததொ ரானையார்
கடுத்த வானைகண் டேர்கட வூரரே.

மண்ணு ளாரை மயக்குறு மானையார்
எண்ணு ளார்பல ரேத்திடு மானையார்
விண்ணு ளார்பல ரும்மறி யானையார்
கண்ணு ளானைகண் டேர்கட வூரரே.

சினக்குஞ் செம்பவ ளத்திர ளானையார்
மனக்கும் வல்வினை தீர்த்திடு மானையார்
அனைக்கு மன்புடை யார்மனத் தானையார்
கனைக்கு மானைகண் டேர்கட வூரரே.

வேத மாகிய வெஞ்சுட ரானையார்
நீதி யானில னாகிய வானையார்
ஓதி யூழி தெரிந்துண ரானையார்
காத லானைகண் டீர்கட வூரரே. ௯

நீண்ட மாலொடு நான்முகன் றானுமாய்க்
காண்டு மென்றுபுக் கார்களி ருவரும்
மாண்ட வாரழ லாகிய வானையார்
காண்ட லானைகண் டீர்கட வூரரே. ௰

அடுத்து வந்த விலங்கையர் மன்னனை
எடுத்த தோள்க ளிறநெரித் தானையார்
கடுத்த காலனைக் காய்ந்தவொ ரானையார்
கடுக்கை யானைகண் டீர்கட வூரரே. ௧௧

திருச்சிற்றம்பலம்



## திருக்கடவூர்மயானம்　　பதிகம் கஙஉ

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

குழைகொள் காதினர் கோவண வாடையர்
உழையர் தாங்கட வூரின் மயானத்தார்
பழைய தம்மடி யார்செய்த பாவமும்
பிழையுந் தீர்ப்பர் பெருமா னடிகளே. ௧

உன்னி வானவ ரோதிய சிந்தையில்
கன்ன றேன்கட வூரின்ம யானத்தார்
தன்னை நோக்கித் தொழுதெழு வார்க்கெலாம்
பின்னை யென்னார் பெருமா னடிகளே. ௨

சூல மேந்துவர் தோ லுடை யாடையர்
ஆல முண்டமு தேமிகத் தேக்குவர்
கால காலர் கடவூர் மயானத்தார்
மாலை மார்பர் பெருமா னடிகளே.

இறைவ னாரிமை யோர்தொழு பைங்கழல்
மறவ னார்கட வூரின் மயானத்தார்
அறவ னாரடி யாரடி யார்தங்கள்
பிறவி தீர்ப்பர் பெருமா னடிகளே.

கத்து காளி கதந்தணி வித்தவர்
மத்தர் தாங்கட வூரின் மயானத்தார்
ஒத்தொவ் வாதன செய்துழல் வாரொரு
பித்தர் காணும் பெருமா னடிகளே.

எரிகொண் மேனி யிளம்பிறை வைத்தவர்
கரியர் தாங்கட வூரின் மயானத்தார்
அரிய ரண்டத்து ளோரயன் மாலுக்கும்
பெரியர் காணும் பெருமா னடிகளே.

அணங்கு பாகத்த ராரண நான்மறை
கணங்கள் சேர்கட வூரின் மயானத்தார்
வணங்கு வாரிடர் தீர்ப்பர் மயக்குறும்
பிணங்கொள் காடர் பெருமா னடிகளே.

அரவு கையின ராதி புராணனார்
மரவு சேர்கட வூரின் மயானத்தார்
பரவு வாரிடர் தீர்ப்பர் பணிகொள்வர்
பிரமன் மாற்கும் பெருமா னடிகளே.

* * * * *
* * * * *

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

**இறைவன் - பிரமபுரீசர்; இறைவி - அமலக்குயமின்.**

## திருமயிலாடுதுறை பதிகம் க௫௩

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

கொள்ளுங் காதன்மை பெய்துறுங் கோல்வளை
உள்ள முள்கி யுரைக்குந் திருப்பெயர்
வள்ளன் மாமயி லாடு துறையுறை
வெள்ளந் தாங்கு சடையனை வேண்டியே. ௧

சித்தந் தேறுஞ் செறிவளை சிக்கெனும்
பச்சை தீருமென் பைங்கொடி பான்மதி
வைத்த மாமயி லாடு துறையரன்
கொத்தி னிற்பொலி கொன்றை கொடுக்கிலே. ௨

அண்டர் வாழ்வு மமர ரிருக்கையுங்
கண்டு வீற்றிருக் குங்கருத் தொன்றிலோம்
வண்டு சேர்மயி லாடு துறையரன்
தொண்டர் பாதங்கள் சூடித் துதையிலே. ௩

வெஞ்சி னக்கடுங் காலன் விரைகிலான்
அஞ்சி றப்பும் பிறப்பு மறுக்கலாம்
மஞ்சன் மாமயி லாடு துறையுறை
அஞ்சொ லாளுமை பங்க னருளிலே. ௪

குறைவி லோங்கொடு மாநுடர் வாழ்க்கையால்
கறைநி லாவிய கண்டனெண் டோளினன்
மறைவ லான்மயி லாடு துறையுறை
இறைவ னீள்கழ லேத்தி யிருக்கிலே. ௫

நிலைமை சொல்லுநெஞ் சேதவ மென்செய்தாய்
கலைக ளாயவல் லான்கயி லாயநல்
மலையன் மாமயி லாடு துறையனம்
தலையின் மேலு மனத்துளுந் தங்கவே. ௬

நீற்றி னானிமிர் புன்சடை யான்விடை
ஏற்றி னானமை யாளுடை யான்புலன்
மாற்றி னான்மயி லாடு துறையென்று
போற்று வார்க்குமுண் டோபுவி வாழ்க்கையே. எ

கோலும் புல்லு மொருகையிற் கூர்ச்சமும்
தோலும் பூண்டு துயரமுற் றென்பயன்
நீல மாமயி லாடு துறையனே
நூலும் வேண்டுமோ நுண்ணுணர்ந் தோர்கட்கே. அ

பணங்கொ ளாடர வல்குற் பகீரதி
மணங்கொ ளச்சடை வைத்த மறையவன்
வணங்கு மாமயி லாடு துறையரன்
அணங்கொர் பால்கொண்ட கோல மழகிதே. கூ

நீணி லாவர வச்சடை நேசனைப்
பேணி லாதவர் பேதுற வோட்டினோம்
வாணி லாமயி லாடு துறைதனைக்
காணி லார்க்குங் கடுந்துய ரில்லையே. ω

பருத்த தோளு முடியும் பொடிபட
இருத்தி னானவ னின்னிசை கேட்டலும்
வரத்தி னான்மயி லாடு துறைதொழும்
கரத்தி னார்வினை கட்டறுங் காண்மினே. கக

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - மாயூரநாதர் ; இறைவி - அஞ்சனாயகி.



## திருக்கழிப்பாலை பதிகம் கடுச

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

வண்ண மும்வடி வுஞ்சென்று கண்டிலள்
எண்ணி நாமங்க ளோத்தி நிறைந்திலள்
கண்ணு லாம்பொழில் சூழ்கழிப் பாலையெம்
அண்ண லேயறி வானிவ டன்மையே.

மருந்து வானவ ருய்யநஞ் சுண்டுகந்
திருந்த வன்கழிப் பாலையு ளெம்பிரான்
றிருந்து சேவடி சிந்தையுள் வைத்திவள்
பரிந்து ரைக்கினு மென்சொற் பழிக்குமே. ௨

மழலை தான்வரச் சொற்றெரி கின்றிலள்
குழலி னேர்மொழி கூறிய கேண்மினோ
அழக னேகழிப் பாலையெம் மண்ணலே
இகழ்வ தோவெனை யென்றுகொ ளென்னுமே. ௩

செய்ய மேனிவெண் ணீறணி வான்றனை
மைய லாகி மதிக்கில ளாரையுங்
கைகொள் வெண்மழு வன்கழிப் பாலையெம்
ஐய னேயறி வானிவ டன்மையே. ௪

கருத்த னைக்கழிப் பாலையுண் மேவிய
ஒருத்த னையுமை யாளொரு பங்கனை
அருத்தி யாற்சென்று கண்டிட வேண்டுமென்
றொருத்தி யாருள மூசல தாடுமே. ௫

கங்கை யைச்சடை வைத்து மலைமகள்
நங்கை யையுட னேவைத்த நாதனார்
திங்கள் சூடித் திருக்கழிப் பாலையான்
இங்கு வந்திடு மென்றிறு மாக்குமே. ௬

ஐய னேயழ கேயன லேந்திய
கைய னேகறை சேர்தரு கண்டனே
மையு லாம்பொழில் சூழ்கழிப் பாலையெம்
ஐய னேவிதி யேயரு ளென்னுமே. ௭

பத்தர் கட்கமு தாய பரத்தினை
முத்த னைமுடி வொன்றிலா மூர்த்தியை
அத்த னையணி யார்கழிப் பாலையெம்
சித்த னைச்சென்று சேருமா செப்புமே. ௮

*　　*　　*　　*　　* ௯

பொன்செய் மாமுடி வாளரக் கன்றலை
அஞ்சு நான்குமொன் றும்மிறுத் தானவன்
என்செ யான்கழிப் பாலையு ளெம்பிரான்
றஞ்சும் போதுந் துணையென லாகுமே. ௰

திருச்சிற்றம்பலம்



## திருப்பைஞ்ஞீலி பதிகம் ௬௫

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

உடையர் கோவண மொன்றுங் குறைவிலா
படைகொள் பாரிடஞ் சூழ்ந்தபைஞ் ஞீலியார்
சடையிற் கங்கை தரித்த சதுரரை
அடைய வல்லவர்க் கில்லை யவலமே.

மத்த மாமலர் சூடிய மைந்தனார்
சித்த ராய்த்திரி வார்வினை தீர்ப்பரால்
பத்தர் தாந்தொழு தேத்துபைஞ் ஞீலியெம்
அத்த னைத்தொழ வல்லவர் நல்லரே.

விழுது சூலத்தன் வெண்மழு வாட்படைக்
கழுது துஞ்சிருட் காட்டகத் தாடலான்
பழுதொன் றின்றிப்பைஞ் ஞீலிப் பரமனைத்
தொழுது செல்பவர் தம்வினை தூளியே.

ஒன்றி மாலும் பிரமனுந் தம்மிலே
நின்ற சூழ லறிவரி யானிடம்
சென்று பாரிட மேத்துபைஞ் ஞீலியுள்
என்று மேவி யிருந்த வடிகளே.

வேழத் தின்னுரி போர்த்த விகிர்தனர்
தாழச் செஞ்சடை மேற்பிறை வைத்தவர்
தாழைத் தண்பொழில் சூழ்ந்தபைஞ் ஞீலியார்
யாழின் பாட்டை யுகந்த வடிகளே. ரு

குண்டு பட்டுக் குறியறி யாச்சமண்
மிண்ட ரோடு படுத்துய்யப் போந்துநான்
கண்டங் கார்வயல் சூழ்ந்தபைஞ் ஞீலியெம்
அண்ட வாண னடியடைந் துய்ந்தனே. சு

வரிப்பை யாட ரவாட்டி மதகரி
உரிப்பை மூடிய வுத்தம னுறை
திருப்பைஞ் ஞீலி திசைதொழு வார்கள்போய்
இருப்பர் வானவ ரோடினி தாகவே. எ

கோடல் கோங்கம் புறவணி முல்லைமேல்
பாடல் வண்டிசை கேட்கும்பைஞ் ஞீலியார்
பேடு மாணும் பிறரறி யாததோர்
ஆடு நாக மசைத்த வடிகளே. அ

காரு லாமலர்க் கொன்றையந் தாரினன்
வாரு லாமுலை மங்கையொர் பங்கினன்
தேரு லாம்பொழில் சூழ்ந்தபைஞ் ஞீலியெம்
ஆர்கி லாவமு தையடைந் துய்ம்மினே. கூ

தருக்கிச் சென்று தடவரை பற்றலும்
நெருக்கி யூன்ற நினைந்து சிவனையே
அரக்கன் பாட வருளுமெம் மானிடம்
இருக்கை ஞீலியென் பார்க்கிட ரில்லையே. ய

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - நீலகண்டேசுவரர் ; இறைவி - விசாலாட்சியம்மை.

## திருவேட்களம் பதிகம் ௧௱௯

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

நன்று நாடொறு நம்வினை போயறும்
என்று மின்பந் தழைக்க விருக்கலாஞ்
சென்று நீர்திரு வேட்களத் துள்ளுறை
துன்று பொற்சடை யானைத் தொழுமினே.

கருப்பு வெஞ்சிலைக் காமனைக் காய்ந்தவன்
பொருப்பு வெஞ்சிலை யாற்புரஞ் செற்றவன்
விருப்பன் மேவிய வேட்களங் கைதொழு
திருப்ப னாகி லெனக்கிட ரில்லையே.

வேட்க ளத்துறை வேதிய னெம்மிறை
ஆக்க ளேறுவ ரானஞ்சு மாடுவர்
பூக்கள் கொண்டவன் பொன்னடி போற்றினாற்
காப்பர் நம்மைக் கறைமிடற் றண்ணலே.

அல்ல லில்லை யருவினை தானில்லை
மல்கு வெண்பிறை சூடு மணாளனார்
செல்வ னார்திரு வேட்களங் கைதொழ
வல்ல ராகில் வழியது காண்மினே.

துன்ப மில்லைத் துயரில்லை யாமினி
நம்ப னாகிய நன்மணி கண்டனார்
என்பொ னாருறை வேட்கள நன்னகர்
இன்பன் சேவடி யேத்தி யிருப்பதே.

கட்டப் பட்டுக் கவலையில் வீழாதே
பொட்ட வல்லுயிர் போவதன் முன்னநீர்
சிட்ட னார்திரு வேட்களங் கைதொழப்
பட்ட வல்வினை யாயின பாறுமே.

வட்ட மென்முலை யாளுமை பங்கனார்
எட்டு மொன்று மிரண்டுமூன் றாயினார்
சிட்டர் சேர்திரு வேட்களங் கைதொழு
திட்ட மாகி யிருமட நெஞ்சமே.

நட்ட மாடிய நம்பனை நாடொறும்
இட்டத் தாலினி தாக நினைமினோ
வட்ட வார்முலை யாளுமை பங்கனார்
சிட்ட னார்திரு வேட்களந் தன்னையே.

வட்ட மாமதின் மூன்றுடை வல்லரண்
சுட்ட கொள்கைய ராயினுஞ் சூழ்ந்தவர்
குட்ட வல்வினை தீர்த்துக் குளிர்விக்கும்
சிட்டர் பொற்றிரு வேட்களச் செல்வரே.

சேட னாருறை யுஞ்செழு மாமலை
ஓடி யாங்கெடுத் தான்முடி பத்திற
வாட வூன்றி மலரடி வாங்கிய
வேட னாருறை வேட்களஞ் சேர்மினே

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.
இறைவன் - பாசுபதேச்சுரர் ; இறைவி - நல்லநாயகி.



திருநல்லம் பதிகம் கஙிஎ

திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

கொல்லத் தானம னார்தமர் வந்தக்கால்
இல்லத் தார்செய்ய லாவதெ னேழைகாள்
நல்லத் தானமை யாளுடை யான்கழல்
சொல்லத் தான்வல்லி ரேற்றுயர் தீருமே.

பொக்கம் பேசிப் பொழுது கழியாதே
துக்கந் தீர்வகை சொல்லுவன் கேண்மினோ
தக்கன் வேள்வி தகர்த்த தழல்வண்ணன்
நக்கன் சேர்நல்ல நண்ணு தனன்மையே. ௨

பிணிகொள் வார்குழற் பேதையர் காதலால்
பணிகண் மேவிப் பயனில்லை பாவிகாள்
அணுக வேண்டி லரனெறி யாவது
நணுகு நாத னகர்திரு நல்லமே. ௩

தமக்கு நல்லது தம்முயிர் போயினால்
இமைக்கும் போது மிராதிக் குரம்பைதான்
உமைக்கு நல்லவன் றானுறை யும்பதி
நமக்கு நல்லது நல்ல மடைவதே. ௪

உரைத ளர்ந்துட லார்நடுங் காமுனம்
நரைவி டையுடை யானிட நல்லமே
பரவு மின்பணி மின்பணி வாரொடே
விரவு மின்விர வாரை விடுமினே. ௫

அல்ல லாகவைம் பூதங்க ளாட்டினும்
வல்ல வாறு சிவாய நமவென்று
நல்ல மேவிய நாத னடிதொழ
வெல்ல வந்த வினைப்பகை வீடுமே. ௬

மாத ராரொடு மக்களுஞ் சுற்றமும்
பேத மாகிப் பிரிவதன் முன்னமே
நாதன் மேவிய நல்ல நகர்தொழப்
போது மின்னெழு மின்புக லாகுமே. ௭

வெம்மை யான வினைக்கட னீங்கிநீர்
செம்மை யாய சிவகதி சேரலாம்
சும்மை யார்மலர் தூவித் தொழுமினோ
நம்மை யாளுடை யானிட நல்லமே. ௮

கால மான கழிவதன் முன்னமே
ஏலு மாறு வணங்கிநின் றேத்துமின்
மாலு மாமல ரானொடு மாமறை
நாலும் வல்லவர் கோனிட நல்லமே.

மல்லை மல்கிய தோளரக் கன்வலி
ஒல்லை யில்லொழித் தானுறை யும்பதி
நல்ல நல்லமெ னும்பெயர் நாவினால்
சொல்ல வல்லவர் தூநெறி சேர்வரே.

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - உமாமகேசுவரர் ; இறைவி - மங்களநாயகி.



## திருவாமாத்தூர் பதிகம் கருஅ

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

மாமாத் தாகிய மாலயன் மால்கொடு
தாமாத் தேடியுங் காண்கிலர் தாண்முடி
ஆமாத் தூரர னேயரு ளாயென்றென்
றேமாப் பெய்திக்கண் டாரிறை யானையே.

சந்தி யானைச் சமாதிசெய் வார்தங்கள்
புந்தி யானைப்புத் தேளிர் தொழப்படும்
அந்தி யானை யாமாத்தூ ரழகனைச்
சிந்தி யாதவர் தீவினை யாளரே.

காமாத் தம்மெனுங் கார்வலைப் பட்டுநான்
போமாத் தையறி யாது புலம்புவேன்
ஆமாத் தூரர னேயென் றழைத்தலும்
தேமாத் தீங்கனி போலத்தித் திக்குமே.

பஞ்ச பூத வலையிற் படுவதற்
கஞ்சி நானுமா மாத்தூ ரழகனை
நெஞ்சி னுனினைந் தேனினை வெய்த்தும்
வஞ்ச வாறுகள் வற்றின காண்மினே. ௪

சூராம னுங்குழ லாளொரு கூற்றனார்
அராம னுஞ்சண்ட யான்றிரு வாமாத்தூர்
இராம னும்வழி பாடுசெய் யீசனை
நிராம யன்றனை நாளு நினைமினே. ௫

பித்த னைப்பெருந் தேவர் தொழப்படும்
அத்த னையணி யாமாத்தூர் மேவிய
முத்தி னையடி யேனுண் முயறலும்
பத்தி வெள்ளம் பரந்தது காண்மினே. ௬

நீற்றி னார்திரு மேனிய னேரிழை
கூற்றி னன்குழற் கோலச் சடையிலோர்
ஆற்றி னனணி யாமாத்தூர் மேவிய
ஏற்றி னெனமை யாளுடை யீசனே. ௭

பண்ணிற் பாடல்கள் பத்திசெய் வித்தகர்க்
கண்ணித் தாகு மமுதினை யாமாத்தூர்
சண்ணிப் பானைத் தமர்க்கணித் தாயதோர்
கண்ணிற் பாவையன் னானவன் காண்மினே. ௮

குண்டர் பீலிகள் கொள்ளுங் குணமிலா
மிண்ட ரோடெனை வேறு படுத்துய்யக்
கொண்ட நாதன் குளிர்புனல் வீரட்டத்
தண்ட னாரிட மாமாத்தூர் காண்மினே. ௯

வானஞ் சாடு மதியர வத்தொடு
தானஞ் சாதுடன் வைத்த சடையிடைத்
தேனஞ் சாடிய தெங்கிள நீரொடும்
ஆனஞ் சாடிய வாமாத்தூ ரையனே. ௰

விடலை யாய்விலங் கல்லெடுத் தான்முடி
அடர வோர்விர லூன்றிய வாமாத்தூர்
இடம தாக்கொண்ட வீசனுக் கென்னுளம்
இடம தாகக்கொண் டேன்புறந் திருப்பனே. கக

திருச்சிற்றம்பலம்

இது சோணாட்டிலுள்ளது.

இறைவன் - அழகுகாதலர்; இறைவி - அழகியநாயகி.



## திருத்தோணிபுரம்                                                  பதிகம் கஙுகூ

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

மாதி யன்று மனைக்கிரு வென்றக்கால்
நீதி தான்சொல நீயெனக் காரெனுஞ்
சோதி யார்தரு தோணி புரவர்க்குத்
தாதி யாவனு னென்னுமென் னையயே. க

நக்கம் வந்து பலியிடென் றூர்க்கிட்ட
மிக்க தையலை வெள்வளை கொள்வது
தொக்க நீர்வயற் றோணி புரவர்க்குத்
தக்க தன்று தமது பெருமைக்கே. உ

கெண்டை போனய னத்திம வான்மகள்
வண்டு வார்குழ லாளுட னாகவே
துண்ட வான்பிறைத் தோணி புரவனைக்
கண்டு காமுறு கின்றனள் கன்னியே. ௩

பாலை யாழ்மொழி யாளவ டாழ்சடை
மேல ளாவது கண்டனள் விண்ணுறச்
சோலை யார்தரு தோணி புரவர்க்குச்
சால நல்லளா கின்றன டையலே. ௪

பண்ணி னேர்மொழி யாள்பலி யிட்டவிப்
பெண்ணை மால்கொடு பெய்வளை கொள்வது
சுண்ண மாடிய தோணி புரத்துறை
அண்ண லாருக்குச் சால வழகிதே. ௩

முல்லை வெண்ணகை மொய்குழ லாயுனக்
கல்ல னவ தறிந்திலை நீகனித்
தொல்லை யார்பொழிற் றோணி புரவர்க்கே
நல்லை யாயிடு கின்றனை நங்கையே. ௪

ஒன்று தானறி யாருல கத்தவர்
நின்று சொல்லி நிகழ்ந்த நினைப்பிலர்
துன்று வார்பொழிற் றோணி புரவர்தங்
கொன்றை சூடுங் குறிப்பது வாகுமே. ௫

உறவு பேய்க்கண முண்பது வெண்டலை
உறைவ தீம முடலிலோர் பெண்கொடி
துறைக ளார்கடற் றோணி புரத்துறை
இறைவ னார்க்கிவ ளென்கண்டன் பாவதே. ௬

மாக யானை மருப்பேர் முலையினர்
போக யானு மவள்புக்க தேபுகத்
தோகை சேர்தரு தோணி புரவர்க்கே
ஆக யானு மவர்க்கினி யாளதே. ௭

இட்ட மாயின செய்வாளென் பெண்கொடி
கட்டம் பேசிய காரரக் கன்றனைத்
துட்ட டக்கிய தோணி புரத்துறை
அட்ட மூர்த்திக்கு வன்பது வாகியே. ௰

திருச்சிற்றம்பலம்



## திருப்புகலூர்                    பதிகம் ககூய

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

துன்னக் கோவணச் சுண்ணவெண் ணீறணி
பொன்னக் கன்ன சடைப்புக லூரரோ
மின்னக் கன்னவெண் டிங்களைப் பாம்புடன்
என்னுக் கோவுடன் வைத்திட் டிருப்பதே. க

இரைக்கும் பாம்பு மெறிதரு திங்களும்
நுரைக்குங் கங்கையு நுண்ணிய செஞ்சடைப்
புரைப்பி லாத பொழிற்புக லூரரை
உரைக்கு மாசொல்லி யொள்வளை சோருமே. உ

ஊச லாமர வல்குலென் சோர்குழல்
ஏச லாம்பழி தந்தெழில் கொண்டனர்
ரோசொ லாய்மக ளேமுறை யோவென்று
பூச ளுமிடு தும்புக லூரர்க்கே. ங

மின்னி னேரிடை யாளுமை பங்கனைத்
தன்னை நேரொப்பி லாத தலைவனைப்
புன்னைக் கானற் பொழிற்புக லூரனை
என்னு ளாகவைத் தின்புற் றிருப்பனே. ச

விண்ணி னார்மதி சூடிய வேந்தனை
எண்ணி நாமங்க ளோதி யெழுத்தஞ்சும்
கண்ணி னாற்கழல் காண்பிட மேதெனிற்
புண்ணி யன்புக லூருமென் னெஞ்சுமே. ரு

அண்ட வாண ரமுதுண நஞ்சுண்டு
பண்டு நான்மறை யோதிய பாடலன்
தொண்ட ராகித் தொழுது மதிப்பவர்
புண்ட ரீகத் துளார்புக லூரரே. சு

தத்து வந்தலை கண்டறி வாரிலைத்
தத்து வந்தலை கண்டவர் கண்டிலர்
தத்து வந்தலை நின்றவர்க் கல்லது
தத்து வனலன் றண்புக லூரனே.

பெருங்கை யாகிப் பிளிறி வருவதோர்
கருங்கை யானைக் களிற்றுரி போர்த்தவர்
வருங்கை யானை மதகளி றஞ்சினைப்
பொருங்கை யானைகண் டீர்புக லூரரே.

பொன்னொத் தநிறத் தானும் பொருகடல்
தன்னொத் தநிறத் தானு மறிகிலாப்
புன்னைத் தாதுபொ ழிற்புக லூரரை
என்னத் தாவென வென்னிடர் தீருமே.

மத்த னாய்மதி யாது மலைதனை
எத்தி னான்றிர டோண்முடி பத்திற
ஒத்தி னான்விர லாலொருங் கேத்தலும்
பொத்தி னான்புக லூரைத் தொழுமினே.

திருச்சிற்றம்பலம்



## திருக்கச்சியேகம்பம் — பதிகம் க௬க

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பண்டு செய்த பழவினை யின்பயன்
கண்டுங் கண்டுங் களித்திகா ணெஞ்சமே
வண்டு லாமலர்ச் செஞ்சடை யேகம்பன்
தொண்ட னாய்த்திரி யாய்துயர் தீரவே.

நச்சி நாளு நயந்தடி யார்தொழ
இச்சை யாலுமை நங்கை வழிபடக்
கொச்சை யார்குறு கார்செறி தீம்பொழிற்
கச்சி யேகம்ப மேகை தொழுமினே. ௨

ஊனி லாவி யியங்கி யுலகெலாந்
தானு லாவிய தன்மைய ராகிலும்
வானு லாவிய பாணி பிறங்கவெங்
கானி லாடுவர் கச்சியே கம்பரே. ௩

இமையா முக்கண ரென்னெஞ்சத் துள்ளவர்
தமையா ரும்மறி வொண்ணாத் தகைமையர்
இமையோ ரேத்த விருந்தவ னேகம்பன்
நமையா ளும்மவ னைத்தொழு மின்களே. ௪

மருந்தி னோடுநற் சுற்றமு மக்களும்
பொருந்தி நின்றெனக் காயவெம் புண்ணியன்
கருந்த டங்கண்ணி னாளுமை கைதொழ
இருந்த வன்கச்சி யேகம்பத் தெந்தையே. ௫

பொருளி னோடுநற் சுற்றமும் பற்றிலர்க்
கருளு நன்மைதந் தாய வரும்பொருள்
சுருள்கொள் செஞ்சடை யான்கச்சி யேகம்பம்
இருள்கெ டச்சென்று கைதொழு தேத்துமே. ௬

மூக்கு வாய்செவி கண்ணுட லாகிவந்
தாக்கு மைவர்த மாப்பை யவிழ்த்தருள்
நோக்கு வானமை நோய்வினை வாராமே
காக்கு நாயகன் கச்சியே கம்பனே. ௭

பண்ணி லோசை பழத்தினி லின்சுவை
பெண்ணொ டாணென்று பேசற் கரியவன்
வண்ண மில்லி வடிவுவே றாயவன்
கண்ணி லுண்மணி கச்சியே கம்பனே. ௮

திருவி னாயகன் செம்மலர் மேலயன்
வெருவ நீண்ட விளங்கொளிச் சோதியான்
ஒருவ னாயுணர் வாயுணர் வல்லதோர்
கருவு னாயகன் கச்சியே கம்பனே.

இடுகு நுண்ணிடை யேந்திள மென்முலை
வடிவின் மாதர் திறமனம் வையன்மின்
பொடிகொண் மேனியன் பூம்பொழிற் கச்சியுள்
அடிக ளெம்மை யருந்துயர் தீர்ப்பரே.

இலங்கை வேந்த னிராவணன் சென்றுதன்
விலங்க லையெடுக் கவ்விர லூன்றலும்
கலங்கிக் கச்சியே கம்பவோ வென்றலும்
நலங்கொள் செல்வளித் தானெங்க ளாதனே.

திருச்சிற்றம்பலம்



## திருக்கச்சியேகம்பம் பதிகம் கசுஉ

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பூமே லானும் பூமகள் கேள்வனும்
நாமே தேவரெ னாமை நடுக்குறத்
தீமே வும்முரு வாதிரு வேகம்பா
ஆமோ வல்லற் படவடி யோங்களே.

அருந்தி றலம ரரயன் மாலொடு
திருந்த நின்று வழிபடத் தேவியோ
டிருந்த வன்னெழி லார்கச்சி யேகம்பம்
பொருந்தச் சென்று புடைபட் டெழுதுமே.

கறைகொள் கண்டத்தெண் டோளிறை முக்கணன்
மறைகொ ளாவினன் வானவர்க் காதியான்
உறையும் பூம்பொழில் சூழ்கச்சி யேகம்பம்
முறைமை யாற்சென்று முந்தித் தொழுதுமே. ௩

பொறிப்பு லன்களைப் போக்கறுத் துள்ளத்தை
நெறிப்ப டுத்து நினைந்தவர் சிந்தையுள்
அறிப்பு றும்மமு தாயவ னேகம்பம்
குறிப்பி னாற்சென்று கூடித் தொழுதுமே. ௪

சிந்தை யுட்சிவ மாய்நின்ற செம்மையோ
டந்தி யாயன லாய்ப்புனல் வானமாய்ப்
புந்தி யாய்ப்புகுந் துள்ள நிறைந்தவெம்
எந்தை யேகம்ப மேத்தித் தொழுமினே. ௫

சாக்கி யத்தொடு மற்றுஞ் சமண்படும்
பாக்கி யம்மிலார் பாடுசெ லாதுறப்
பூக்கொள் சேவடி யான்கச்சி யேகம்பம்
நாக்கொ டேத்தி நயந்து தொழுதுமே. ௬

மூப்பி னோடு முனிவுறுத் தெந்தமை
ஆர்ப்ப தன்முன் னணியம ரர்க்கிறை
காப்ப தாய கடிபொழி லேகம்பம்
சேர்ப்ப தாகநாஞ் சென்றடைந் துய்துமே. ௭

ஆறு மாமயிற் சாயனல் லாரொடும்
சால நீயுழ மாறவிர் நெஞ்சமே
நீல மாமிடற் றண்ணலே கம்பனார்
கோல மாமலர்ப் பாதமே கும்பிடே. ௮

பொய்ய னைத்தையும் விட்டவர் புந்தியுள்
மெய்ய னைச்சுடர் வெண்மழு வேந்திட
கைய னைக்கச்சி யேகம்ப மேவிய
ஐய னைத்தொழு வார்க்கில்லை யல்லலே. ௯

அரக்கன் றன்வலி யுன்னிக் கயிலையை
நெருக்கிச் சென்றெடுத் தான்முடி தோளொடித்
திரக்க வின்னிசை கேட்டவ னேகம்பம்
தருக்க தாக்கரன் சார்ந்து தொழுதுமே.

திருச்சிற்றம்பலம்



## திருவெண்காடு

பதிகம் கரு

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பண்காட் டிப்படி யாயதன் பத்தர்க்குக்
கண்காட் டிக்கண்ணி னின்ற மணியொக்கும்
பெண்காட் டிப்பிறைச் சென்னிவைத் தான்திரு
வெண்காட் டையடைந் துய்ம்மட நெஞ்சமே.

கொள்ளி வெந்தழல் வீசிநின் றாடுவார்
ஒள்ளி யகணஞ் சூழுமை பங்கனார்
வெள்ளி யன்கரி யன்பசு வேறிய
தெள்ளி யன்திரு வெண்கா டடைநெஞ்சே.

ஊனைக் குமின்பம் வேண்டிக் குழலாதே
வானைக் கும்வழி யாவது நின்மினோ
தானைக் குந்தன் னடியவர் நாவினிற்
றேனைக் குந்திரு வெண்கா டடைநெஞ்சே.

பருவெண் கோட்டுப்பைங் கண்மத வேழத்தின்
உருவங் காட்டிநின் றானுமை யஞ்சவே
பெருவெண் காட்டிறை வன்னுறை யும்மிடந்
திருவெண் காடடைந் துய்ம்மட நெஞ்சமே.

பற்ற வன்கங்கை பாம்பு மதியுடன்
உற்ற வன்சடை யானுயர் ஞானங்கள்
கற்ற வன்கய வர்புர மோரம்பாற்
செற்ற வன்றிரு வெண்கா டடைநெஞ்சே. ௫

கூடி னானுமை யாளொரு பாகமாய்
வேட னாய்விச யற்கருள் செய்தவன்
சேட னார்சிவ னார்சிந்தை மேயவெண்
காட னாரடி யேயடை நெஞ்சமே. ௬

தரித்த வன்கங்கை பாம்பு மதியுடன்
புரித்த புன்சடை யான்கய வர்புரம்
எரித்த வன்மறை நான்கினோ டாறங்கம்
விரித்த வன்னுறை வெண்கா டடைநெஞ்சே. ௭

பட்ட மிண்டை யவைகொடு பத்தர்கள்
சிட்ட னாதியென் றுசிந்தை செய்யவே
நட்ட மூர்த்திஞா னச்சுட ராய்நின்ற
அட்ட மூர்த்திதன் வெண்கா டடைநெஞ்சே. ௮

ஏன வேடத்தி னானும் பிரமனுந்
தான வேடமுன் னாழ்ந்தறி கின்றிலா
ஞான வேடன் விசயற் கருள்செயுங்
கான வேடன்றன் வெண்கா டடைநெஞ்சே. ௯

பாலை யாடுவர் பன்மறை யோதுவர்
சேலை யாடிய கண்ணுமை பங்கனார்
வேலை யார்விட முண்டவெண் காடர்க்கு
மாலை யாவது மாண்டவ ரங்கமே. ௰

இராவ ணஞ்செய மாமதி பற்றவை
யிராவ ணம்முடை யான்றனை யுள்குமின்
இராவ ணன்றனை யூன்றி யருள்செய்த
இராவ ணன்றிரு வெண்கா டடைமினே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

**இறைவன் - சுவேதாரணியேசுரர்; இறைவி - பிரமவித்தியாநாயகி.**

## திருவாய்மூர்

பதிகம் ௧௬௪

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

எங்கே யென்னை யிருந்திடந் தேடிக்கொண்
டங்கே வந்தடை யாள மருளினார்
தெங்கே தோன்றுந் திருவாய்மூர்ச் செல்வனார்
அங்கே வாவென்று போனா ரதென்கொலோ. ௧

மன்னு மாமறைக் காட்டு மணாளனார்
உன்னி யுன்னி யுறங்குகின் றேனுக்குத்
தன்னை வாய்மூர்த் தலைவனா மாசொல்லி
என்னை வாவென்று போனா ரதென்கொலோ. ௨

தஞ்சே கண்டேன் றரிக்கிலா தாரென்றேன்
அஞ்சே லுன்னை யழைக்கவந் தேனென்றார்
உஞ்சே னென்றுகந் தேயெழுந் தோட்டந்தேன்
வஞ்சே வல்லரே வாய்மூ ரடிகளே. ௩

கழியக் கண்டிலேன் கண்ணெதி ரேகண்டேன்
ஒழியப் போந்திலே னொக்கவே யோட்டந்தேன்
வழியிற் கண்டிலேன் வாய்மூ ரடிகடம்
சுழியிற் பட்டுச் சுழல்கின்ற தென்கொலோ. ௪

ஒள்ளி யாரிவ ரன்றிமற் றில்லையென்
றுள்கி யுள்கி யுகந்திருந் தேனுக்குத்
தெள்ளி யாரிவர் போலத் திருவாய்மூர்க்
கள்ளி யாரவர் போலக் கரந்ததே. ௫

யாதே செய்து மியாமலோ நீயென்னில்
ஆதே யேயு மளவில் பெருமையான்
மாதே வாகிய வாய்மூர் மருவினார்
போதே யென்றும் புகுந்ததும் பொய்கொலோ. ௬

பாடிப் பெற்ற பரிசில் பழங்காசு
வாடி வாட்டந் தவிர்ப்பா ரவரைப்போல்
தேடிக் கொண்டு திருவாய்மூர்க் கேயெனா
ஓடிப் போந்திங் கொளித்தவா றென்கொலோ. எ

திறக்கப் பாடிய வென்னினுஞ் செந்தமிழ்
உறைப்புப் பாடி யடைப்பித்தா ருந்நின்றார்
மறைக்க வல்லரோ தம்மைத் திருவாய்மூர்ப்
பிறைக்கொள் செஞ்சடை யாரிவர் பித்தரே. அ

தனக்கே றுமை தவிர்க்கென் று வேண்டினும்
நினைத்தேன் பொய்க்கருள் செய்திடு நின்மலன்
எனக்கே வந்தெதிர் வாய்மூருக் கேயெனாப்
புனற்கே பொற்கோயில் புக்கதும் பொய்கொலோ. கூ

தீண்டற் கரிய திருவடி யொன்றினால்
மீண்டற் கும்மிதித் தாரரக் கன்றனை
வேண்டிக் கொண்டேன் திருவாய்மூர் விளக்கினைத்
தூண்டிக் கொள்வனா னென்றலுந் தோன்றுமே. ய

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - வாய்மூர்நாதர்; இறைவி - பாலினுநன்மொழியாள்.

---

**பதிக வரலாறு :**

சொல்வேந்தர் திருமறைக்காட்டிற் றமது திருமடத்தில் திருக்கதவினைத் தாம் அரிதிற் பாடித்திறந்ததையும் பிள்ளையார் எளிதிற் பாடியடைத்ததையும் எண்ணிப் பேழ்கணித்திருக்கையில் சிவபெருமான் அவரிடத்திற் சென்று யாம் வாய்மூரிலிருப்போம்வா என்று முன்னே செல்ல, நாயனார் எழுந்து இத்திருக்குறுந்தொகையைப் பாடிக்கொண்டே சுவாமி பின்னே திருவாய்மூருக் கெழுந்தருளினார்.



## திருப்பாலைத்துறை பதிகம் ககூரு

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

நீல மாமணி கண்டத்தர் நீள்சடைக்
கோல மாமதி கங்கையுங் கூட்டினார்
சூல மான்மழு வேந்திச் சுடர்முடிப்
பானெய் யாடுவர் பாலைத் துறையரே.

கவள மாகளிற் றின்னுரி போர்த்தவர்
தவள வெண்ணகை மங்கையொர் பங்கினர்
திவள வானவர் போற்றித் திசைதொழும்
பவள மேனியர் பாலைத் துறையரே.

மின்னி னுண்ணிடைக் கன்னியர் மிக்கெங்கும்
பொன்னி நீர்மூழ்கிப் போற்றி யடிதொழ
மன்னி நான்மறை யோடுபல் கீதமும்
பன்னி னாரவர் பாலைத் துறையரே.

நீடு காடிட மாய்நின்ற பேய்க்கணம்
கூடு பூதங் குழுமிநின் றார்க்கவே
ஆடி னாரழ காகிய நான்மறை
பாடி னாரவர் பாலைத் துறையரே.

சித்தர் கன்னியர் தேவர்க டானவர்
பித்தர் நான்மறை வேதியர் பேணிய
அத்த னேநமை யாளுடை யாயெனும்
பத்தர் கட்கன்பர் பாலைத் துறையரே.

விண்ணி னார்பணிந் தேத்த வியப்புறும்
மண்ணி னார்மற வாது சிவாயவென்
றெண்ணி னார்க்கிட மாவெழில் வானகம்
பண்ணி னாரவர் பாலைத் துறையரே.

குரவ னார்கொடு கொட்டியுங் கொக்கரை
விரவி னார்பண் கெழுமிய வீணையும்
மருவு நாண்மலர் மல்லிகை செண்பகம்
பரவு நீர்ப்பொன்னிப் பாலைத் துறையரே. எ

தொடருந் தொண்டரைத் துக்கந் தொடர்ந்துவந்
தடரும் போதர னையருள் செய்பவர்
கடலி னஞ்சணி கண்டர் கடிபுனல்
படருஞ் செஞ்சடைப் பாலைத் துறையரே. அ

மேகந் தோய்பிறை சூடுவர் மேகலை
நாகந் தோய்ந்த வரையினர் நல்லியல்
போகந் தோய்ந்த புணர்முலை மங்கையோர்
பாகந் தோய்ந்தவர் பாலைத் துறையரே. க

வெங்கண் வாளர வாட்டி வெருட்டுவர்
அங்க ணாரடி யார்க்கரு ணல்குவர்
செங்கண் மாலயன் றேடற் கரியவர்
பைங்க ணேற்றினர் பாலைத் துறையரே. ய

உரத்தி னலரக் கன்னுயர் மாமலை
நெருக்கி னானை நெரித்தவன் பாடலும்
இரக்க மாவருள் செய்தபா லைத்துறை
கரத்தி னாற்றொழு வார்வினை யோயுமே. கக

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - பாலைவனநாதர்; இறைவி - தவளவெண்ணகையாள்.



திருநாகேச்சரம் பதிகம் கஎ௯

## திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

நல்லர் நல்லதோர் நாகங்கொண் டாட்டுவார்
வல்லர் வல்வினை தீர்க்கு மருந்துகள்
பல்லி லோடுகை யேந்திப் பலிதிரி
செல்வர் போற்றிரு நாகேச் சரவரே.

நாவ லம்பெருந் தீவினில் வாழ்பவர்
மேவி வந்து வணங்கி வினையொடு
பாவ மாயின பற்றறு வித்திடும்
தேவர் போற்றிரு நாகேச் சரவரே.

ஓத மார்கட லின்விட முண்டவர்
ஆதி யாரய னோடம ரர்க்கெலாம்
மாதோர் கூறர் மழுவல னேந்திய
நாதர் போற்றிரு நாகேச் சரவரே.

சந்தி ரன்னொடு சூரியர் தாமுடன்
வந்து சீர்வழி பாடுகள் செய்தபின்
ஐந்த லையர வின்பணி கொண்டருள்
மைந்தர் போன்மணி நாகேச் சரவரே.

பண்டோர் நாளிகழ் வான்பழித் தக்கனார்
கொண்ட வேள்விக் குமண்டை யதுகெடத்
தண்ட மாவிதா தாவின் றலைகொண்ட
செண்டர் போற்றிரு நாகேச் சரவரே.

வம்பு பூங்குழல் மாது மறுகவோர்
கம்ப யானை யுரித்த கரத்தினர்
செம்பொ னாரித ழிம்மலர்ச் செஞ்சடை
நம்பர் போற்றிரு நாகேச் சரவரே.

மானை யேந்திய கையினர் மையறு
ஞானச் சோதிய ராதியர் நாமந்தான்
ஆன வஞ்செழுத் தோதவந் தண்ணிக்கும்
தேனர் போற்றிரு நாகேச் சரவரே.

கழல்கொள் காலினர் காலனைக் காய்ந்தவர்
தழல்கொண் மேனியர் சாந்தவெண் ணீறணி
அழக ரானிழற் கீழற மோதிய
குழகர் போற்குளிர் நாகேச் சரவரே.

வட்ட மாமதிண் மூன்றுடன் வல்லரண்
சுட்ட செய்கைய ராகிலுஞ் சூழ்ந்தவர்
குட்ட வல்வினை தீர்த்துக் குளிர்விக்குஞ்
சிட்டர் போற்றிரு நாகேச் சரவரே.

ஆர்த்தன் றோண்முடி தாளுந் தொலையவே
சேர்த்தி னார்திருப் பாதத் தொருவிரல்
ஆர்த்து வந்துல கத்தவ ராடிடும்
தீர்த்தர் போற்றிரு நாகேச் சரவரே.　　ய

திருச்சிற்றம்பலம்



## திருவதிகைவீரட்டானம்　　பதிகம் கசுஎ

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

கோணன் மாமதி சூடியோர் கோவணம்
நாணில் வாழ்க்கை நயந்தும் பயனிலை
பாணில் வீணை பயின்றவன் வீரட்டம்
காணி லல்லதென் கண்டுயில் கொள்ளுமே.

பண்ணி னேப்பவ ளத்திரண் மாமணி
அண்ண லேயம ரர்தொழு மாதியைச்
சுண்ண வெண்பொடி யான்றிரு வீரட்டம்
நண்ணி லல்லதென் கண்டுயில் கொள்ளுமே. உ

உற்ற வர்தம் முறுநோய் களைபவர்
பெற்ற மேறும் பிறங்கு சடையினர்
சுற்றும் பாய்புனல் சூழ்திரு வீரட்டம்
கற்கி லல்லதென் கண்டுயில் கொள்ளுமே. ௩

முற்று வெண்மதி சூடு முதல்வனுர்
செற்றுர் வாழுந் திரிபுரந் தீயெழ
விற்றன் கொண்டெயி லெய்தவர் வீரட்டம்
கற்று லல்லதென் கண்டுயில் கொள்ளுமே. ௪

பல்லா ரும்பல தேவர் பணிபவர்
நல்லா ருந்நயந் தேத்தப் படுபவன்
வில்லான் மூவெயி லெய்தவன் வீரட்டம்
கல்லே னுகிலென் கண்டுயில் கொள்ளுமே. ௫

வண்டார் கொன்றையு மத்தம் வளர்சடைக்
கொண்டான் கோல மதியோ டரவமும்
விண்டார் மும்மதி லெய்தவன் வீரட்டம்
கண்டா லல்லதென் கண்டுயில் கொள்ளுமே. ௬

அரையார் கோவண வாடைய னுறெலாம்
திரையா ரொண்புனல் பாய்கெடி லக்கரை
விரையார் நீற்றன் விளங்குவீ ரட்டன்பால்
கரையே னுகிலென் கண்டுயில் கொள்ளுமே. ௭

நீறு டைத்தடந் தோளுடை நின்மலன்
ஆறு டைப்புனல் பாய்கெடி லக்கரை
ஏறு டைக்கொடி யான்றிரு வீரட்டம்
கூறி லல்லதென் கண்டுயில் கொள்ளுமே. ௮

செங்கண் மால்விடை யேறிய செல்வனார்
பைங்க ணானையி னீருரி போர்த்தவர்
அங்கண் ஞாலம தாகிய வீரட்டம்
கங்கு லாகவென் கண்டுயில் கொள்ளுமே. ௯

பூணா ணாரம் பொருந்த வுடையவர்
நாணா கவ்வரை வில்லிடை யம்பினால்
பேணார் மும்மதி லெய்தவன் வீரட்டம்
காணே னாகிலென் கண்டுயில் கொள்ளுமே. ௰

வரையார்ந் தவயி ரத்திரண் மாமணிக்கும்
திரையார்ந் தபுனல் பாய்கெடி லக்கரை
விரையார் நீற்றன் விளங்கிய வீரட்டம்
உரையே னாகிலென் கண்டுயில் கொள்ளுமே. ௧௧

உலந்தார் வெண்டலை யுண்கல னாகவே
வலந்தான் மிக்கவவ் வாளரக் கன்றனைச்
சிலம்பார் சேவடி யூன்றினான் வீரட்டம்
புலம்பே னாகிலென் கண்டுயில் கொள்ளுமே. ௧௨

திருச்சிற்றம்பலம்



திருவதிகைவீரட்டானம் பதிகம் கசுஅ

## திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

எட்டு நாண்மலர் கொண்டவன் சேவடி
மட்ட லரிடு வார்வினை மாயுமால்
கட்டித் தேன்கலந் தன்ன கெடிலவீ
ரட்ட னாரடி சேரு மவருக்கே.

நீள மாநினைந் தெண்மல ரிட்டவர்
கோள வல்வினை யுங்குறை விப்பரால்
வாள மாலிழி யுங்கெடி லக்கரை
வேளி சூழ்ந்தழ காயவீ ரட்டரே. ௨

கள்ளி ஞண்மல ரோரிரு நான்குகொண்
டுள்கு வாரவர் வல்வினை யோட்டுவார்
தெள்ளு நீர்வயல் பாய்கெடி லக்கரை
வெள்ளை நீறணி மேனிவீ ரட்டரே. ௩

பூங்கொத் தாயின மூன்றொடோ ரைந்திட்டு
வாங்கி நின்றவர் வல்வினை யோட்டுவார்
வீங்கு தண்புனல் பாய்கெடி லக்கரை
வேங்கைத் தோலுடை யாடைவீ ரட்டரே. ௪

தேனப் போதுகண் மூன்றொடோ ரைந்துடன்
தானப் போதிடு வார்வினை தீர்ப்பவர்
மீனத் தண்புனல் பாய்கெடி லக்கரை
வேன லானை யுரித்தவீ ரட்டரே. ௫

ஏழித் தொன்மலர் கொண்டு பணிந்தவர்
ஊழித் தொல்வினை யோட வகற்றுவார்
பாழித் தண்புனல் பாய்கெடி லக்கரை
வேழத் தின்னுரி போர்த்தவீ ரட்டரே. ௬

உரைசெய் நூல்வழி யொண்மல ரெட்டிடத்
திரைகள் போல்வரு வல்வினை தீர்ப்பரால்
வரைகள் வந்திழி யுங்கெடி லக்கரை
விரைகள் சூழ்ந்தழ காயவீ ரட்டரே. ௭

ஒலி வண்டறை யொண்மல ரெட்டினால்
காலை யேத்த வினையைக் கழிப்பரால்
ஆலி வந்திழி யுங்கெடி லக்கரை
வேலி சூழ்ந்தழ காயவீ ரட்டரே. ௮

தாரித் துள்ளித் தடமல ரெட்டினல்
பாரித் தேத்தவல் லார்வினை பாற்றுவார்
மூரித் தெண்டிரை பாய்கெடி லக்கரை
வேரிச் செஞ்சடை வேய்ந்தவி ரட்டரே. ௯

அட்ட புட்ப மவைகொளு மாறுகொண்
டட்ட மூர்த்திய னாதிதன் பாலணை
தட்டு மாறுசெய் கிற்ப வதிகைவீ
ரட்ட னாரடி சேரு மவர்களே. ௰

திருச்சிற்றம்பலம்



## திருநாரையூர்

பதிகம் ௧௨௰

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

விறு தானுடை வெற்பன் மடந்தையோர்
கூற னாகிலுங் கூன்பிறை சூடிலும்
நாறு பூம்பொழி னாரையூர் நம்பனுக்
காறு சூடனு மம்ம வழகிதே. ௧

புள்ளி கொண்ட புலியுரி யாடையும்
வெள்ளி கொண்டவெண் பூதிமெய் யாடலும்
நள்ளி தெண்டிரை நாரையூ ரானஞ்சை
அள்ளி யுண்டலு மம்ம வழகிதே. ௨

வேடு தங்கிய வேடமும் வெண்டலை
ஓடு தங்கிய வுண்பலி கொள்கையும்
நாடு தங்கிய நாரையூ ரானடம்
ஆடு பைங்கழ லம்ம வழகிதே. ௩

கொக்கின் றூவலுங் கூவிளங் கண்ணியும்
மிக்க வெண்டலை மாலை விரிசடை
நக்க னாகிலு நாரையூர் நம்பனுக்
கக்கி னாரமு மம்ம வழகிதே. ௪

வடிகொள் வெண்மழு மானமர் கைகளும்
பொடிகொள் செம்பவ ளம்புரை மேனியும்
நடிகொ ணன்மயில் சேர்திரு நாரையூர்
அடிக டம்வடி வம்ம வழகிதே. ௫

சூல மல்கிய கையுஞ் சுடரொடு
பாலு நெய்தயி ராடிய பான்மையும்
ஞால மல்கிய நாரையூர் நம்பனுக்
கால நீழலு மம்ம வழகிதே. ௬

பண்ணி னுன்மறை பாடலோ டாடலும்
எண்ணி லார்புர மூன்றெரி செய்ததும்
நண்ணி னார்துயர் தீர்த்தலு நாரையூர்
அண்ண லார்செய்கை யம்ம வழகிதே. ௭

என்பு பூண்டொரு தேறி யிளம்பிறை
மின்பு ரிந்த சடைமேல் விளங்கவே
நன்ப கற்பலி தேரினு நாரையூர்
அன்ப னுக்கது வம்ம வழகிதே. ௮

முரலும் கின்னர மொந்தை முழங்கவே
இரவி னின்றெரி யாடலு நீடெலாம்
நரலும் வாரிநன் னுரையூர் நம்பனுக்
கரவும் பூணுத லம்ம வழகிதே. ௯

கடுக்கை யஞ்சடை யன்கயி லைம்மலை
எடுத்த வாளரக் கன்றலை யீரஞ்சும்
நடுக்கம் வந்திற நாரையூ ரான்விரல்
அடுத்த தன்மையு மம்ம வழகிதே. ௰

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - சவுந்தரேசுவரர்; இறைவி - திரிபுரசுந்தரி.

திருக்குறுந்தொகை
பதிகம் ௧௭௰

## திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

மைக்கொள் கண்ணுமை பங்கினன் மான்மழுத்
தொக்க கையினன் செய்யதோர் சோதியன்
கொக்க மர்பொழில் சூழ்தரு கோளிலி
நக்க னைத்தொழ நம்வினை நாசமே. ௧

முத்தி னைமுத லாகிய மூர்த்தியை
வித்தி னைவினை யாய விகிர்தனைக்
கொத்த லர்பொழில் சூழ்தரு கோளிலி
அத்த னைத்தொழ நீங்குநம் மல்லலே. ௨

வெண்டி ரைப்பர வைவிட முண்டதோர்
கண்ட னைக்கலந் தார்தமக் கன்பனைக்
கொண்ட லம்பொழிற் கோளிலி மேவிய
அண்ட னைத்தொழு வார்க்கல்ல லில்லையே. ௩

பலவும் வல்வினை பாறும் பரிசினால்
உலவுங் கங்கையுந் திங்களு மொண்சடை
குலவி னான்குளி ரும்பொழிற் கோளிலி
நிலவி னான்றனை நித்தல் நினைமினே. ௪

அல்ல லாயின தீரு மழகிய
முல்லை வெண்முறு வல்லுமை யஞ்சவே
கொல்லை யானை யுரித்தவன் கோளிலிச்
செல்வன் சேவடி சென்று தொழுமினே. ௫

ஆவின் பால்கண் டளவி லருந்தவப்
பாலன் வேண்டலுஞ் செல்லென்று பாற்கடல்
கூவி னான்குளி ரும்பொழிற் கோளிலி
மேவி னானைத் தொழவினை வீடுமே. ௬

சீர்த்த நன்மனை யாளுஞ் சிறுவரும்
ஆர்த்த சுற்றமும் பற்றிலை யாதலால்
கூத்த னுறையுந் திருக் கோளிலி
ஏத்தி நீர்தொழு மின்னிடர் தீருமே.

மால தாகி மயங்கு மனிதர்காள்
காலம் வந்து கடைமுடி யாமுனம்
கோல வார்பொழிற் கோளிலி மேவிய
நீல கண்டனை நின்று நினைமினே.

கேடு மூடிக் கிடந்துண்ணு நாடது
தேடி நீர்திரி யாதே சிவகதி
கூட லாந்திருக் கோளிலி யீசனைப்
பாடு மின்னிர வோடு பகலுமே.

மடுத்து மாமலை யேந்தலுற் றான்றனை
அடர்த்துப் பின்னு மிரங்கி யவற்கருள்
கொடுத்த வன்னுறை கோளிலி யேதொழ
விடுத்து நீங்கிடு மேலை வினைகளே.

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

**இறைவன் - கோளிலிநாதர்; இறைவி - வண்டமர்பூங்குழலம்மை**



## திருக்கோளிலி

பதிகம் ௩௯௪

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

முன்ன மேநினை யாதொழிந் தேனுனை
இன்ன நாளுன சேவடி யேத்திலேன்
செந்நெ லார்வயல் சூழ்திருக் கோளிலி
மன்ன னேயடி யேனை மறவலே.

விண்ணு ளார்தொழு தேத்தும் விளக்கினை
மண்ணு ளார்வினை தீர்க்கு மருந்தினைப்
பண்ணு ளார்பயி லுந்திருக் கோளிலி
அண்ண லாரடி யேதொழு துய்ம்மினே. ௨

நாளு நம்முடை நாள்க ளறிகிலோம்
ஆளு நோய்களோ ரைம்பதோ டாறெட்டும்
ஏழை மைப்பட் டிருந்துநீர் நையாதே
கோளி லியரன் பாதமே கூறுமே. ௩

விழவி னோசை யொலியறாத் தண்பொழில்
பழகி னார்வினை தீர்க்கும் பழம்பதி
அழல்கை யானம ருந்திருக் கோளிலிச்
குழக னார்திருப் பாதமே கூறுமே. ௪

மூல மாகிய மூவர்க்கு மூர்த்தியைக்
கால னாகிய காலற்குங் காலனைக்
கோல மாம்பொழில் சூழ்திருக் கோளிலிச்
சூல பாணிதன் பாதந் தொழுமினே. ௫

காற்ற னைக்கட னஞ்சமு துண்டவெண்
நீற்ற னைமிளிர் புன்சடை யண்ணலை
ஆற்ற னையம ருந்திருக் கோளிலி
ஏற்ற னாரடி யேதொழு தேத்துமே. ௬

வேத மாயவிண் ணோர்க டலைவனை
ஓதி மன்னுயி ரேத்து மொருவனைக்
கோதி வண்டறை யுந்திருக் கோளிலி
வேத நாயகன் பாதம் விரும்புமே. ௭

நீதி யாற்றொழு வார்க டலைவனை
வாதை யான விடுக்கு மணியினைக்
கோதி வண்டறை யுந்திருக் கோளிலி
வேத நாயகன் பாதம் விரும்புமே. ௮

மாலு நான்முக னாலு மறிவொணாப்
பாலின் மென்மொழி யாளொரு பங்கனைக்
கோல மாம்பொழில் சூழ்திருக் கோளிலி
நீல கண்டனை நித்தல் நினைமினே. கூ

அரக்க னாய விலங்கையர் மன்னனை
நெருக்கி யம்முடி பத்திறுத் தானவற்
கிரக்க மாகி யவன்றிருக் கோளிலி
அருத்தி யாயடி யேதொழு துய்ம்மினே. ம

திருச்சிற்றம்பலம்



## திருப்பழையாறைவடதளி பதிகம் கள௨

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

தலையெ லாம்பறிக் குஞ்சமண் கையருள்
நிலையி னன்மறைத் தான்மறைக் கொண்ணுமே
அலையி னார்பொழி லாறை வடதளி
நிலையி னானடி யேநினைந் துய்ம்மினே.

மூக்கி னன்முரன் றோதியக் குண்டிகை
தூக்கி னார்குலந் தூரறுத் தேதனக்
காக்கி னானணி யாறை வடதளி
நோக்கி னார்க்கில்லை யாலரு நோய்களே.

குண்ட ரைக்குண மில்லரைக் கூறையில்
மிண்ட ரைத்துரந் தவிம லன்றனை
அண்ட ரைப்பழை யாறை வடதளிக்
கண்ட ரைத்தொழு துய்ந்தன கைகளே.

முடைய ரைத்தலை முண்டிக்கு மொட்டரைக்
கடைய ரைக்கடிந் தார்கனல் வெண்மழுப்
படைய ரைப்பழை யாறை வடதளி
உடைய ரைக்குளிர்ந் துள்குமென் னுள்ளமே.

ஒள்ள ரிக்கணார் முன்னம ணின்றுணும்
கள்ள ரைக்கடிந் தகருப் பூறலை
அள்ள லம்புன லாறை வடதளி
வள்ள லைப்புக ழத்துயர் வாடுமே.

நீதி யைக்கெட நின்றம ணேயுணும்
சாதி யைக்கெடு மாசெய்த சங்கரன்
ஆதி யைப்பழை யாறை வடதளிச்
சோதி யைத்தொழு வார்துயர் தீருமே.

திரட்டி ரைக்க வளந்திணிக் குஞ்சமண்
பிரட்ட ரைப்பிரித் தபெரு மான்றனை
அரட்டி றத்தணி யாறை வடதளித்
தெருட்ட ரைத்தொ ழத்தீவினை தீருமே.

ஓதி னத்தெழுத் தஞ்சுண ராச்சமண்
வேதி னைப்படுத் தானைவெங் கூற்றுதை
பாத னைப்பழை யாறை வடதளி
நாத னைத்தொழ நம்வினை நாசமே.

வாயி ருந்தமி ழேபடித் தாளுறு
ஆயி ரஞ்சம ணும்மழி வாக்கினான்
பாயி ரும்புன லாறை வடதளி
மேய வன்னென வல்வினை வீடுமே.

செருத்த னைச்செயுஞ் சேணரக் கன்னுடல்
எருத்தி றவிர லாலிறை யூன்றிய
அருத்த னைப்பழை யாறை வடதளித்
திருத்த னைத்தொழு வார்வினை தேயுமே.

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவர் - சோமேசுவரர்; இறைவி - சோமகலாநாயகி.

---

**பதிக வரலாறு :**

திருநாவுக்கரசு நாயனார் திருப்பழையாறையை யடைந்து அங்கு வடதளியிற் சிவபெருமானைச் சமணர் மறைத்திருத்தலைக் கேள்வியுற்று

அவ் விமானத்தினருகே ஓரிடத்தில், 'சுவாமி, தேவரீரது வண்ணங் கண்டு வணங்கி யன்றிப்போகேன், பந்தங்கொண்ட குண்டர் திறம்பாற்றி யருளும்' என்று திருவமுது செய்யாது எழுந்தருளி யிருந்தார். அதனை யுணர்ந்த இறைவனும் அவரெண்ணம் முடித்தற்குத் திருவுளங்கொண்டு அரசனது கனவிற் சென்று 'மன்னனே, அறிவிலமணர் மறைக்க நாமிருந்தோம். வாகீசன் நம்மைக் கண்டு கும்பிட உண்ணாதிருக்கின்றான், நம்மை வெளிப்படுத்தி நெறியிலமணரை யழித்து நீக்கிப்போக்கு' என்று அருளிச் செய்து அடையாளங்களைத் தெரிவித்துப் போயினார். அரசனும் விழித்தெழுந்து வணங்கிக் கண்ட வியப்பினை மந்திரிகட் கியம்பி அவரோடு விரைந்து சென்று அடையாளத்தின் வழியே இறைவனைக் கண்டு சமணர் செய்த வஞ்சனையை எண்ணி வருந்திச் சுவாமிகளைக் கண்டு திருவடியிலே வணங்கிச் சமணர்களையெல்லாம் யானைகளான் மிதிப்பித்துக்கொன்றொழித்து இறைவனுக்கு விமான முதலிய திருப்பணிகளைச் செய்து நிபந்தங்களையும் அமைத்து வணங்கினான். பின்னர் நாயனார் ஆலயத்தினுள்ளே எழுந்தருளிச் சுவாமி தரிசனஞ் செய்து 'தலையெலாம் பறிக்குஞ் சமண்கையருள் நிலையினான் மறைத்தான் மறைக்கொண்ணுமே' என்று இத் திருக்குறுந்தொகையைப் பாடி யருளினார்.



## திருமாற்பேறு

பதிகம் ௧௱௩

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பொருமாற் றின்படை வேண்டிநற் பூம்புனல்
வருமாற் றின்மலர் கொண்டு வழிபடும்
கருமாற் கின்னருள் செய்தவன் காண்டகு
திருமாற் பேறு தொழவினை தேயுமே.

ஆலத் தார்நிழ லில்லற நால்வர்க்குக்
கோலத் தாலுரை செய்தவன் குற்றமில்
மாலுக் காரருள் செய்தவன் மாற்பேறு
ஏலத் தான்றொழு வார்க்கிட ரில்லையே.

துணிவண் ணச்சுட ராழிகொள் வானெண்ணி
அணிவண் ணத்தலர் கொண்டடி யர்ச்சித்த
மணிவண் ணற்கருள் செய்தவன் மாற்பேறு
பணிவண் ணத்தவர்க் கில்லையாம் பாவமே. ௩

தீதவை செய்து தீவினை வீழாதே
காதல் செய்து கருத்தினி னின்றநன்
மாத வர்பயின் மாற்பேறு கைதொழப்
போது மின்வினை யாயின போகுமே. ௪

வார்கொண் மென்முலை மங்கையொர் பங்கினன்
வார்கொ ணன்முர சம்மறை யவ்வறை
வார்கொள் பைம்பொழின் மாற்பேறு கைதொழு
வார்கண் மன்னுவர் பொன்னுல கத்திலே. ௫

பண்டை வல்வினை பற்றறுக் கும்வகை
உண்டு சொல்லுவன் கேண்மி னொளிகிளர்
வண்டு சேர்பொழில் சூழ்திரு மாற்பேறு
கண்டு கைதொழத் தீருங் கவலையே. ௬

மழுவ லான்திரு நாம மகிழ்ந்துரைத்
தழுவ லார்களுக் கன்புசெய் தின்பொடும்
வழுவி லாவருள் செய்தவன் மாற்பேறு
தொழுவ லார்தமக் கில்லை துயரமே. ௭

முன்ன வன்னுல குக்கு முழுமணிப்
பொன்ன வன்றிகழ் முத்தொடு போகமாம்
மன்ன வன்றிரு மாற்பேறு கைதொழும்
அன்ன வரெமை யாளுடை யார்களே. ௮

வேட னாய்விச யன்னொடு மெய்துவெங்
காடு நீடுகந் தாடிய கண்ணுதல்
மாட நீடுய ருந்திரு மாற்பேறு
பாடு வார்பெறு வார்பர லோகமே. ௯

கருத்த னாய்க்கயி லாய மலைதனைத்
தருக்கி னாலெடுத் தானைத் தகரவே
வருத்தி யாரருள் செய்தவன் மாற்பேறு
அருத்தி யாற்றொழு வார்க்கில்லை யல்லலே.

திருச்சிற்றம்பலம்



## திருமாற்பேறு பதிகம் ௩௪

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

ஏது மொன்று மறிவில ராயினும்
ஓதி யஞ்செழுத் தும்முணர் வார்கட்குப்
பேத மின்றி யவரவ ருள்ளத்தே
மாதுந் தாமு மகிழ்வர்மாற் பேறரே. ௧

அச்ச மில்லைநெஞ் சேயர னாமங்கள்
நிச்ச லுந்நினை யாய்வினை போயறக்
கச்ச மாவிட முண்டகண் டாவென
வைச்ச மாநிதி யாவர்மாற் பேறரே. ௨

சாத்தி ரம்பல பேசுஞ் சழக்கர்காள்
கோத்தி ரமுங் குலமுங்கொண் டென்செய்வீர்
பாத்தி ரஞ்சிவ மென்று பணிதிரேல்
மாத்தி ரைக்கு ளருளுமாற் பேறரே. ௩

இருந்து சொல்லுவன் கேண்மின்க ளேழைகாள்
அருந்த வந்தரு மஞ்செழுத் தோதினால்
பொருந்து நோய்பிணி போகத் துரப்பதோர்
மருந்து மாகுவர் மன்னுமாற் பேறரே. ௪

சாற்றிச் சொல்லுவன் கேண்மின் றரணியீர்
ஏற்றின் மேல்வரு வான்கழ லேத்தினால்
கூற்றை நீக்கிக் குறைவறுத் தாள்வதோர்
மாற்றி லாச்செம் பொனாவர் மாற்பேறரே.

ஈட்டு மாநிதி சால விழக்கினும்
வீட்டுங் காலன் விரைய வழைக்கினும்
காட்டின் மாநட மாடுவாய் காவெனில்
வாட்டந் தீர்க்கவும் வல்லர்மாற் பேறரே. சா

ஐய னேயர னேயென் றரற்றினால்
உய்ய லாமுல கத்தவர் பேணுவர்
செய்ய பாத மிரண்டு நினையவே
வைய மாளவும் வைப்பர்மாற் பேறரே. எ

* * * * * . அ

* * * * * . கூ

உந்திச் சென்று மலையை யெடுத்தவன்
சந்து தோளொடு தாளிற வூன்றினான்
மந்தி பாய்பொழில் சூழுமாற் பேறெனா
அந்த மில்லதோ ரின்ப மணுகுமே.

திருச்சிற்றம்பலம்



திருவரிசிற்கரைப்புத்தூர் பதிகம் கஎ௬

## திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

முத்தா ரும்புனன் மொய்யரி சிற்கரைப்
புத்தூ ரன்னடி போற்றியென் பாரெல்லாம்
பொய்த்தா ரும்புல னைந்தொடு புல்கிய
மைத்தா ரும்வினை மாற்றவும் வல்லரே.

பிறைக்க ணிச்சடை யெம்பெரு மானென்று
கறைக்க ணித்தவர் கண்டவ ணக்கத்தாய்
உறக்க ணித்துரு காமனத் தார்களைப்
புறக்க ணித்திடும் புத்தூர்ப் புனிதரே. உ

அரிசி லின்கரை மேலணி யார்தரு
புரிசை நந்திருப் புத்தூர்ப் புனிதனைப்
பரிசொ டும்பர விப்பணி வார்க்கெலாம்
துரிசி னன்னெறி தோன்றிடுங் காண்மினே. ங

வேத னைமிகு வீணையின் மேவிய
கீத னைக்கிள ருந்நறுங் கொன்றையம்
போத னைப்புனல் சூழ்ந்தபுத் தூரனை
நாத னைநினைந் தென்மன நையுமே. ச

அருப்புப் போன்முலை யாரல்லல் வாழ்க்கைமேல்
விருப்புச் சேர்நிலை விட்டுநல் லிட்டமாய்த்
திருப்புத் தூரனைச் சிந்தைசெ யச்செயக்
கருப்புச் சாற்றிலு மண்ணிக்குங் காண்மினே. ரு

பாம்பொ டுமதி யும்படர் புன்சடைப்
பூம்பு னலும் பொதிந்தபுத் தூருளான்
நாம்ப ணிந்தடி போற்றிட நாடொறும்
சாம்ப லென்பு தனக்கணி யாகுமே. சு

கனலங் கைதனி லேந்திவெங் காட்டிடை
அனலங் கெய்திநின் றாடுவர் பாடுவர்
பினலஞ் செஞ்சடை மேற்பிறை யுந்தரு
புனலுஞ் சூடுவர் போலும்புத் தூரரே. எ

காற்றி னுங்கடி தாகி நடப்பதோர்
ஏற்றி னும்மிசைந் தேறுவ ரென்பொடு
நீற்றி னையணி வர்நினை வாய்த்தமைப்
போற்றி யென்பவர்க் கன்பர்புத் தூரரே. அ

முன்னு முப்புரஞ் செற்றன ராயினும்
அன்ன மொப்ப ரலந்தடைந் தார்க்கெலாம்
மின்னு மொப்பர் விரிசடை மேனிசெம்
பொன்னு மொப்பர்புத் தூரெம் புனிதரே.

செருத்த னுற்றன தேர்செல வுய்த்திடும்
கருத்த னுய்க்கயி லையெடுத் தானுடல்
பருத்த தோள்கெடப் பாதத் தொருவிரல்
பொருத்தி னார்பொழி லார்ந்தபுத் தூரரே. ௰

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.
இறைவன் - படிக்காசுவைத்தநாதர்; இறைவி - அழகம்மை.



## திருக்கடுவாய்க்கரைப்புத்தூர் — பதிகம் கஎரு

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

ஒருத்த னைமூ வுலகொடு தேவர்க்கும்
அருத்த னையடி யேன்மனத் துள்ளமர்
கருத்த னைக்கடு வாய்ப்புன லாடிய
திருத்த னைப்புத்தூர்ச் சென்றுகண் டுய்ந்தேனே. க

யாவ ருமறி தற்கரி யான்றனை
மூவ ரின்முத லாகிய மூர்த்தியை
நாவி னல்லுரை யாகிய நாதனைத்
தேவ னைப்புத்தூர்ச் சென்றுகண் டுய்ந்தேனே. உ

அன்ப னையடி யாரிடர் நீக்கியைச்
செம்பொ னைத்திக ழுந்திருக் கச்சியே
கம்ப னைக்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
நன்பொ*னைக்கண்டு நானுய்யப் பெற்றேனே. ௩

(பா - ம்.) *நம்பனை.

மாத னத்தைமா தேவனை மாறிலாக்
கோத னத்திலைந் தாடியை வெண்குழைக்
காத னைக்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
நாத னைக்கண்டு நானுய்யப் பெற்றேனே. ௪

குண்டு பட்டகுற் றந்தவிர்த் தென்னையாட்
கொண்டு நற்றிறங் காட்டிய கூத்தனைக்
கண்ட னைக்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
அண்ட னைக்கண் டருவினை யற்றேனே. ௫

பந்த பாச மறுத்தெனை யாட்கொண்ட
மைந்த னைமண வாளனை மாமலர்க்
கந்த நீர்க்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
எந்தை யீசனைக் கண்டினி தாயிற்றே. ௬

உம்ப ரானை யுருத்திர மூர்த்தியை
அம்ப ரானை யமலனை யாதியைக்
கம்பு நீர்க்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
எம்பி ரானைக்கண் டின்பம தாயிற்றே. ௭

மாசார் பாச மயக்கறு வித்தெனுள்
நேச மாகிய நித்த மணாளனைப்
பூச நீர்க்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
ஈச னேயெனை வின்பம தாயிற்றே. ௮

இடுவா ரிட்ட கவளங் கவர்ந்திரு
கடுவா யிட்டவர் கட்டுரை கொள்ளாதே
கடுவாய்த் தென்கரைப் புத்தூ ரடிகட்காட்
படவே பெற்றநான் பாக்கியஞ் செய்தேனே. ௯

அரக்க னுற்ற லழித்தவன் பாடல்கேட்
டிரக்க மாகி யருள்புரி யீசனைத்
திரைக்கொ ணீர்க்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
இருக்கு நாதனைக் காணப்பெற் றுய்ந்தேனே. ௰

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

**இறைவன் - சொர்ணபுரீசுவரர்; இறைவி - சொர்ணபுரிநாயகி.**

## திருத்தென்குரங்காடுதுறை பதிகம் கஎஎ

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

இரங்கா வன்மனத் தார்க ளியங்குமுப்
புரங்கா வல்லழி யப்பொடி யாக்கினான்
தரங்கா டுந்தட நீர்ப்பொன்னித் தென்கரைக்
குரங்கா டுதுறைக் கோலக்க பாலியே. க

முத்தி னைமணி யைப்பவ ளத்தொளிர்
தொத்தி னைச்சுடர்ச் சோதியைச் சோலைசூழ்
கொத்த லர்குரங் காடு துறையுறை
அத்த னென்னவண் ணித்திட் டிருந்ததே. உ

குளிர்பு னற்குரங் காடு துறையனைத்
தளிர்நி றத்தையல் பங்கனைத் தண்மதி
ஒளிய னைநினைந் தேனுக்கென் னுள்ளமும்
தெளிவி னைத்தெளி யத்தெளிந் திட்டதே. ௩

மணவன் காண்மலை யாளொடு மங்கலக்
கணவன் காண்கலை ஞானிகள் காதலெண்
குணவன் காண்குரங் காடு துறைதனில்
அணவன் காணன்பு செய்பு மடியர்க்கே. ௪

ஞாலத் தார்தொழு தேத்திய நன்மையன்
காலத் தானுயிர் போக்கிய காலினன்
நீலத் தார்மிட றன்வெள்ளை நீறணி
கோலத் தான்குரங் காடு துறையனே. ரு

ஆட்டி னான்முன் னமணரோ டென்றனைப்
பாட்டி னான்றன பொன்னடிக் கின்னிசை
வீட்டி னான்வினை மெய்யடி யாரொடும்
கூட்டி னான்குரங் காடு துறையனே. சா

மாத்தன் றான்மறை யார்முறை யான்மறை
ஓத்தன் றாரகன் றன்னுயி ருண்டபெண்
போத்தன் றானவன் பொங்கு சினந்தணி
கூத்தன் றான்குரங் காடு துறையனே.

நாடி நந்தம ராயின தொண்டர்காள்
ஆடு மின்னழு மின்றொழு மின்னடி
பாடு மின்பர மன்பயி லும்மிடம்
கூடு மின்குரங் காடு துறையையே. அ

தென்ற னன்னெடுந் தேருடை யானுடல்
பொன்ற வெங்கனல் பொங்க விழித்தவன்
அன்ற வந்தக னையயிற் சூலத்தால்
கொன்ற வன்குரங் காடு துறையனே. கூ

நற்ற வஞ்செய்த நால்வர்க்கு நல்லறம்
உற்ற நன்மொழி யாலருள் செய்தநல்
கொற்ற வன்குரங் காடு துறைதொழப்
பற்றுந் தீவினை யாயின பாறுமே. ய

கடுத்த தேரரக் கன்கயி லைம்மலை
எடுத்த தோடலை யிற்றல றவ்விரல்
அடுத்த லும்மவ னின்னிசை கேட்டருள்
கொடுத்த வன்குரங் காடு துறையனே. கக

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

**இறைவன் - ஆபத்சகாயர்; இறைவி - பவளக்கொடியம்மை.**



திருக்கோழம்பம் பதிகம் ௧௭௮

## திருக்குறுந்தொகை

### திருச்சிற்றம்பலம்

வேழம் பத்தைவர் வேண்டிற்று வேண்டிப்போய்
ஆழம் பற்றிவீழ் வார்பல வாதர்கள்
கோழம் பத்துறை கூத்தன் குரைகழல்
தாழும் பத்தர்கள் சாலச் சதுரரே.

கயிலை நன்மலை யாளுங்க பாலியை
மயிலி யன்மலை மாதின் மணாளனைக்
குயில்ப யில்பொழிற் கோழம்ப மேயவென்
உயிரி னைநினைந் துள்ள முருகுமே. ௨

வாழும் பான்மைய ராகிய வான்செல்வம்
தாழும் பான்மைய ராகித்தம் வாயினால்
தாழம் பூமண நாறிய தாழ்பொழிற்
கோழம் பாவெனக் கூடிய செல்வமே. ௩

பாட லாக்கிடும் பண்ணொடு பெண்ணிவள்
கூட லாக்கிடுங் குன்றின் மணற்கொடு
கோடல் பூத்தலர் கோழம்பத் தண்மகிழ்ந்
தாடுங் கூத்தனுக் கன்புபட் டாளன்றே. ௪

தளிர்கொண் மேனிய டான்மிக வஞ்சவோர்
பிளிறு வாரணத் தீருரி போர்த்தவன்
குளிர்கொ ணீர்வயற் கோழம்ப மேவினான்
நளிர்கொ ணீர்சடை மேலு நயந்ததே. ௫

நாத ராவர் நமக்கும் பிறர்க்குந்தாம்
வேத நாவர் விடைக்கொடி யார்வெற்பில்
கோதை மாதொடுங் கோழம்பங் கோயில்கொண்
டாதி பாத மடையவல் லார்களே. ௬

முன்னை நான்செய்த பாவ முதலறப்
பின்னை நான்பெரி தும்மருள் பெற்றது
அன்ன மார்வயற் கோழம்பத் துள்ளமர்
பின்னல் வார்சடை யானைப் பிதற்றியே. ௭

ஏழை மாரிட நின்றிரு கைக்கொடுண்
கோழை மாரொடுங் கூடிய குற்றமாம்
கூழை பாய்வயற் கோழம்பத் தானடி
ஏழை யேன்முன் மறந்தங் கிருந்ததே. ௮

அரவ ணைப்பயின் மாலயன் வந்தடி
பரவ னைப்பர மாம்பரஞ் சோதியைக்
குரவ னைக்குர வார்பொழிற் கோழம்பத்
துரவ னையொரு வர்க்குணர் வொண்ணுமே. ௯

சமர சூரபன் மாவைத் தடிந்தவேற்
குமரன் றாதைநற் கோழம்ப மேவிய
அமரர் கோவினுக் கன்புடைத் தொண்டர்கள்
அமர லோகம தாள்வுடை யார்களே. ௰

துட்ட னாகி மலையெடுத் தஃதின்கீழ்ப்
பட்டு வீழ்ந்து படர்ந்துய்யப் போயினான்
கொட்ட நாறிய கோழம்பத் தீசனென்
றிட்ட கீத மிசைத்த வரக்கனே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - கோகிலேசுவரர்; இறைவி - சவுந்தரியம்மை.



# திருப்பூவணூர்                                                  பதிகம் ௧௪௪

## திருக்குறுந்தொகை

### திருச்சிற்றம்பலம்

பூவ ணூர்ப்புனி தன்றிரு நாமந்தான்
நாவி னூறுநூ றாயிர நண்ணினார்
பாவ மாயின பாறிப் பறையவே
தேவர் கோவினுஞ் செல்வர்க ளாவரே. ௧

என்ன னென்மனை யெந்தையெ னாருயிர்
தன்னன் றன்னடி யேன்றன மாகிய
பொன்னன் பூவணூர் மேவிய புண்ணியன்
இன்ன னென்றறி வொண்ணு னியற்கையே. ௨

குற்றங் கூடிக் குணம்பல கூடாதீர்
மற்றுந் தீவினை செய்தன மாய்க்கலாம்
புற்ற ராவினன் பூவணூ ரீசன்பேர்
கற்று வாழ்த்துங் கழிவதன் முன்னமே. ௩

ஆவின் மேவிய வைந்தமர்ந் தாடுவான்
தூவெண் ணீறு துதைந்தசெம் மேனியான்
மேவ நூல்விரி வெண்ணியின் றென்கரைப்
பூவ ணூர்புகு வார்வினை போகுமே. ௪

புல்ல மூர்தியூர் பூவணூர் பூம்புனல்
நல்ல மூர்திநல் லூர்நனி பள்ளியூர்
தில்லை யூர்திரு வாரூர்சீர் காழிநல்
வல்ல மூரென வல்வினை மாயுமே.

அனுச யப்பட் டதுவிது வென்னாதே
கனிம னத்தொடு கண்களு நீர்மல்கிப்
புனித னைப்பூவ ணூரனைப் போற்றுவார்
மனித ரிற்றலை யான மனிதரே.

ஆதி நாத னமரர்க ளர்ச்சிதன்
வேத நாவன்வெற் பின்மடப் பாவையோர்
பாதி யானான் பரந்த பெரும்படைப்
பூத நாதன்றென் பூவனூர் நாதனே. எ

பூவ னூர்தண் புறம்பயம் பூம்பொழில்
நாவ லூர்நள் ளாறொடு நன்னிலம்
கோவ லூர்குட வாயில் கொடுமுடி
மூவ லூருமுக் கண்ணனூர் காண்மினே. அ

ஏவ மேதுமி லாவம ணேதலர்
பாவ காரிகள் சொல்வலைப் பட்டுநான்
தேவ தேவன் றிறநெறி யாகிய
பூவ னூர்புகு தப்பெற்ற நாளின்றே. கூ

நார ணன்னொடு நான்முக னிந்திரன்
வார ணன்கும ரன்வணங் குங்கழற்
பூர ணன்றிருப் பூவனூர் மேவிய
கார ணன்னெனை யானுடைக் காளையே. ய

மைக்க டுத்த நிறத்தரக் கன்வரை
புக்கெ டுத்தலும் பூவனூ ரன்னடி
மிக்க டுத்த விரல்சிறி தூன்றலும்
பக்க டுத்தபின் பாடியுய்ந் தானன்றே. கக

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - புட்பவனநாதர் ; இறைவி - கற்பகவல்லியம்மை.

## திருவலஞ்சுழி  பதிகம் ௧௮௰

### திருக்குறுந்தோகை

திருச்சிற்றம்பலம்

ஓத மார்கட லின்விட முண்டவர்
பூத நாயகர் பொற்கயி லைக்கிறை
மாதோர் பாகன் வலஞ்சுழி யீசனைப்
பாத மேத்தப் பறையுநம் பாவமே.

கயிலை நாதன் கறுத்தவர் முப்புரம்
எயில்க டீயெழ வெல்வல வித்தகன்
மயில்க ளாலும் வலஞ்சுழி யீசனைப்
பயில்கி லார்சிலர் பாவித் தொழும்பரே. ௨

இளைய காலமெம் மானை யடைகிலாத்
துளையி லாச்செவித் தொண்டர்கா ணும்முடல்
வளையுங் காலம் வலஞ்சுழி யீசனைக்
களைக ணாகக் கருதிநீ ருய்ம்மினே. ௩

நறைகொள் பூம்புனல் கொண்டெழு மாணிக்காய்க்
குறைவி லாக்கொடுங் கூற்றுதைத் திட்டவன்
மறைகொ ணாவன் வலஞ்சுழி மேவிய
இறைவ னையினி யென்றுகொல் காண்பதே. ௪

விண்ட வர்புர மூன்று மெரிகொளத்
திண்டி றற்சிலை யாலெரி செய்தவன்
வண்டு பண்முர லுந்தண் வலஞ்சுழி
அண்ட னுக்கடி மைத்திறத் தாவனே. ௫

படங்கொள் பாம்பொடு பான்மதி யஞ்சடை
அடங்க வாழவல் லானும்பர் தம்பிரான்
மடந்தை பாகன் வலஞ்சுழி யானடி
அடைந்த வர்க்கடி மைத்திறத் தாவனே. ௬

நாக்கொண் டேபர வும்மடி யார்வினை
போக்க வல்ல புரிசடைப் புண்ணியன்
மாக்கொள் சோலை வலஞ்சுழி யீசன்றன்
ஏக்கொ ளப்புர மூன்றெரி யானவே. ௭

தேடு வார்பிர மன்றிரு மாலவர்
ஆடு பாத மவரு மறிகிலார்
மாட வீதி வலஞ்சுழி யீசனைத்
தேடு வானுறு கின்றதென் சிந்தையே. ௮

கண்ப னிக்குங்கை கூப்புங்கண் மூன்றுடை
நண்ப னுக்கெனை நான்கொடுப் பேனெனும்
வண்பொ னித்தென் வலஞ்சுழி மேவிய
பண்ப னிப்பொனைச் செய்த பரிசிதே. ௯

இலங்கை வேந்த னிருபது தோளிற
நலங்கொள் பாதத் தொருவிர லூன்றினான்
மலங்கு பாய்வயல் சூழ்ந்த வலஞ்சுழி
வலங்கொள் வாரடி யென்றலை மேலவே. ௰

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - கபர்த்தேசுவரர்; இறைவி - பெரியநாயகி.



திருவாஞ்சியம் பதிகம் ௬௭

திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

படையும் பூதமும் பாம்புமபுல் வாயதள்
உடையுந் தாங்கிய வுத்தம னார்க்கிடம்
புடைநி லாவிய பூம்பொழில் வாஞ்சியம்
அடைய வல்லவர்க் கல்லலொன் றில்லையே. ௧

பறப்பை யும்பசு வும்படுத் துப்பல
திறத்த வும்முடை யோர்திக ழும்பதி
கறைப்பி றைச்சடைக் கண்ணுதல் சேர்தரு
சிறப்பு டைத்திரு வாஞ்சியஞ் சேர்மினே. ௨

புற்றி லாடர வோடு புனன்மதி
தெற்றுஞ் செஞ்சடைத் தேவர் பிரான்பதி
சுற்று மாடங்கள் சூழ்திரு வாஞ்சியம்
பற்றிப் பாடுவார்க் குப்பாவ மில்லையே. ௩

அங்க மாறு மருமறை நான்குடன்
தங்கு வேள்வியர் தாம்பயி லுந்நகர்
செங்கண் மாலிட மார்திரு வாஞ்சியம்
தங்கு வார்நம் மமரர்க் கமரரே. ௪

நீறு பூசி நிமிர்சடை மேற்பிறை
ஆறு சூடு மடிக ளுறைபதி
மாறு தானெருங் கும்வயல் வாஞ்சியம்
தேறி வாழ்பவர்க் குச்செல்வ மாகுமே. ௫

அற்றுப் பற்றின்றி யாரையு மில்லவர்க்
குற்ற நற்றுணை யாவா னுறைபதி
தெற்று மாடங்கள் சூழ்திரு வாஞ்சியம்
கற்றுச் சேர்பவர்க் குக்கருத் தாவதே. ௬

* * * * *. ௭
* * * * *. ௮
* * * * *. ௯

அருக்க னங்கி யமனொடு தேவர்கள்
திருத்துஞ் சேவடி யான்றிக ழுந்நகர்
ஒருத்தி பாக முகந்தவன் வாஞ்சியம்
அருத்தி யாலடை வார்க்கில்லை யல்லலே. ௰

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

## திருநள்ளாறு பதிகம் ௧அ௨

திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

உள்ளா றாதததோர் புண்டரி கத்திரள்
தெள்ளா றாச்சிவச் சோதித் திரளினைக்
கள்ளா றாதபொற் கொன்றை கமழ்சடை
நள்ளா றாவென நம்வினை நாசமே. ௧

ஆர ணப்பொரு ளாமரு ளாளனார்
வார ணத்துரி போர்த்த மணாளனார்
நார ணன்னண்ணி யேத்துநள் ளாறனார்
கார ணக்கலை ஞானக் கடவுளே. ௨

மேகம் பூண்டதோர் மேருவிற் கொண்டெயில்
சோகம் பூண்டழல் சோரத்தொட் டானவன்
பாகம் பூண்டமால் பங்கயத் தானொடு
நாகம் பூண்டுகூத் தாடுநள் ளாறனே. ௩

மலியுஞ் செஞ்சடை வாளர வம்மொடு
பொலியும் பூம்புனல் வைத்த புனிதனார்
நலியுங் கூற்றை நலிந்தநள் ளாறர்தம்
வலியுங் கண்டிறு மாந்து மகிழ்வனே. ௪

உறவ னாய்நிறைந் துள்ளங் குளிர்ப்பவன்
இறைவ னாகிநின் றெண்ணிறைந் தானவன்
நறவ நாறும் பொழிற்றிரு நள்ளாறன்
மறவ னாய்ப்பன்றிப் பின்சென்ற மாயமே. ௫

செக்க ரங்கழி செஞ்சுடர்ச் சோதியார்
நக்க ரங்கர வார்த்தநள் ளாறனார்
வக்க ரன்னுயிர் வவ்விய மாயற்குச்
சக்க ரம்மருள் செய்த சதுரரே. ௬

வஞ்சநஞ் சிற்பொலி கின்ற கண்டத்தர்
விஞ்சை யிற்செல்வப் பாவைக்கு வேந்தனார்
வஞ்ச நெஞ்சத் தவர்க்கு வழிகொடார்
நஞ்ச நெஞ்சர்க் கருளுநள் ளாறரே. ௭

அல்ல னென்று மலர்க்கரு ளாயின
சொல்ல னென்றுசொல் லாமறைச் சோதியான்
வல்ல னென்றும்வல் லார்வள மிக்கவர்
நல்ல னென்றுநல் லார்க்குநள் ளாறனே. ௮

பாம்ப ணைப்பள்ளி கொண்ட பரமனும்
பூம்ப ணைப்பொலி கின்றபு ராணனும்
தாம்ப ணிந்தளப் பொண்ணாத் தனித்தழல்
நாம்ப ணிந்தடி போற்றுநள் ளாறனே. ௯

இலங்கை மன்ன னிருபது தோளிற
மலங்க மால்வரை மேல்விரல் வைத்தவர்
நலங்கொ ணீற்றர்நள் ளாறரை நாடொறும்
வலங்கொள் வார்வினை யாயின மாயுமே. ௰

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.
இறைவன் - தர்ப்பாரணியேசுவரர்;
இறைவி - போகமார்த்தபூண்முலையாள்.



## திருக்கருவிலிக்கொட்டிட்டை பதிகம் கஅ௩

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

மட்டிட் டகுழ லார்சுழ லில்வலைப்
பட்டிட் டுமயங் கிப்பரி யாதுநீர்
கட்டிட் டவினை போகக் கருவிலிக்
கொட்டிட் டையுறை வான்கழல் கூடுமே. ௧

ஞால மல்கு மனிதர்கா ணாடொறும்
ஏல மாமல ரோடிலை கொண்டுநீர்
கால னார்வரு தன்முன் கருவிலிக்
கோல வார்பொழிற் கொட்டிட்டை சேர்மினே. ௨

பங்க மாயின பேசப் பறைந்துநீர்
மங்கு மாநினை யாதே மலர்கொடு
கங்கை சேர்சடை யான்றன் கருவிலிக்
கொங்கு வார்பொழிற் கொட்டிட்டை சேர்மினே. ௩

வாடி நீர்வருந் தாதே மனிதர்காள்
வேட னாய்விச யற்கருள் செய்தவெண்
காட னாருறை கின்ற கருவிலிக்
கோடு நீள்பொழிற் கொட்டிட்டை சேர்மினே. ௪

உய்யு மாறிது கேண்மி னுலகத்தீர்
பைகொள் பாம்பரை யான்படை யார்மழுக்
கையி னானுறை கின்ற கருவிலிக்
கொய்கொள் பூம்பொழிற் கொட்டிட்டை சேர்மினே. ௫

ஆற்ற வும்மவ லத்தழுந் தாதுநீர்
தோற்றுந் தீயொடு நீர்நிலந் தூவெளி
காற்று மாகிநின் றான்றன் கருவிலிக்
கூற்றங் காய்ந்தவன் கொட்டிட்டை சேர்மினே. ௬

நில்லா வாழ்வு நிலைபெறு மென்றெண்ணிப்
பொல்லா வாறுசெ யப்புரி யாதுநீர்
கல்லா ரும்மதிள் சூழ்தண் கருவிலிக்
கொல்லே றூர்பவன் கொட்டிட்டை சேர்மினே. ௭

பிணித்த நோய்ப்பிற விப்பிரி வெய்துமா
றுணர்த்த லாமிது கேண்மி னுருத்திர
கணத்தி னார்தொழு தேத்துங் கருவிலிக்
குணத்தி னானுறை கொட்டிட்டை சேர்மினே. ௮

நம்பு வீரிது கேண்மின்க ளுடொறும்
எம்பி ரானென் றிமையவ ரேத்துமே
கம்ப னுருறை கின்ற கருவிலிக்
கொம்ப னார்பயில் கொட்டிட்டை சேர்மினே. கூ

பாரு ளீரிது கேண்மின் பருவரை
பேரு மாறெடுத் தானை யடர்த்தவன்
கார்கொ ணீர்வயல் சூழ்தண் கருவிலிக்
கூர்கொள் வேலினன் கொட்டிட்டை சேர்மினே. ய

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - சற்குணநாதர்; இறைவி - சர்வாங்கநாயகி.



## திருக்கொண்டீச்சரம் பதிகம் கஅரு

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

கண்ட பேச்சினிற் காளையர் தங்கள்பால்
மண்டி யேச்சுணு மாதரைச் சேராதே
சண்டி யீச்சுர வர்க்கருள் செய்தவக்
கொண்டி யீச்சுர வன்கழல் கூறுமே. க

சுற்ற முந்துணை நன்மட வாளொடு
பெற்ற மக்களும் பேண லொழிந்தனர்
குற்ற மில்புகழ்க் கொண்டீச் சுரவனார்
பற்ற லாலொரு பற்றுமற் றில்லையே. உ

மாடு தானது வில்லெனின் மாநுடர்
பாடு தான்செல்வா ரில்லைபன் மாலையால்
கூட நீர்சென்று கொண்டீச் சுரவனைப்
பாடு மின்பர லோகத் திருத்துமே. ங

தந்தை தாயொடு தாரமெ னுந்தளைப்
பந்த மாங்கறுத் துப்பயில் வெய்திய
கொந்த விழ்பொழிற் கொண்டீச் சுரவனைச்
சிந்தை செய்ம்மி னவனடி சேரவே. ௪

கேளு மின்னிள மைய்யது கேடுவந்
தீளை யோடிரு மல்லது வெய்தன்முன்
கோள ரவணி கொண்டீச் சுரவனை
நாளு மேத்தித் தொழுமினன் காகுமே. ௫

வெம்பு நோயு மிடரும் வெறுமையும்
துன்ப முந்துய ரும்மெனுஞ் சூழ்வினை
கொம்ப ரார்பயில் கொண்டீச் சுரவனை
எம்பி ரானென வல்லவர்க் கில்லையே. ௬

அல்ல லோடரு நோயி லழுந்திநீர்
செல்லு மாநினை யாதே கனைகுரல்
கொல்லை யேறுடைக் கொண்டீச் சுரவனை
வல்ல வாறு தொழவினை மாயுமே. ௭

நாறு சாந்தணி நன்முலை மென்மொழி
மாறி லாமலை மங்கையொர் பாகமாக்
கூற னுறுறை கொண்டீச் சுரநினைந்
தூறு வார்தமக் கூனமொன் றில்லையே. ௮

அயிலா ரம்பெரி மேருவி லாகவே
எயிலா ரும்பொடி யாய்விழ வெய்தவன்
குயிலா ரும்பொழிற் கொண்டீச் சுரவனைப்
பயில்வா ரும்பெரு மைபெறும் பாலரே. ௯

நிலையி னார்வரை நின்றெடுத் தான்றனை
மலையி னாலடர்த் துவிறல் வாட்டினான்
குலையி னார்பொழிற் கொண்டீச் சுரவனைத்
தலையி னால்வணங் கத்தவ மாகுமே. ௰

திருச்சிற்றம்பலம்

திருவிசயமங்கை                                   பதிகம் கஅகூ

## திருக்குறுந்தொகை

### திருச்சிற்றம்பலம்

குசையு மங்கையிற் கோசமுங் கொண்டவவ்
வசையின் மங்கல வாசகர் வாழ்த்தவே
இசைய மங்கையுந் தானுமொன் றாயினன்
விசைய மங்கையுள் வேதியன் காண்மினே. க

ஆதி நாத னடல்விடை மேலமர்
பூத நாதன் புலியத ளாடையன்
வேத நாதன் விசயமங் கையுளான்
பாத மோதவல் லார்க்கில்லை பாவமே. உ

கொள்ளி டக்கரைக் கோவந்த புத்தூரில்
வெள்வி டைக்கருள் செய்விச யமங்கை
உள்ளி டத்துறை கின்றவு ருத்திரன்
கிள்ளி டத்தலை யற்ற தயனுக்கே. ௩

திசையு மெங்குங் குலுங்கத் திரிபுரம்
அசைய வங்கெய்திட் டாரழ லூட்டினன்
விசைய மங்கை விருத்தன் புறத்தடி
விசையின் மங்கி விழுந்தனன் காலனே. ௪

பொள்ள லாக்கை யகத்திலைம் பூதங்கள்
கள்ள மாக்கிக் கலக்கிய காரிருள்
விள்ள லாக்கி விசயமங் கைப்பிரான்
உள்ள ளுைக்கியென் னுள்ளு ளுறையுமே. ௫

கொல்லை யேற்றுக் கொடியொடு பொன்மலை
வில்லை யேற்றுடை யான்விச யமங்கைச்
செல்வ போற்றியென் பாருக்குத் தென்றிசை
எல்லை யேற்றலு மின்சொலு மாகுமே. ௬

கண்ப னுக்கக பாலமங் கைக்கொண்டு
உண்ப லிக்குழ னுத்தம னுள்ளொளி
வெண்பி றைக்கண்ணி யான்விச யமங்கை
நண்ப னைத்தொழப் பெற்றது நன்மையே. எ

பாண்டு வின்மகன் பார்த்தன் பணிசெய்து
வேண்டு நல்வரங் கொள்வி சயமங்கை
ஆண்ட வன்னடி யேநினைந் தாசையால்
காண்ட லேகருத் தாகியி ருப்பனே. அ

வந்து கேண்மின் மயறீர் மனிதர்காள்
வெந்த நீற்றன் விசயமங் கைப்பிரான்
சிந்தை யானினை வார்களைச் சிக்கெனப்
பந்து வாக்கி யுயக்கொளுங் காண்மினே. கூ

இலங்கை வேந்த னிருபது தோளிற
விலங்கல் சேர்விர லான்வி சயமங்கை
வலஞ்செய் வார்களும் வாழ்த்திசைப் பார்களும்
நலஞ்செய் வாரவர் நன்னெறி நாடியே. ௰

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.
இறைவன் - விசயநாதர்; இறைவி - மங்கைநாயகி.



## திருநீலக்குடி

பதிகம் ௧௮௬

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

வைத்த மாடு மனைவியு மக்கணீர்
செத்த போது செறியார் பிரிவதே
நித்த நீலக் குடியர னைநினை
சித்த மாகிற் சிவகதி சேர்திரே.

செய்ய மேனியன் றேனொடு பாறயிர்
நெய்ய தாடிய நீலக் குடியரன்
மைய லாய்மற வாமனத் தார்க்கெலாம்
கையி லாமல கக்கனி யொக்குமே. ௨

ஆற்ற நீள்சடை யாயிழை யாளொரு
கூற்றன் மேனியிற் கோலம தாகிய
நீற்ற னீலக் குடியுடை யானடி
போற்றி னரிடர் போக்கும் புநிதனே. ௩

நாலு வேதியர்க் கின்னரு ளன்னிழல்
ஆல னாலநஞ் சுண்டகண் டத்தமர்
நீல னீலக் குடியுறை நின்மலன்
கால னாருயிர் போக்கிய காலனே. ௪

நேச நீலக் குடியர னேயெனா
நீச ராய்நெடு மால்செய்த மாயத்தால்
ஈச னோர்சர மெய்ய வெரிந்துபோய்
நாச மானார் திரிபுர நாதரே. ௫

கொன்றை சூடியைக் குன்ற மகளொடு
நின்ற நீலக் குடியர னேயெனீர்
என்றும் வாழ்வுகந் தேயிறு மாக்குநீர்
பொன்றும் போது நுமக்கறி வொண்ணுமே. ௬

கல்வி னோடெனைப் பூட்டி யமண்கையர்
ஒல்லை நீர்புக நூக்கவென் வாக்கினால்
நெல்லு நீள்வய னீலக் குடியரன்
நல்ல நாம நவிற்றியுய்ந் தேனன்றே. ௭

அழகி யோமிளை யோமெனு மாசையால்
ஒழுகி யாவி யுடல்விடன் முன்னமே
நிழல தார்பொழி னீலக் குடியரன்
கழல்கொள் சேவடி கைதொழு துய்ம்மினே. ௮

கற்றைச் செஞ்சடைக் காய்கதிர் வெண்டிங்கள்
பற்றிப் பாம்புடன் வைத்த பராபரன்
நெற்றிக் கண்ணுடை நீலக் குடியரன்
சுற்றித் தேவர் தொழுங்கழற் சோதியே. கூ

தருக்கி வெற்பது தாங்கிய வீங்குதோள்
அரக்க னுருட லாங்கொர் விரலினால்
நெரித்து நீலக் குடியரன் பின்னையும்
இரக்க மாயருள் செய்தன னென்பரே. ய

திருச்சிற்றம்பலம்.

இது சோழநாட்டிலுள்ளது.
இறைவன் - நீலக்குடியீசுவரர் ; இறைவி - அழகம்மை.



## திருமங்கலக்குடி பதிகம் கஅஎ

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

தங்க லப்பிய தக்கன் பெருவேள்வி
அங்க லக்கழித் தாரருள் செய்தவன்
கொங்க லர்க்குழற் கொம்பனை யாளொடு
மங்க லக்குடி மேயம ணாளனே. க

காவி ரியின்வ டகரைக் காண்டகு
மாவி ரியும்பொ ழின்மங் கலக்குடித்
தேவ ரியும்பி ரமனுந் தேடொணாத்
தூவெ ரிச்சுடர்ச் சோதியுட் சோதியே. உ

மங்க லக்குடி யீசனை மாகாளி
வெங்க திர்ச்செல்வன் விண்ணொடு மண்ணுநேர்
சங்கு சக்கர தாரி சதுர்முகன்
அங்க கத்திய னும்மர்ச்சித் தாரன்றே. ௩

மஞ்சன் வார்கடல் சூழ்மங் கலக்குடி
நஞ்ச மாரமு தாக நயந்துகொண்
டஞ்சு மாட லமர்ந்தடி யேனுடை
நெஞ்ச மாலய மாக்கொண்டு நின்றதே. ௪

செல்வ மல்கு திருமங் கலக்குடி
செல்வ மல்கு சிவநிய மத்தராய்ச்
செல்வ மல்கு செழுமறை யோர்தொழச்
செல்வன் றேவி யொடிருந் திகழ் கோயிலே. ௫

மன்னு சீர்மங் கலக்குடி மன்னிய
பின்னு வார்சடைப் பிஞ்ஞகன் றன்பெயர்
உன்னு வாரு முரைக்கவல் லார்களுந்
துன்னு வார்நன் னெறிதொடர் வெய்தவே. ௬

மாத ரார்மரு வும்மங்க லக்குடி
ஆதி நாயக னண்டர்க ணாயகன்
வேத நாயகன் வேதியர் நாயகன்
பூத நாயகன் புண்ணிய மூர்த்தியே. ௭

வண்டு சேர்பொழில் சூழ்மங் கலக்குடி
விண்ட தாதையைத் தாளற வீசிய
சண்ட நாயக னுக்கருள் செய்தவன்
துண்ட மாமதி சூடிய சோதியே. ௮

கூசு வாரலர் குண்டர் குணமிலர்
நேச மேதுமி லாதவர் நீசர்கள்
மாசர் பான்மங் கலக்குடி மேவிய
ஈசன் வேறு படுக்கவுய்ந் தேனன்றே. ௯

மங்க லக்குடி யான்கயி லைம்மலை
அங்க லைத்தெடுக் குற்றவ ரக்கர்கோன்
தன்க ரத்தொடு தாடலை தோடகர்ந்
தங்க லைத்தழு துய்ந்தனன் றானன்றே. ௰

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - புராணேசுவரர்; இறைவி - மங்களநாயகி.

## திருவெறும்பியூர் பதிகம் ௬௮

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

விரும்பி யூறு விடேன்மட நெஞ்சமே
கரும்பி னூறல்கண் டாய்கலந் தார்க்கவன்
இரும்பி னூறல றாததோர் வெண்டலை
எறும்பி யூர்மலை யானெங்க ளீசனே.

பிறங்கு செஞ்சடைப் பிஞ்ஞகன் பேணுசீர்க்
கறங்கு பூத கணமுடைக் கண்ணுதல்
நறுங்கு ழன்மட வாளொடு நாடொறும்
எறும்பி யூர்மலை யானெங்க ளீசனே.

மருந்து வானவர் தானவர்க் கின்சுவை
புரிந்த புன்சடைப் புண்ணியன் கண்ணுதல்
பொருந்து பூண்முலை மங்கைநல் லாளொடும்
எறும்பி யூர்மலை யானெங்க ளீசனே.

நிறங்கொள் கண்டத்து நின்மல னெம்மிறை
மறங்கொள் வேற்கண்ணி வாணுதல் பாகமா
அறம்பு ரிந்தருள் செய்தவெ மங்கணன்
எறும்பி யூர்மலை யானெங்க ளீசனே.

நறும்பொ னுண்மலர்க் கொன்றையு நாகமும்
துறும்பு செஞ்சடைத் தூமதி வைத்துவான்
உறும்பொன் மால்வரைப் பேதையோ டேர்தொறும்
எறும்பி யூர்மலை யானெங்க ளீசனே.

கறும்பி யூர்வன வைந்துள காயத்தில்
திறம்பி யூர்வன மற்றும் பலவுள
குறும்பி யூர்வதோர் கூட்டகத் திட்டென்னை
எறும்பி யூரரன் செய்த வியற்கையே.

மறந்து மற்றிது பேரிடர் நாடொறும்
திறம்பி நீநினை யேன்மட நெஞ்சமே
புறஞ்செய் கோலக் குரம்பையி லிட்டெனை
எறும்பி யூரரன் செய்த வியற்கையே.

இன்ப மும்பிறப் பும்மிறப் பின்னொடு
துன்ப மும்முட னேவைத்த சோதியான்
அன்ப னேயர னேயென் றரற்றுவார்க்
கின்ப னாகு மெறும்பியூ ரீசனே.

கண்ணி றைந்த கனபவ ளத்திரள்
விண்ணி றைந்த விரிசுடர்ச் சோதியான்
உண்ணி றைந்துரு வாயுயி ராயவன்
எண்ணி றைந்த வெறும்பியூ ரீசனே.

நிறங்கொண் மால்வரை யூன்றி யெடுத்தலும்
நறுங்கு ழன்மட வாணடுக் கெய்திட
மறங்கொள் வாளரக் கன்வலி வாட்டினான்
எறும்பி யூர்மலை யெம்மிறை காண்மினே.

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - எறும்பீசுவரர்; இறைவி - நறுங்குழலநாயகி.





## திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

மரக்கொக் காமென வாய்விட் டலறிநீர்
சரக்குக் காவித் திரிந்தய ராதுகால்
பரக்குங் காவிரி நீரலைக் குங்கரைக்
குரக்குக் காவடை யக்கெடுங் குற்றமே.

கட்டா றேகழி காவிரி பாய்வயல்
கொட்டா றேபுன லூறு குரக்குக்கா
முட்டா ரூவடி யேத்த முயல்பவர்க்
கிட்டா ருவிட ரோட வெடுக்குமே. உ

கைய னைத்துங் கலந்தெழு காவிரி
செய்ய னைத்திலுஞ் சென்றிடுஞ் செம்புனல்
கொய்ய னைத்துங் கொணருங் குரக்குக்கா
ஐய னைத்தொழு வார்க்கல்ல லில்லையே. ௩

மிக்க னைத்துத் திசையு மருவிகள்
புக்குக் காவிரி போந்த புனற்கரைக்
கொக்கி னம்பயில் சோலைக் குரக்குக்கா
நக்க னைநவில் வார்வினை நாசமே. ச

விட்டு வெள்ளம் விரிந்தெழு காவிரி
இட்ட நீர்வய லெங்கும் பரந்திடக்
கொட்ட மாமுழ வோங்கு குரக்குக்கா
இட்ட மாயிருப் பார்க்கிட ரில்லையே. ரு

மேலை வானவ ரோடு விரிகடல்
மாலு நான்முக னும்மளப் பொணுக்
கோல மாளிகைக் கோயிற் குரக்குக்காப்
பால ராய்த்திரி வார்க்கில்லை பாவமே. சா

ஆல நீழ லமர்ந்த வழகனார்
கால னையுதை கொண்ட கருத்தனார்
கோல மஞ்ஞைக ளாலுங் குரக்குக்காப்
பால ருக்கருள் செய்வர் பரிவொடே. எ

செக்க ரங்கெழு செஞ்சுடர்ச் சோதியார்
அக்க ரையரெம் மாதி புராணனார்
கொக்கி னம்வயல் சேருங் குரக்குக்கா
நக்க னைத்தொழ நம்வினை நாசமே. அ

உருகி யூன்குழைந் தேத்தி யெழுமினீர்
கரிய கண்டன் கழலடி தன்னையே
குரவ னஞ்செழுங் கோயிற் குரக்குக்கா
இரவு மெல்லியு மேத்தித் தொழுமினே. கூ

இரக்க மின்றி மலையெடுத் தான்முடி
உரத்தை யொல்க வடர்த்தா னுறைவிடம்
குரக்கி னங்குதி கொள்ளுங் குரக்குக்கா
வரத்த னைப்பெற வானல காள்வரே. ௰

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - குந்தளநாதர்; இறைவி - குந்தளநாயகி.



திருக்கானூர் பதிகம் ககூ௲

திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

திருவி னாதனுஞ் செம்மலர் மேலுறை
உருவ னாயுல கத்தி னுயிர்க்கெலாம்
கருவ னாகி முளைத்தவன் கானூரில்
பரம னாய பரஞ்சுடர் காண்மினே. க

பெண்டிர் மக்கள் பெருந்துணை நன்னிதி
உண்டின் றேயென் றுகவன்மி னேழைகாள்
கண்டு கொண்மினீர் கானூர் முளையினைப்
புண்ட ரீகப் பொதும்பி லொதுங்கியே. உ

தாயத் தார்தமர் நன்னிதி யென்னுமிம்
மாயத் தேகிடந் திட்டு மயங்கிடேல்
காயத் தேயுளன் கானூர் முளையினை
வாயத் தால்வணங் கீர்வினை மாயவே. ௩

குறியி னின்றுண்டு கூறையி லாச்சமண்
நெறியை விட்டு நிறைகழல் பற்றினேன்
அறிய னூற்றிரேற் கானூர் முளையவன்
செறிவு செய்திட் டிருப்பதென் சிந்தையே. ௪

பொத்தன் மண்சுவர்ப் பொல்லாக் குரம்பையை
மெய்த்த னென்று வியந்திட லேழைகாள்
சித்தர் பத்தர்கள் சேர்திருக் கானூரில்
அத்தன் பாத மடைதல் கருமமே. ௫

கல்வி ஞானக் கலைப்பொரு ளாயவன்
செல்வ மல்கு திருக்கானூ ரீசனை
எல்லி யும்பக லும்மிசை வானவா
சொல்லி டீர்நுந் துயரங்க டீரவே. ௬

நீரும் பாரு நெருப்பு மருக்கனும்
காரு மாருதங் கானூர் முளைத்தவன்
சேர்வு மொன்றறி யாது திசைதிசை
ஓர்வு மொன்றில ரோடித் திரிவரே. ௭

ஓமத் தோடயன் மாலறி யாவணம்
வீமப் பேரொளி யாய விழுப்பொருள்
காமற் காய்ந்தவன் கானூர் முளைத்தவன்
சேமத் தாலிருப் பாவதென் சிந்தையே. ௮

* * * * * ௯

வன்னி கொன்றை யெருக்கணிந் தான்மலை
உன்னி யேசென் றெடுத்தவ னொண்டிறல்
தன்னை வீழத் தனிவிரல் வைத்தவன்
கன்னி மாமதிற் கானூர்க் கருத்தனே. ௰

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - செம்மேனிநாயகர்; இறைவி - சிவயோகநாயகி.

## திருக்குறுந்தொகை

### திருச்சிற்றம்பலம்

பூரி யாவரும் புண்ணியம் பொய்கெடும்
கூரி தாய வறிவுகை கூடிடும்
சீரி யார்பயில் சேறையுட் செந்நெறி
நாரி பாகன்ற னாம நவிலவே. க

என்ன மாதவஞ் செய்தனை நெஞ்சமே
மின்னு வார்சடை வேத விழுப்பொருள்
செந்நெ லார்வயற் சேறையுட் செந்நெறி
மன்னு சோதிநம் பால்வந்து வைகவே. உ

பிறப்பு மூப்புப் பெரும்பசி வான்பிணி
இறப்பு நீங்கியிங் கின்பம்வந் தெய்திடும்
சிறப்பர் சேறையுட் செந்நெறி யான்கழல்
மறப்ப தின்றி மனத்தினுள் வைக்கவே. ந

மாடு தேடி மயக்கினில் வீழ்ந்துநீர்
ஓடி யெய்த்தும் பயனிலை யூமர்காள்
சேடர் வாழ்சேறைச் செந்நெறி மேவிய
ஆட லான்றன் னடியடைந் துய்ம்மினே. ச

எண்ணி நாளு மெரிமயிர்க் கூற்றுவன்
துண்ணென் றோன்றிற் றுரக்கும் வழிகண்டேன்
திண்ணன் சேறைத் திருச்செந் நெறியுறை
அண்ண லருளா ரஞ்சுவ தென்னுக்கே. ரு

தப்பி வானந் தரணிகம் பிக்கிலென்
ஒப்பில் வேந்த ரொருங்குடன் சீறிலென்
செப்ப மாஞ்சேறைச் செந்நெறி மேவிய
அப்ப னருளா ரஞ்சுவ தென்னுக்கே. சு

வைத்த மாடு மடந்தைநல் லார்களும்
ஒத்தொவ் வாதவுற் றார்களு மென்செய்வார்
சித்தர் சேறைத் திருச்செந் நெறியுறை
அத்தர் தாமுள ரஞ்சுவ தென்னுக்கே. எ

குலங்க ளென்செய்வ குற்றங்க ளென்செய்வ
துலங்கி நீநின்று சோர்ந்திட னெஞ்சமே
இலங்கு சேறையிற் செந்நெறி மேவிய
அலங்க னுருள ரஞ்சுவ தென்னுக்கே. அ

பழகி னல்வரும் பண்டுள சுற்றமும்
விழவி டாவிடில் வேண்டிய வெய்தொணு
திகழ்கொள் சேறையிற் செந்நெறி மேவிய
அழக னுருள ரஞ்சுவ தென்னுக்கே. கூ

பொருந்து நீண்மலை யைப்பிடித் தேந்தினன்
வருந்த வூன்றி மலரடி வாங்கினன்
திருந்து சேறையிற் செந்நெறி மேவியங்
கிருந்த சோதியென் பார்க்கிட ரில்லையே. ய

திருச்சிற்றம்பலம்



திருக்கோடிகா பதிகம் ௧௬௨

திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

சங்குலா முன்கைத் தையலோர் பாகத்தன்
வெங்கு லாமத வேழம் வெகுண்டவன்
கொங்கு லாம்பொழிற் கோடிகா வாவென
எங்கி லாததோ ரின்பம்வந் தெய்துமே.

வாடி வாழ்வதென் னாவது மாதர்பால்
ஓடி வாழ்வினை யுள்கிநீர் நாடொறும்
கோடி காவனைக் கூறீரேற் கூறினேன்
பாடி காவலிற் பட்டுக் கழிதிரே.

முல்லை நன்முறு வல்லுமை பங்கனார்
தில்லை யம்பலத் தில்லுறை செல்வனார்
கொல்லை யேற்றினர் கோடிகா வாவென்றங்
கொல்லை யேத்துவார்க் கூனமொன் றில்லையே.

நாவ ளம்பெறு மாறும வன்னுதல்
ஆம ளஞ்சொலி யன்புசெ யின்னலால்
கோம ளஞ்சடைக் கோடிகா வாவென
ஏவ லின்றெனை யேசுமவ் வேழையே.

வீறு தான்பெறு வார்சில ராகிலும்
நாறு பூங்கொன்றை தான்மிக நல்கானேல்
கூறு வேன்கோடி காவுளா யென்றுமால்
ஏறு வேனும்மா லேசப் படுவனே. ௫

நாடி நாரண னான்முகன் வானவர்
தேடி யேசற வுந்தெரி யாததோர்
கோடி காவனைக் கூறாத நாளெலாம்
பாடி காவலிற் பட்டுக் கழியுமே. ௬

* * * * * . ௭

* * * * * . ௮

* * * * * . ௯

வரங்க ளால்வரை யையெடுத் தான்றனை
அரங்க வூன்றி யருள்செய்த வப்பனார்
குரங்கு சேர்பொழிற் கோடிகா வாவென
இரங்கு வேன்மனத் தேதங்க டரவே.

திருச்சிற்றம்பலம்

## திருப்புள்ளிருக்குவேளூர் பதிகம் ௧௧௩

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

வெள்ளெ ருக்கர வம்விர வுஞ்சடைப்
புள்ளி ருக்குவே ளூரரன் பொற்கழல்
உள்ளி ருக்கு முணர்ச்சியில் லாதவர்
நள்ளி ருப்பர் நரகக் குழியிலே.

மாற்ற மொன்றறி யீர்மனை வாழ்க்கைபோய்க்
கூற்றம் வந்துமைக் கொள்வதன் முன்னமே
போற்ற வல்லீரேற் புள்ளிருக்கு வேளூர்
சீற்ற மாயின தேய்ந்தறுங் காண்மினே. ௨

அரும றையனை யானொடு பெண்ணனைக்
கருவி டம்மிக வுண்டவெங் கண்டனைப்
புரிவெண் ணூலனைப் புள்ளிருக்கு வேளூர்
உருகி நைபவ ருள்ளங் குளிருமே. ௩

தன்னு ருவை யொருவர்க் கறிவொணா
மின்னு ருவனை மேனிவெண் ணீற்றனைப்
பொன்னு ருவனைப் புள்ளிருக்கு வேளூர்
என்ன வல்லவர்க் கில்லை யிடர்களே. ௪

செங்கண் மால்பிர மற்கு மறிவொணா
அங்கி யின்னுரு வாகி யழல்வதோர்
பொங்க ரவனைப் புள்ளிருக்கு வேளூர்
மங்கை பாகனை வாழ்த்த வருமின்பே. ௫

குற்ற மில்லியைக் கோலச் சிலையினாற்
செற்ற வர்புரஞ் செந்தழ லாக்கியைப்
புற்ற ரவனைப் புள்ளிருக்கு வேளூர்
பற்ற வல்லவர் பாவம் பறையுமே.

கையி னோடுகால் கட்டி யுமரெலாம்
ஐயன் வீடின னென்பதன் முன்னநீர்
பொய்யி லாவரன் புள்ளிருக்கு வேளூர்
மையு லாவிய கண்டனை வாழ்த்துமே.

உள்ள முள்கி யுகந்து சிவனென்று
மெள்ள வுள்க வினைகெடு மெய்ம்மையே
புள்ளி னார்பணி புள்ளிருக்கு வேளூர்
வள்ளல் பாதம் வணங்கித் தொழுமினே.

அரக்க னார்தலை பத்து மழிதர
நெருக்கி மாமலர்ப் பாத நிறுவிய
பொருப்ப னுறைபுள்ளிருக்கு வேளூர்
விருப்பி னாற்றொழு வார்வினை வீடுமே. ௰

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - வைத்தியநாதர்; இறைவி - தையனாயகி.



## திருவன்பிலாலந்துறை　　　　　　பதிகம் கககூ

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

வானஞ் சேர்மதி சூடிய மைந்தனை
நீநெஞ் சேகெடு வாய்நினை கிற்கிலை
ஆனஞ் சாடியை யன்பிலா லந்துறைக்
கோனெஞ் செல்வனைக் கூறிட கிற்றியே.

கார ணத்தர் கருத்தர் கபாலியார்
வார ணத்துரி போர்த்த மணாளனார்
ஆர ணப்பொரு ளன்பிலா லந்துறை
நார ணற்கரி யானொரு நம்பியே.

அன்பி னானஞ் சமைந்துட னாடிய
என்பி னானை யுரித்துக் களைந்தவன்
அன்பி லானையம் மானையள் ளூறிய
அன்பி னானினைந் தாரறிந் தார்களே. ௩

சங்கை யுள்ளதுஞ் சாவது மெய்யுமை
பங்க னாரடி பாவியே னானுய
அங்க ணனெந்தை யன்பிலா லந்துறைச்
செங்க ணாரடி சேரவும் வல்லனே. ௪

கொக்கி றகர் குளிர்மதிச் சென்னியர்
மிக்க ரக்கர் புரமெரி செய்தவர்
அக்க ரையின ரன்பிலா லந்துறை
நக்கு ருவரு நம்மை யறிவரே. ௫

வெள்ள முள்ள விரிசடை நந்தியைக்
கள்ள முள்ள மனத்தவர் காண்கிலார்
அள்ள லார்வய லன்பிலா லந்துறை
உள்ள வாறறி யார்சில ரூமரே. ௬

பிறவி மாயப் பிணக்கி லழுந்தினும்
உறவெ லாஞ்சிந் தித்துன்னி யுகவாதே
அறவ னெம்பிரா னன்பிலா லந்துறை
மறவா தேதொழு தேத்தி வணங்குமே. ௭

நுணங்கு நூலயன் மாலு மிருவரும்
பிணங்கி யெங்குந் திரிந்தெய்த்துங் காண்கிலா
அணங்க னெம்பிரா னன்பிலா லந்துறை
வணங்கு நும்வினை மாய்ந்தறும் வண்ணமே. ௮

பொய்யெ லாமுரைக் குஞ்சமண் சாக்கியக்
கையன் மாருரை கேளா தெழுமினோ
ஐய னெம்பிரா னன்பிலா லந்துறை
மெய்யன் சேவடி யேத்துவார் மெய்யரே. ௯

இலங்கை வேந்த னிருபது தோளிற்று
மலங்க மாமலை மேல்விரல் வைத்தவன்
அலங்க லெம்பிரா னன்பிலா லந்துறை
வலங்கொள் வாரைவா னோர்வலங் கொள்வரே. ௰

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.
இறைவன் - சத்தியவாகீசர்; இறைவி - சௌந்தரநாயகி.



## திருப்பாண்டிக்கொடுமுடி

பதிகம் ககரு

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

சிட்ட னைச்சிவ னைச்செழுஞ் சோதியை
அட்ட மூர்த்தியை யால நிழலமர்
பட்ட னைத்திருப் பாண்டிக் கொடுமுடி
நட்ட னைத்தொழ நம்வினை நாசமே. க

பிரமன் மாலறி யாத பெருமையன்
தரும மாகிய தத்துவ னெம்பிரான்
பரம னுறைபாண்டிக் கொடுமுடி
கரும மாகத்தொ ழுமட நெஞ்சமே. உ

ஊச லாளல்ல ளொண்கழ லாளல்லள்
தேச மாந்திருப் பாண்டிக் கொடுமுடி
ஈச னேயெனு மித்தனை யல்லது
பேசு மாறறி யாளொரு பேதையே. ௩

தூண்டி யசுடர் போலொக்குஞ் சோதியான்
காண்ட லுமெளி யன்னடி யார்கட்குப்
பாண்டிக் கொடுமுடி மேய பரமனைக்
காண்டு மென்பவர்க் கேதுங் கருத்தொணான். ௪

நெருக்கி யம்முடி நின்றிசை வானவர்
இருக்கொ டும்பணிந் தேத்த விருந்தவன்
திருக்கொ டும்முடி யென்றலுந் தீவினைக்
கருக்கெ டும்மிது கைகண்ட யோகமே.

* * * * * .
* * * * * .
* * * * * .
* * * * * .
* * * * * .

திருச்சிற்றம்பலம்.

இது கொங்குநாட்டிலுள்ளது.

இறைவன் - கொடுமுடிநாதர்; இறைவி - பண்மொழியம்மை.



## திருவான்மியூர் பதிகம் கக௯

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

விண்ட மாமலர் கொண்டு விரைந்துநீர்
அண்டர் நாயகன் றன்னடி சூழ்மின்கள்
பண்டுநீர்செய்த பாவம் பறைந்திடும்
வண்டு சேர்பொழில் வான்மியூ ரீசனே.

பொருளுஞ் சுற்றமும் பொய்ம்மையும் விட்டுநீர்
மருளு மாந்தரை மாற்றி மயக்கறுத்
தருளு மாவல்ல வாதியா யென்றலும்
மருள றுத்திடும் வான்மியூ ரீசனே.

மந்த மாகிய சிந்தை மயக்கறுத்
தந்த மில்குணத் தானை யடைந்துநின்
றெந்தை யீசனென் றேத்திட வல்லீரேல்
வந்து நின்றிடும் வான்மியூ ரீசனே. ௩

உள்ள முள்கலந் தேத்தவல் லார்க்கலால்
கள்ள முள்ள வழிக்கசி வானலன்
வெள்ள மும்மர வும்விர வுஞ்சடை
வள்ள லாகிய வான்மியூ ரீசனே. ௪

படங்கொள் பாம்பரைப் பான்மதி சூடியை
வடங்கொண் மென்முலை மாதொரு கூறனைத்
தொடர்ந்து நின்று தொழுதெழு வார்வினை
மடங்க நின்றிடும் வான்மியூ ரீசனே. ௫

நெஞ்சி லேவர் நினைக்க நினைக்குறார்
பஞ்சின் மெல்லடி யாளுமை பங்கவென்
றஞ்சி நாண்மலர் தூவி யழுதிரேல்
வஞ்சந் தீர்த்திடும் வான்மியூ ரீசனே. ௬

நுணங்கு நூலயன் மாலு மறிகிலாக்
குணங்க டான்பர விக்குறைந் துக்கவர்
சுணங்கு பூண்முலைத் தூமொழி யாரவர்
வணங்க நின்றிடும் வான்மியூ ரீசனே. ௭

ஆதி யும்மர னுமயன் மாலுமாய்ப்
பாதி பெண்ணுரு வாய பரமனென்
றோதி யுள்குழைந் தேத்தவல் லாரவர்
வாதை தீர்த்திடும் வான்மியூ ரீசனே. ௮

ஒட்டை மாடத்தி லொன்பது வாசலும்
காட்டில் வேவதன் முன்னங் கழலடி
நாட்டி நாண்மலர் தூவி வலஞ்செயில்
வாட்டந் தீர்த்திடும் வான்மியூ ரீசனே. ௯

பார மாக மலையெடுத் தான்றனைச்
சீர மாகத் திருவிர லூன்றினான்
ஆர்வ மாக வழைத்தவ னேத்தலும்
வார மாயினன் வான்மியூ ரீசனே. ௰

திருச்சிற்றம்பலம்

இது தொண்டைநாட்டிலுள்ளது.

இறைவன் - பால்வண்ணநாதர்; இறைவி - சுந்தரநாயகி.



## திருநாகைக்காரோணம் பதிகம் கஙள

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பாணத் தான்மதின் மூன்று மெரித்தவன்
பூணத் தானர வாமை பொறுத்தவன்
காணத் தானினி யான்கட னாகைக்கா
ரோணத் தானென நம்வினை யோயுமே.

வண்ட லம்பிய வார்சடை யீசனை
விண்ட லம்பணிந் தேத்தும் விகிர்தனைக்
கண்ட லங்கமழ் நாகைக்கா ரோணனைக்
கண்ட லும்வினை யான கழலுமே. உ

புனையு மாமலர் கொண்டு புரிசடை
நனையு மாமலர் சூடிய நம்பனைக்
கனையும் வார்கட னாகைக்கா ரோணனை
நினைய வேவினை யாயின நீங்குமே.

கொல்லை மால்விடை யேறிய கோவினை
எல்லி மாநட மாடு மிறைவனைக்
கல்லி னார்மதி னாகைக்கா ரோணனைச்
சொல்ல வேவினை யானவை சோருமே.

மெய்ய னைவிடை யூர்தியை வெண்மழுக்
கைய னைக்கட னாகைக்கா ரோணனை
மைய னுக்கிய கண்டனை வானவர்
ஐய னைத்தொழு வார்க்கல்ல லில்லையே.

அலங்கல் சேர்சடை யாதி புராணனை
விலங்கன் மெல்லியல் பாகம் விருப்பனைக்
கலங்கள் சேர்கட னாகைக்கா ரோணனை
வலங்கொள் வார்வினை யாயின மாயுமே.

சினங்கொண் மால்கரி சீறிய வேறினை
இனங்கொள் வானவ ரேத்திய வீசனைக்
கனங்கொண் மாமதி னாகைக்கா ரோணனை
மனங்கொள் வார்வினை யாயின மாயுமே.

அந்த மில்புக ழாயிழை யார்பணிந்
தெந்தை யீசனென் றேத்து மிறைவனைக்
கந்த வார்பொழி னாகைக்கா ரோணனைச்
சிந்தை செய்யக் கெடுந்துயர் திண்ணமே.

கருவ னைக்கட னாகைக்கா ரோணனை
இருவ ருக்கறி வொண்ணா விறைவனை
ஒருவ னையுண ரார்புர மூன்றெய்த
செருவ னைத்தொழத் தீவினை தீருமே.

கடல்க ழிதழி நாகைக்கா ரோணன்றன்
வடவ ரையெடுத் தார்த்த வரக்கனை
அடர வூன்றிய பாத மணைதரத்
தொடர வஞ்சுந் துயக்கறுங் காலனே.

திருச்சிற்றம்பலம்



## மேலைத்திருக்காட்டுப்பள்ளி பதிகம் கக௲அ

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

மாட்டுப் பள்ளி மகிழ்ந்துறை வீர்க்கெலாம்
கேட்டுப் பள்ளிகண் டீர்கெடு வீரிது
ஓட்டுப் பள்ளிவிட் டோடலு றாமுனம்
காட்டுப் பள்ளியு ளான்கழல் சேர்மினே.

மாட்டைத் தேடி மகிழ்ந்துநீர் நும்முளே
நாட்டுப் பொய்யெலாம் பேசிடு நாணிலீர்
கூட்டை விட்டுயிர் போவதன் முன்னமே
காட்டுப் பள்ளியு ளான்கழல் சேர்மினே.

தேனை வென்றசொல் லாளொடு செல்வமும்
ஊனை விட்டுயிர் போவதன் முன்னமே
கான வேடர் கருதுங்காட் டுப்பள்ளி
ஞான நாயக னைச்சென்று நண்ணுமே.

அருத்த மும்மனை யாளொடு மக்களும்
பொருத்த மில்லைபொல் லாதது போகடும்
கருத்தன் கண்ணுத லண்ணல்காட் டுப்பள்ளித்
திருத்தன் சேவடி யைச்சென்று சேர்மினே.

சுற்ற முந்துணை யும்மனை வாழ்க்கையும்
அற்ற போதணை யாரவ ரென்றென்றே
கற்ற வர்கள் கருதுங்காட் டுப்பள்ளிப்
பெற்ற மேறும் பிரானடி சேர்மினே.

அடும்புங் கொன்றையும் வன்னியு மத்தமும்
துடும்பல் செய்சடைத் தூமணிச் சோதியான்
கடம்பன் றாதை கருதுங்காட் டுப்பள்ளி
உடம்பி னார்க்கோ ருறுதுணை யாகுமே.

மெய்யின் மாசுடை யாருடல் மூடுவார்
பொய்யை மெய்யென்று புக்குடன் வீழன்மின்
கையின் மானுடை யான்காட்டுப் பள்ளியெம்
ஐயன் றன்னடி யேயடைந் துய்ம்மினே. ௭

வேலை வென்றகண் ணாரை விரும்பிநீர்
சீலங் கெட்டுத் திகையன்மின் பேதைகாள்
காலை யேதொழுங் காட்டுப்பள் ளியுறை
நீல கண்டனை நித்த னினைமினே. ௮

இன்று ளார்நாளை யில்லை யெனும்பொருள்
ஒன்று மோரா துழிதரு மூமர்காள்
அன்று வானவர்க் காக விடமுண்ட
கண்ட னார்காட்டுப் பள்ளிகண் டுய்ம்மினே. ௯

எண்ணி லாவரக் கன்மலை யேந்திட
எண்ணி நீண்முடி பத்து மிறுத்தவன்
கண்ணு ளார்கரு துங்காட்டுப் பள்ளியை
நண்ணு வாரவர் தம்வினை நாசமே. ௰

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - தீயாடியப்பர்; இறைவி - வார்கொண்டமுலையாள்.



திருச்சிராப்பள்ளி பதிகம் ௧௧௨

## திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

மட்டு வார்குழ லாளொடு மால்விடை
இட்ட மாவுகந் தேறு மிறைவனார்
கட்டு நீத்தவர்க் கின்னரு ளேசெயும்
சிட்டர் போலுஞ் சிராப்பள்ளிச் செல்வரே. ௧

அரிய யன்றலை வெட்டிவட் டாடினார்
அரிய யன்றொழு தேத்து மரும்பொருள்
பெரிய வன்சிராப் பள்ளியைப் பேணுவார்
அரிய யன்றொழ வங்கிருப் பார்களே. உ

அரிச்சி ராப்பக லைவரா லாட்டுண்டு
சுரிச்சி ராதுநெஞ் சேயொன்று சொல்லக்கேள்
திருச்சி ராப்பள்ளி யென்றலுந் தீவினை
நரிச்சி ராது நடக்கு நடக்குமே. ந

* * * * * . ச
* * * * * . ரு
* * * * * . சு
* * * * * . எ
* * * * * . அ
* * * * * . கூ

தாயு மாயெனக் கேதலை கண்ணுமாய்ப்
பேய னேனையு மாண்ட பெருந்தகை
தேய நாதன் சிராப்பள்ளி மேவிய
நாய னாரென நம்வினை நாசமே. ம

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - தாயுமானவர்; இறைவி - மட்டுவார்குழலம்மை.



## திருவாட்போக்கி பதிகம் உரு

திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

கால பாசம் பிடித்தெழு தூதுவர்
பால கர்விருத் தர்பழை யாரெனார்
ஆல நீழ லமர்ந்தவாட் போக்கியார்
சீல மார்ந்தவர் செம்மையு ளிற்பரே. க

விடுத்த தூதுவர் வந்து வினைக்குழிப்
படுத்த போது பயனில்லை பாவிகாள்
அடுத்த கின்னரங் கேட்கும்வாட் போக்கியை
எடுத்து மேத்தியு மின்புறு மின்களே. ௨

வந்திவ் வாறு வளைத்தெழு தூதுவர்
உந்தி யோடி நரகத் திடாமுனம்
அந்தி யின்னொளி தாங்கும்வாட் போக்கியார்
சிந்தி யாவெழு வார்வினை தீர்ப்பரே. ௩

கூற்றம் வந்து குமைத்திடும் போதினால்
தேற்றம் வந்து தெளிவுற லாகுமே
ஆற்ற வும்மருள் செய்யும்வாட் போக்கிபால்
ஏற்று மின்விளக் கையிரு ணீங்கவே. ௪

மாறு கொண்டு வளைத்தெழு தூதுவர்
வேறு வேறு படுப்பதன் முன்னமே
ஆறு செஞ்சடை வைத்தவாட் போக்கியார்க்
கூறி யூறி யுருகுமென் னுள்ளமே. ௫

கான மோடிக் கடிதெழு தூதுவர்
தான மோடு தலைபிடி யாமுனம்
ஆனஞ் சாடி யுகந்தவாட் போக்கியார்
ஊன மில்லவர்க் குண்மைபி னிற்பரே. ௬

பார்த்துப் பாசம் பிடித்தெழு தூதுவர்
கூர்த்த வேலாற் குமைப்பதன் முன்னமே
ஆர்த்த கங்கை யடக்கும்வாட் போக்கியார்
கீர்த்தி மைகள் கிளர்ந்துரை மின்களே. ௭

நாடி வந்து நமன்றமர் நல்லிருள்
கூடி வந்து குமைப்பதன் முன்னமே
ஆடல் பாட லுகந்தவாட் போக்கியை
வாடி யேத்தநம் வாட்டந் தவிருமே. ௮

கட்ட றுத்துக் கடிதெழு தூதுவர்
பொட்ட நூக்கிப் புறப்படா முன்னமே
அட்ட மாமலர் சூடும்வாட் போக்கியார்க்
கிட்ட மாகி யிணையடி யேத்துமே.

இரக்க முன்னறி யாதெழு தூதுவர்
பரக்க ழித்தவர் பற்றுதன் முன்னமே
அரக்க னுக்கருள் செய்தவாட் போக்கியார்
கரப்ப துங்கரப் பாரவர் தங்கட்கே.

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

**இறைவன் - இரத்தினகிரீசுவரர்; இறைவி - சுரும்பார்குழலம்மை.**



## திருமணஞ்சேரி பதிகம் உ௱

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பட்ட நெற்றியர் பாய்புலித் தோலினர்
நட்ட நின்று நவில்பவர் நாடொறுஞ்
சிட்டர் வாழ்திரு வார்மணஞ் சேரியெம்
வட்ட வார்சடை யார்வண்ணம் வாழ்த்துமே.

துன்னு வார்குழ லாளுமை யாளொடும்
பின்னு வார்சடை மேற்பிறை வைத்தவர்
மன்னு வார்மணஞ் சேரி மருந்தினை
உன்னு வார்வினை யாயின வோயுமே.

புற்றி லாடர வாட்டும் புனிதனார்
தெற்றி னார்புரந் தீயெழச் செற்றவர்
சுற்றி னார்மதில் சூழ்மணஞ் சேரியார்
பற்றி னாரவர் பற்றவர் காண்மினே.

மத்த மும்மதி யும்வளர் செஞ்சடை
முத்தர் முக்கணர் மூசர வம்மணி
சித்தர் தீவணர் சீர்மணஞ் சேரியெம்
வித்தர் தாம்விருப் பாரை விருப்பரே.

துள்ளு மான்மறி தூமழு வாளினர்
வெள்ள நீர்கரந் தார்சடை மேலவர்
அள்ள லார்வயல் சூழ்மணஞ் சேரியெம்
வள்ள லார்கழல் வாழ்த்தல்வாழ் வாவதே.

நீர்ப ரந்த நிமிர்புன் சடையின்மேல்
ஊர்ப ரந்த வுரக மணிபவர்
சீர்ப ரந்த திருமணஞ் சேரியார்
ஏர்ப ரந்தங் கிலங்குசூ லத்தரே.

சுண்ணத் தர்சுடு நீறுகந் தாடலார்
விண்ணத் தம்மதி சூடிய வேதியர்
மண்ணத் தம்முழ வார்மணஞ் சேரியார்
வண்ணத் தம்முலை யாளுமை வண்ணரே.

துன்ன வாடையர் தூமழு வாளினர்
பின்னு செஞ்சடை மேற்பிறை வைத்தவர்
மன்னு வார்பொழில் சூழ்மணஞ் சேரியெம்
மன்ன னார்கழ லேதொழ வாய்க்குமே.

சித்தர் தேவர்கண் மாலொடு நான்முகன்
புத்தர் தேரமண் கையர் புகழவே
மத்தர் தாமறி யார்மணஞ் சேரியெம்
அத்த னாரடி யார்க்கல்லல் இல்லையே.

கடுத்த மேனி யரக்கன் கயிலையை
எடுத்த வன்னெடு நீண்முடி பத்திறப்
படுத்த லும்மணஞ் சேரி யருளெனக்
கொடுத்த னன்கொற்ற வாளொடு நாமமே.

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - அருள்வள்ளனாதர்; இறைவி - யாழினுமென்மொழியாள்.

## திருமருகல் பதிகம் உ௱உ

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பெருக லாந்தவம் பேதைமை தீரலாம்
திருக லாகிய சிந்தை திருத்தலாம்
பருக லாம்பர மாயதோ ரானந்தம்
மருக லானடி வாழ்த்தி வணங்கவே. ௧

பாடங் கொள்பனு வற்றிறங் கற்றுப்போய்
நாடங் குள்ளன தட்டிய நாணிலீர்
மாடஞ் சூழ்மரு கற்பெரு மான்றிரு
வேடங் கைதொழ வீடெளி தாகுமே. ௨

சினத்தி னல்வருஞ் செய்தொழி லாமவை
அனைத்து நீங்கினின் றுதர வாய்மிக
மனத்தி னன்மரு கற்பெரு மான்றிறம்
நினைப்பி னார்க்கில்லை நீணில வாழ்க்கையே. ௩

ஓது பைங்கிளிக் கொண்பா லமுதட்டிப்
பாது காத்துப் பலபல கற்பித்து
மாது தான்மரு கற்பெரு மானுக்குத்
தூது சொல்ல விடத்தான் றொடங்குமே.

இன்ன வாறென்ப துண்டறி யேனின்று
துன்னு கைவளை சோரக்கண் ணீர்மல்கும்
மன்னு தென்மரு கற்பெரு மான்றிறம்
உன்னி யொண்கொடி யுள்ள முருகுமே. ௫

சங்கு சோரக் கலையுஞ் சரியவே
மங்கை தான்மரு கற்பெரு மான்வரும்
அங்க வீதி யருகணை யாநிற்கும்
நங்கை மீரிதற் கென்செய்கே ணாளுமே.

காட்சி பெற்றில ளாகிலுங் காதலே
மீட்சி யொன்றறி யாது மிருவதே
மாட்சி யார்மரு கற்பெரு மானுக்குத்
தாழ்ச்சி சாலவுண் டாகுமென் றையலே.

நீடு நெஞ்சு ணினைந்துகண் ணீர்மல்கும்
ஓடு மாலினோ டொண்கொடி மாதராள்
மாட நீண்மரு கற்பெரு மான்வரில்
கூடுநீ யென்று கூட விழைக்குமே.

கந்த வார்குழல் கட்டிலள் காரிகை
அந்தி மால்விடை யோடுமன் பாய்மிக
வந்தி டாய்மரு கற்பெரு மானென்று
சிந்தை செய்து திகைத்திடுங் காண்மினே.

ஆதி மாமலை யன்றெடுத் தானிற்றுச்
சோதி யென்றலுந் தொல்லருள் செய்திடும்
ஆதி யான்மரு கற்பெரு மான்றிறம்
ஓதி யாரவ ரும்பர்க்கு மும்பரே.

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - மாணிக்கவண்ணர்; இறைவி - வண்டுவார்குழலி.



பொது பதிகம் உ௱௩

## தனித் திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

ஒன்று வெண்பிறைக் கண்ணியோர் கோவணம்
ஒன்று கீளுமை யோடு முடுத்தது
ஒன்று வெண்டலை யேந்திய முள்ளத்தே
ஒன்றி நின்றங் குறையு மொருவனே.

இரண்டு மாமவர்க் குள்ளன செய்தொழில்
இரண்டு மாமவர்க் குள்ளன கோலங்கள்
இரண்டு மில்லிள மானெமை யாளுகந்
திரண்டு போதுமென் சிந்தையுள் வைகுமே. ௨

மூன்று மூர்த்தியு ணின்றிய லுந்தொழில்
மூன்று மாயின மூவிலைச் சூலத்தன்
மூன்று கண்ணினன் றீத்தொழின் மூன்றினன்
மூன்று போதுமென் சிந்தையுண் மூழ்குமே. ௩

நாலு மேன்முகஞ் செற்றது மன்னிழல்
நாலு நன்குணர்ந் திட்டது மின்பமா
நாலு வேதஞ் சரித்தது நன்னெறி
நாலு போலெம கத்துறை நாதனே. ௪

அஞ்சு மஞ்சுமோ ராடி யரைமிசை
அஞ்சு போலரை யார்த்ததின் றத்துவம்
அஞ்சு மஞ்சுமோ ரோரஞ்சு மாயவன்
அஞ்சு மாமெம கத்துறை யாதியே. ௫

ஆறு கால்வண்டு மூசிய கொன்றையன்
ஆறு சூடிய வண்ட முதல்வனார்
ஆறு கூர்மையர்க் கச்சம யப்பொருள்
ஆறு போலெம கத்துறை யாதியே. ௬

ஏழு மாமலை யேழ்பொழில் சூழ்கடல்
ஏழு போற்று மிராவணன் கைந்நரம்
பேழு கேட்டருள் செய்தவன் பொற்கழல்
ஏழுஞ் சூழடி யேன்மனத் துள்ளவே. ௭

எட்டு மூர்த்தியாய் நின்றிய லுந்தொழில்
எட்டு வான்குணத் தீசனெம் மான்றனை
எட்டு மூர்த்தியு மெம்மிறை யெம்முளே
எட்டு மூர்த்தியு மெம்மு ளொடுங்குமே. ௮

ஒன்ப தொன்ப தியானை யொளிகளி
ஒன்ப தொன்பது பல்கணஞ் சூழவே
ஒன்ப தாமவை நீத்தொழி லின்னுரை
ஒன்ப தொத்துநின் றென்னு ளொடுங்குமே. ௯

பத்து நூறவன் வெங்கண்வெள் ளேற்றண்ணல்
பத்து நூறவன் பல்சடை தோண்மிசை
பத்தி யாமில மாதலின் ஞானத்தால்
பத்தி யானிடங் கொண்டது பள்ளியே. ௰

திருச்சிற்றம்பலம்



பொது பதிகம் ௨௱௫

## தனித் திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

மாசில் வீணையு மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈச னெந்தை யிணையடி நீழலே. ௧

நமச்சி வாயவே ஞானமுங் கல்வியும்
நமச்சி வாயவே நானறி விச்சையும்
நமச்சி வாயவே நாநவின் றேத்துமே
நமச்சி வாயவே நன்னெறி காட்டுமே. ௨

ஆளா னார்க்கா ளானாரை யடைந்துய்யார்
மீளா வாட்செய்து மெய்ம்மையு ணிற்கிலார்
தோளா தசுரை யோதொழும் பர்செவி
வாளா மாய்ந்துமண் ணாகிக் கழிவரே. ௩

நடலை வாழ்வுகொண் டென்செய்திர் நாணிலீர்
சுடலை சேர்வது சொற்பிர மாணமே
கடலி னஞ்சமு துண்டவர் கைவிட்டால்
உடலி னார்கிடந் தூர்முனி பண்டமே. ௪

பூக்கைக் கொண்டரன் பொன்னடி போற்றிலார்
நாக்கைக் கொண்டர னாமம் நவில்கிலார்
ஆக்கைக் கேயிரை தேடி யலமந்து
காக்கைக் கேயிரை யாகிக் கழிவரே. ௫

குறிக ளும்மடை யாளமுங் கோயிலும்
நெறிக ளும்மவர் நின்றதோர் நேர்மையும்
அறிய வாயிர மாரண மோதிலும்
பொறியி லீர்மன மென்கொல் புகாததே. ௬

வாழ்த்த வாயு நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியுந் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்த வாவினை யேனெடுங் காலமே. ௭

எழுது பாவைநல் லார்திறம் விட்டுநான்
தொழுது போற்றிநின் றேனையுஞ் சூழ்ந்துகொண்
டுழுத சால்வழி யேயுழு வான்பொருட்
டிழுதை நெஞ்சமி தென்படு கின்றதே. ௮

நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும்பொன் னார்சடைப் புண்ணியன்
பொக்க மிக்கவர் பூவுநீ ருங்கண்டு
நக்கு நிற்ப ரவர்தம்மை நாணியே. ௯

விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோனட் டுணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடையமுன் னிற்குமே. ௰

திருச்சிற்றம்பலம்

---

**பதிக வரலாறு:**

திருநாவுக்கரசு நாயனர் மறுமாற்றத் திருத்தாண்டகத்தை யருளி நாம் சிவபெருமானை யன்றி வேறுயார்க்கும் குடியல்லோம் என்றுகூறி மறுத்தருளியும் அமைச்சர்பால் வைத்த அருளால் அவர் வேண்டு

கோளுக்கு, ஈண்டு வரும் வினைகளுக்கு எம்பிரான் உளன் என்று இயைந்து அவரோடு சென்றபோது பல்லவ அரசன் இவனை இனி என்ன செய்வது எனக் கேட்க, அறந்துறந்து தமக் குறுதியறியாத புல்லறிவின ராகிய சமணர்கள் சிறிதும் அஞ்சாது நீற்றறையிலிடும்படிச் சொன்னார்கள். கொடுங்கோலனாகிய வரசன் அவ்வாறே செய்கவென அருகுள்ளோரை யேவ, அவரும் நாயனாரை உலோகங்களும் உருகும் தழல் வெம்மையினை யுடைய நீற்றறையிலிட்டுத் திருகலான கருந்தாளிட்டுச் சேமஞ் செய் தொழிந்தார்கள். ஆண்ட வரசுகளும் அதனுள்ளணைந்து அம்பலத்துத் தாண்டவம் புரியுந் தம்பிரான் தாள் நினைந்து சிவனடியார்க்கு ஈண்டு வருந் துயருளதோ வென்று மனவுறுதி கொண்டு, 'மாசில் வீணையும்' என்னுமித் திருக்குறுந்தொகையைப் பாடியருள, அந்நீற்றறை குற்றமற்ற யாழிசையையும், வெண்ணிலாவையும், தென்றற்காற்றையும், இளவே னிலையும், நீர்நிலையையும் ஒத்துச் சிவபெருமானுடைய திருவடி நீழ லைப்போற் குளிர்ந்து ஊனஞ் செய்யாதாக, இன்பவெள்ளத் தழுந்தி அம்பலவர் தேனுந்து சேவடியின் றேனுண்டு ஈனமில்லா திருந்தார். அரசனும் அமணர்களும் எழுநாட் சென்று அறையைத் திறந்து அடி களின் நிலையைக் கண்டு வியந்தார்கள்.



பொது பதிகம் உ௱௫

## தனித் திருக்குறுந்தொகை

### திருச்சிற்றம்பலம்

ஏயி லானையெ னிச்சை யகம்படிக்
கோயி லானைக் குணப்பெருங் குன்றினை
வாயி லானை மனோன்மனி யைப்பெற்ற
தாயி லானைத் தழுவுமென் னாவியே.

முன்னை ஞான முதற்றனி வித்தினைப்
பின்னை ஞானப் பிறங்கு சடையனை
என்னை ஞானத் திருளறுத் தாண்டவன்
தன்னை ஞானத் தளையிட்டு வைப்பனே.

ஞானத் தாற்றொழு வார்சில ஞானிகள்
ஞானத் தாற்றொழு வேனுனை நானலேன்
ஞானத் தாற்றொழு வார்க டொழக்கண்டு
ஞானத் தாயுனை நானுந் தொழுவனே.

புழுவுக் குங்குண நான்கெனக் கும்மதே
புழுவுக் கிங்கெனக் குள்ளபொல் லாங்கில்லை
புழுவி னுங்கடை யேன்புனி தன்றமர்
குழுவுக் கெவ்விடத் தேன்சென்று கூடவே.

மலையே வந்து விழினு மனிதர்காள்
நிலையி னின்று கலங்கப் பெறுதிரேல்
தலைவ னாகிய வீசன் றமர்களைக்
கொலைசெய் யானைதான் கொன்றிடு கிற்குமே. ௫

கற்றுக் கொள்வன வாயுள நாவுள
இட்டுக் கொள்வன பூவுள நீருள
கற்றைச் செஞ்சடை யானுள னுழேளோம்
எற்றுக் கோநம னுன்முனி வுண்பதே ௬

மனிதர் காளிங்கே வம்மொன்று சொல்லுகேன்
கனிதந் தாற்கனி யுண்ணவும் வல்லீரே
புனிதன் பொற்கழ லீச னெனுங்கனி
இனிது சாலவு மேசற்ற வர்க்கட்கே. ௭

என்னை யேதும றிந்தில னெம்பிரான்
தன்னை நானுமுன் னேது மறிந்திலேன்
என்னைத் தன்னடி யானென் றறிதலும்
தன்னை நானும் பிரானென் றறிந்தேனே. ௮

* * * * * ௯

தெள்ளத் தேறித் தெளிந்துதித் திப்பதோர்
உள்ளத் தேற லமுத வொளிவெளி
கள்ளத் தேன்கடி யேன்கவ லைக்கடல்
வெள்ளத் தேனுக்கெவ் வாறு விளைந்ததே. ௰

திருச்சிற்றம்பலம்



பொது பதிகம் உ௱கூ

## காலபாசத் திருக்குறுந்தொகை

### திருச்சிற்றம்பலம்

கண்டு கொள்ளரி யானைக் கனிவித்துப்
பண்டு நான்செய்த பாழிமை கேட்டிரேல்
கொண்ட பாணி கொடுகொட்டி தாளங்கைக்
கொண்ட தொண்டரைத் துன்னிலுஞ் சூழலே. க

நடுக்கத் துள்ளு நகையுளு நம்பர்க்குக்
கடுக்கக் கல்ல வடமிடு வார்கட்குக்
கொடுக்கக் கொள்க வெனவுரைப் பார்களை
இடுக்கண் செய்யப்பெ றீரிங்கு நீங்குமே. உ

கார்கொள் கொன்றைக் கடிமலர்க் கண்ணியான்
சீர்கொ ணாமஞ் சிவனென் றரற்றுவார்
ஆர்க ளாகிலு மாக வவர்களை
நீர்கள் சாரப் பெறீரிங்கு நீங்குமே. ௩

சாற்றி னேன்சடை நீண்முடிச் சங்கரன்
சீற்றங் காமன்கண் வைத்தவன் சேவடி
ஆற்ற வுங்களிப் பட்ட மனத்தராய்ப்
போற்றி யென்றுரைப் பார்புடை போகலே. ௪

இறையென் சொன்மற வேனமன் றூதுவீர்
பிறையும் பாம்பு முடைப்பெரு மான்றமர்
நறவ நாறிய நன்னறுஞ் சாந்திலும்
நிறைய நீறணி வாரெதிர் செல்லலே. ரு

வாம தேவன் வளநகர் வைகலும்
காம மொன்றில ராய்க்கை விளக்கொடு
தாமந் தூபமுந் தண்ணறுஞ் சாந்தமும்
ஏம மும்புனை வாரெதிர் செல்லலே. சா

படையும் பாசமும் பற்றிய கையினீர்
அடையன் மின்னம தீச னடியரை
விடைகொ ளூர்தியி னானடி யார்குழாம்
புடைபு காதுநீர் போற்றியே போமினே. ௭

விச்சை யாவதும் வேட்கைமை யாவதும்
நிச்ச னீறணி வாரை நினைப்பதே
அச்ச மெய்தி யருகணை யாதுநீர்
பிச்சை புக்கவ னன்பரைப் பேணுமே. ௮

இன்னங் கேண்மி னிளம்பிறை சூடிய
மன்னன் பாத மனத்துட னேத்துவார்
மன்னு மஞ்செழுத் தாகிய மந்திரம்
தன்னி லொன்றுவல் லாரையுஞ் சாரலே. ௯

மற்றுங் கேண்மின் மனப்பரிப் பொன்றின்றிச்
சுற்றும் பூசிய நீற்றொடு கோவணம்
ஒற்றை யேறுடை யானடி யேயலால்
பற்றொன் றில்லிகண் மேற்படை போகலே. ௰

அரக்க னீரைந் தலையுமோர் தாளினால்
நெருக்கி யூன்றியிட் டான்றமர் நிற்கிலும்
சுருக்கெ னாதங்குப் பேர்மின்கண் மற்றுநீர்
சுருக்கெ னிற்சுட ரான்கழல் சூடுமே. ௧௧

திருச்சிற்றம்பலம்



பொது பதிகம் ௨௱௭

## மறக்கிற்பனேயென்னுந் திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

காச னைக்கன லைக்கதிர் மாமணித்
தேச னைப்புக ழார்சிலர் தெண்ணர்கள்
மாசி னைக்கழித் தாட்கொள வல்லவெம்
ஈச னையினி நான்மறக் கிற்பனே. ௧

புந்திக் குவிளக் காய புராணனைச்
சந்திக் கண்ணட மாடுஞ் சதுரனை
அந்தி வண்ணனை யாரழன் மூர்த்தியை
வந்தெ னுள்ளங்கொண் டானை மறப்பனே. உ

ஈச னீசனென் றென்று மரற்றுவன்
ஈசன் றானென் மனத்திற் பிரிவிலன்
ஈசன் றன்னையு மென்மனத் துக்கொண்டு
ஈசன் றன்னையும் யான்மறக் கிற்பனே. ௩

ஈச னென்னை யறிந்த தறிந்தனன்
ஈசன் சேவடி யேத்தப் பெறுதலால்
ஈசன் சேவடி யேத்தப்பெற் றேனினி
ஈசன் றன்னையும் யான்மறக் கிற்பனே. ௪

தேனைப் பாலினைத் திங்களை ஞாயிற்றை
வான வெண்மதி சூடிய மைந்தனை
வேனி லானை மெலிவுசெய் தீயழல்
ஞான மூர்த்தியை நான்மறக் கிற்பனே. ௫

கன்ன லைக்கரும் பூறிய தேறலை
மின்ன னைமின் னனைய வுருவனைப்
பொன்ன னைமணிக் குன்று பிறங்கிய
என்ன னையினி யான்மறக் கிற்பனே. ௬

கரும்பி னைக்கட்டி யைக்கந்த மாமலர்ச்
சுரும்பி னைச்சுடர்ச் சோதியுட் சோதியை
அரும்பி னிற்பெரும் போதுகொண் டாய்மலர்
விரும்பு மீசனை நான்மறக் கிற்பனே. ௭

துஞ்சும் போதுஞ் சுடர்விடு சோதியை
நெஞ்சு ணின்று நினைப்பிக்கு நீதியை
நஞ்சு கண்டத் தடக்கிய நம்பனை
வஞ்ச னேனினி நான்மறக் கிற்பனே. ௮

புதிய பூவினைப் புண்ணிய நாதனை
நிதியை நீதியை நித்திலக் குன்றினைக்
கதியைக் கண்டங் கறுத்த கடவுளை
மதியை மைந்தனை நான்மறக் கிற்பனே ௯

கருகு கார்முகில் போல்வதொர் கண்டனை
உருவ நோக்கியை யூழி முதல்வனைப்
பருகு பாலனைப் பான்மதி சூடியை
மருவு மைந்தனை நான்மறக் கிற்பனே. ௰

திருச்சிற்றம்பலம்



## பொது

பதிகம் ௨௱௮

### தொழற்பாலதேயென்னுந் திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

அண்டத் தானை யமரர் தொழப்படும்
பண்டத் தானைப் பவித்திர மார்திரு
முண்டத் தானைமுற் றுதவி ளம்பிறைத்
துண்டத் தானைக்கண் டீர்தொழற் பாலதே. ௧

முத்தொப் பானை முளைத்தெழு கற்பக
வித்தொப் பானை விளக்கிடை நேரொளி
ஒத்தொப் பானை யொளிர்பவ ளத்திரட்
டொத்தொப் பானைக்கண் டீர்தொழற் பாலதே. ௨

பண்ணொத் தானைப் பவளந் திரண்டதோர்
வண்ணத் தானை வகையுணர் வான்றனை
எண்ணத் தானை யிளம்பிறை போல்வெள்ளைச்
சுண்ணத் தானைக்கண் டீர்தொழற் பாலதே. ௩

விடலை யானை விரைகமழ் தேன்கொன்றைப்
படலை யானைப் பலிதிரி வான்செலும்
நடலை யானை நரிபிரி யாததோர்
சுடலை யானைக்கண் டீர்தொழற் பாலதே.

பரிதி யானைப் பல்வேறு சமயங்கள்
கருதி யானைக்கண் டார்மன மேவிய
பிரிதி யானைப் பிறரறி யாததோர்
சுருதி யானைக்கண் டீர்தொழற் பாலதே. ௫

ஆதி யானை யமரர் தொழப்படும்
நீதி யானை நியம நெறிகளை
ஓதி யானை யுணர்தற் கரியதோர்
சோதி யானைக்கண் டீர்தொழற் பாலதே. ௬

ஞாலத் தானைநல் லானைவல் லார்தொழும்
கோலத் தானைக் குணப்பெருங் குன்றினை
மூலத் தானை முதல்வனை மூவிலைச்
சூலத் தானைக்கண் டீர்தொழற் பாலதே. ௭

ஆதிப் பாலட்ட மூர்த்தியை யானஞ்சும்
வேதிப் பானைநம் மேல்வினை வெந்தறச்
சாதிப் பானைத் தவத்திடை மாற்றங்கள்
சோதிப் பானைக்கண் டீர்தொழற் பாலதே. ௮

நீற்றி னானை நிகரில்வெண் கோவணக்
கீற்றி னானைக் கிளரொளிச் செஞ்சடை
ஆற்றி னானை யமரர்தம் மாருயிர்
தோற்றி னானைக்கண் டீர்தொழற் பாலதே. ௯

விட்டிட் டானைமெய்ஞ் ஞானத்து மெய்ப்பொருள்
கட்டிட் டானைக் கனங்குழை பாலன்பு
பட்டிட் டானைப் பகைத்தவர் முப்புரம்
சுட்டிட் டானைக்கண் டீர்தொழற் பாலதே. ௰

முற்றி னானை யிராவண னீண்முடி
ஒற்றி னானை யொருவிர லானுறப்
பற்றி னானையோர் வெண்டலைப் பாம்பரைச்
சுற்றி னானைக்கண் டீர்தொழற் பாலதே. கக

திருச்சிற்றம்பலம்



பொது பதிகம் உ௱கூ

## இலிங்கபுராணத் திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

புக்க ணைந்து புரிந்தல ரிட்டிலர்
நக்க ணைந்து நறுமலர் கொய்திலர்
சொக்க ணைந்த சுடரொளி வண்ணனை
மிக்குக் காணலுற் றாரங் கிருவரே.

அலரு நீருங்கொண் டாட்டித் தெளிந்திலர்
திலக மண்டலந் தீட்டித் திரிந்திலர்
உலக மூர்த்தி யொளிநிற வண்ணனைச்
செலவு காணலுற் றாரங் கிருவரே.

ஆப்பி நீரோ டலகுகைக் கொண்டிலர்
பூப்பெய் கூடை புனைந்து சுமந்திலர்
காப்புக் கொள்ளி கபாலிதன் வேடத்தை
ஒப்பிக் காணலுற் றாரங் கிருவரே.

நெய்யும் பாலுங்கொண் டாட்டி நினைந்திலர்
பொய்யும் பொக்கமும் போக்கிப் புகழ்ந்திலர்
ஐயன் வெய்ய வழனிற வண்ணனை
மெய்யைக் காணலுற் றாரங் கிருவரே.

எருக்கங் கண்ணிகொண் டிண்டை புனைந்திலர்
பெருக்கக் கோவணம் பீறி யுடுத்திலர்
தருக்கி னாற்சென்று தாழ்சடை யண்ணலை
நெருக்கிக் காணலுற் றாரங் கிருவரே.

மரங்க ளேறி மலர்பறித் திட்டிலர்
நிரம்ப நீர்சுமந் தாட்டி நினைந்திலர்
உரம்பொ ருந்தி யொளிநிற வண்ணனை
நிரம்பக் காணலுற் றாரங் கிருவரே.

கட்டு வாங்கங் கபாலங்கைக் கொண்டிலர்
அட்ட மாங்கங் கிடந்தடி வீழ்ந்திலர்
சிட்டன் சேவடி சென்றெய்திக் காணிய
பட்ட கட்டமுற் றாரங் கிருவரே.

வெந்த நீறு விளங்க வணிந்திலர்
கந்த மாமல ரிண்டை புனைந்திலர்
எந்தை யேறுகந் தேறெரி வண்ணனை
அந்தங் காணலுற் றாரங் கிருவரே.

இளவெ ழுந்த விருங்குவ ளைம்மலர்
பிளவு செய்து பிணைத்தடி யிட்டிலர்
களவு செய்தொழிற் காமனைக் காய்ந்தவன்
அளவு காணலுற் றாரங் கிருவரே.

கண்டி பூண்டு கபாலங்கைக் கொண்டிலர்
விண்ட வான்சங்கம் விம்மவாய் வைத்திலர்
அண்ட மூர்த்தி யழனிற வண்ணனைக்
கெண்டிக் காணலுற் றாரங் கிருவரே.

செங்க ணானும் பிரமனுந் தம்முளே
எங்குந் தேடித் திரிந்தவர் காண்கிலார்
இங்குற் றேனென் றிலிங்கத்தே தோன்றினான்
பொங்கு செஞ்சடைப் புண்ணிய மூர்த்தியே.

திருச்சிற்றம்பலம்

பொது பதிகம் உாய

## மனத்தொகைத் திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பொன்னுள் ளத்திரள் புன்சடை யின்புறம்
மின்னுள் ளத்திரள் வெண்பிறை யாயிறை
நின்னுள் ளத்தருள் கொண்டிரு ணீங்குதல்
என்னுள் ளத்துள தெந்தை பிரானிரே.

மூக்க ணும்முடை யாய்முனி கள்பலர்
தொக்கெ ணுங்கழ லாயொரு தோலினை
டக்க ணும்மரை யாயரு ளேயலா
தெக்க ணும்மில னெந்தை பிரானிரே.

பனியாய் வெங்கதிர் பாய்படர் புன்சடை
முனியாய் நீயுல கம்முழு தாளினும்
தனியாய் நீசர ணீசல மேபெரி
தினியாய் நீயெனக் கெந்தை பிரானிரே.

மறையும் பாடுதிர் மாதவர் மாலினுக்
குறையு மாயினை கோளர வோடொரு
பிறையுஞ் சூடினை யென்பத லாற்பிறி
திறையுஞ் சொல்லிலை யெந்தை பிரானிரே.

பூத்தார் கொன்றையி னய்புலி யின்னதள்
ஆர்த்தா யாடர வோடன லாடிய
கூத்தா நின்குரை யார்கழ லேயல
தேத்தா நாவெனக் கெந்தை பிரானிரே.

பைம்மா னும்மர வாபர மாபசு
மைம்மால் கண்ணியோ டேறுமைந் தாவெனும்
அம்மா லல்லது மற்றடி நாயினேன்
எம்மா னும்மில னெந்தை பிரானிரே.

வெப்பத் தின்மன மாசு விளக்கிய
செப்பத் தாற்சிவ னென்பவர் தீவினை
ஒப்பத் தீர்த்திடு மொண்கழ லாற்கலா
தெப்பற் றும்மில னெந்தை பிரானிரே. எ

திகழுஞ் சூழ்சுடர் வானொடு வைகலும்
நிகழு மொண்பொரு ளாயின நீதியென்
புகழு மாறும லானுன பொன்னடி
இகழு மாறில னெந்தை பிரானிரே. அ

கைப்பற் றித்திரு மால்பிர மன்னுனை
எப்பற் றியறி தற்கரி யாயருள்
அப்பற் றல்லது மற்றடி நாயினேன்
எப்பற் றும்மில னெந்தை பிரானிரே. கூ

எந்தை யெம்பிரா னென்றவர் மேன்மனம்
எந்தை யெம்பிரா னென்றிறைஞ் சித்தொழூ
தெந்தை யெம்பிரா னென்றடி யேத்துவார்
எந்தை யெம்பிரா னென்றடி சேர்வரே. ώ

திருச்சிற்றம்பலம்



பொது

பதிகம் உகக

## சித்தத்தொகைத் திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

சிந்திப் பார்மனத் தான்சிவன் செஞ்சுடர்
அந்தி வானிறத் தானணி யார்மதி
முந்திச் சூடிய முக்கண்ணி னையடி
வந்திப் பாரவர் வானுல காள்வரே. க

நட-சுசு

அண்ட மாரிரு ளூடுக டந்தும்பர்
உண்டு போலுமோ ரொண்சுட ரச்சுடர்
கண்டிங் காரறி வாரறி வாரெலாம்
வெண்டிங் கட்கண்ணி வேதிய னென்பரே. ௨

ஆதி யாயவ னாரும் லாதவன்
போது சேர்புனை நீண்முடிப் புண்ணியன்
பாதி பெண்ணுரு வாகிப் பரஞ்சுடர்ச்
சோதி யுட்சோதி யாய்நின்ற சோதியே. ௩

இட்ட திட்டதோ ரேறுகந் தேறியூர்
பட்டி துட்டங்க ளைப்பலி தேர்வதோர்
கட்ட வாழ்க்கைய னாகிலும் வானவர்
அட்ட மூர்த்தி யருளென் றடைவரே. ௪

ஈறில் கூறைய னாகி யெரிந்தவெண்
நீறு பூசி நிலாமதி சூடிலும்
வீறி லாதன செய்யினும் விண்ணவர்
ஊற லாயரு ளாயென் றுரைப்பரே. ௫

உச்சி வெண்மதி சூடிலு மூனறுப்
பச்சை வெண்டலை யேந்திப் பலவிலம்
பிச்சை யேபுகு மாகிலும் வானவர்
அச்சந் தீர்த்தரு ளாயென் றடைவரே.

ஊரிலா யென்றொன் றாக வுரைப்பதோர்
பேரி லாய்பிறை சூடிய பிஞ்ஞகா
காரு லாங்கண்ட னேயுன் கழலடி
சேர்வி லார்கட்குத் தீயவை தீயவே. ௭

எந்தை யேயெம்பி ரானே யெனவுள்கிச்
சிந்திப் பாரவர் தீவினை தீருமால்
வெந்த நீறுமெய் பூசிய வேதியன்
அந்த மாவளப் பாரடைந் தார்களே.

ஏன வெண்மருப் போடென்பு பூண்டெழில்
ஆனை யீருரி போர்த்தன லாடிலும்
தான வண்ணத்த னாகிலுந் தன்னையே
வான நாடர் வணங்குவர் வைகலே.

ஐய னந்தண னாணொடு பெண்ணுமாம்
மெய்யன் மேதகு வெண்பொடி பூசிய
மைகொள் கண்டத்தன் மான்மறிக் கையினன்
பைகொள் பாம்பரை யார்த்த பரமனே. ௰

ஒருவ னாகிநின் றானிவ் வுலகெலாம்
இருவ ராகிநின் றார்கட் கறிகிலான்
அருவ ராவரை யார்த்தவ னார்கழல்
பரவு வாரவர் பாவம் பறையுமே. ௧௧

ஓத வண்ணனு மொண்மலர்ச் செல்வனும்
நாத னேயரு ளாயென்று நாடொறும்
காதல் செய்து கருதப் படுமவர்
பாத மேத்தப் பறையுநம் பாவமே. ௧௨

ஔவ தன்மை யவரவ ராக்கையான்
வெவ்வ தன்மைய னென்ப தொழிமினோ
மௌவ னீண்மலர் மேலுறை வானொடு
பௌவ வண்ணனு மாய்ப்பணி வார்களே. ௧௩

அக்கு மாமையும் பூண்டன லேந்தியில்
புக்குப் பல்பலி தேரும் புராணனை
நக்கு நீர்க ணரகம் புகேன்மினோ
தொக்க வானவ ராற்றொழு வானையே. ௧௪

கங்கை தங்கிய செஞ்சடை மேலிளம்
திங்கள் சூடிய தீநிற வண்ணனார்
இங்க னாரெழில் வானம் வணங்கவே
அங்க னாற்கது வாலவன் றன்மையே. ௧௫

நகர* வெல்கொடி யானொடு நன்னெஞ்சே
நுகர நீயுனைக் கொண்டுய்ப் போக்குறில்
மகர வெல்கொடி மைந்தனைக் காய்ந்தவன்
புகரில் சேவடி யேபுக லாகுமே. ௧௬

சரண மாம்படி யார்பிற ரியாவரோ
கரணந் தீர்த்துயிர் கையி லிகழ்ந்தபின்
மரண மெய்திய பின்னவை நீக்குவான்
அரண மூவெயி லெய்தவ னல்லனே. ௧௭

ஞமனென் பானர கர்க்கு நமக்கெலாம்
சிவனென் பான்செழு மான்மறிக் கையினான்
கவனஞ் செய்யுங் கனவிடை யூர்தியான்
தமரென் றாலுங் கெடுந்தடு மாற்றமே. ௧௮

இடப மேறியு மில்பலி யேற்பவர்
அடவி காதலித் தாடுவ ரைந்தலைப்
படவம் பாம்பரை யார்த்த பரமனைக்
கடவி ராய்ச்சென்று கைதொழு துய்ம்மினே. ௧௯

இணர்ந்து கொன்றைபொற் றாது சொரிந்திடும்
புணர்ந்த வாளர வம்மதி யோடுடன்
அணைந்த வஞ்சடை யானவன் பாதமே
உணர்ந்த வுள்ளத் தவருணர் வார்களே. ௨௰

தருமந் தான்றவந் தான்றவத் தால்வரும்
கருமந் தான்கரு மான்மறிக் கையினான்
அருமந் தன்ன வதிர்கழல் சேர்மினோ
சிரமஞ் சேரழற் றீவினை யாளரே. ௨௧

நமச்சி வாயவென் பாருள ரேலவர்
தமச்ச நீங்கத் தவநெறி சார்தலால்
அமைத்துக் கொண்டதோர் வாழ்க்கைய னாகிலும்
இமைத்து நிற்பது சால வரியதே. ௨௨

(பா - ம்.) * வகர

பற்பல் காலம் பயிற்றிப் பரமனைச்
சொற்பல் காலநின் றேத்துமின் றொல்வினை
வெற்பிற் றோன்றிய வெங்கதிர் கண்டவப்
புற்ப னிக்கெடு மாறது போலுமே. உங

மணிசெய் கண்டத்து மான்மறிக் கையினான்
கணிசெய் வேடத்த ராயவர் காப்பினால்
பணிக டாஞ்செய வல்லவர் யாவர்தம்
பிணிசெய் யாக்கையை நீக்குவர் பேயரே. உச

இயக்கர் கின்னர ரிந்திரன் றானவர்
நயக்க நின்றவ னான்முக னாழியான்
மயக்க மெய்தவன் மாலெரி யாயினான்
வியக்குந் தன்மையி னானெம் விகிர்தனே. உரு

அரவ மார்த்தன லாடிய வண்ணலைப்
பரவு வாரவர் பாவம் பறைதற்குக்
குரவை கோத்தவ னுங்குளிர் போதின்மேல்
கரவி னான்முக னுங்கரி யல்லரே. உசா

அழலங் கையின னந்தரத் தோங்கிநின்
றுழலு மூவெயி லொள்ளழ லூட்டினான்
தழலுந் தாமரை யானொடு தாவினான்
கழலுஞ் சென்னியுங் காண்டற் கரியனே. உஎ

இளமை கைவிட் டகறலு மூப்பினார்
வளமை போய்ப்பிணி யோடு வருதலால்
உளமெ லாமொளி யாய்மதி யாயினான்
கிளமை யேகிளை யாக நினைப்பனே. உஅ

தன்னிற் றன்னை யறியுந் தலைமகன்
தன்னிற் றன்னை யறியிற் றலைப்படும்
தன்னிற் றன்னை யறிவில னாயிடில்
தன்னிற் றன்னையுஞ் சார்தற் கரியனே. உகூ

இலங்கை மன்னனை யீரைந்து பத்துமன்
றலங்க லோடுட னேசெல வூன்றிய
நலங்கொள் சேவடி நாடொறு நாடொறும்
வலங்கொண் டேத்துவார் வானுல காள்வரே. ௩௰

திருச்சிற்றம்பலம்



## பொது பதிகம் ௨௧௨

### உள்ளத் திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

நீற லைத்ததோர் மேனி நிமிர்சடை
ஆற லைக்கஙின் றூடு மமுதினைத்
தேற லைத்தெளி யைத்தெளி வாய்த்ததோர்
ஊற லைக்கண்டு கொண்டதெ னுள்ளமே.

பொந்தை யைப்புக்கு நீக்கப் புகுந்திடும்
தந்தை யைத்தழல் போல்வதோர் மேனியைச்
சிந்தை யைத்தெளி வைத்தெளி வாய்த்ததோர்
எந்தை யைக்கண்டு கொண்டதெ னுள்ளமே.

வெள்ளத் தார்விஞ்சை யார்கள் விரும்பவே
வெள்ளத் தைச்சடை வைத்த விகிர்தனார்
கள்ளத் தைக்கழி யம்மன மொன்றிநின்
றுள்ளத் தில்லொளி யைக்கண்ட துள்ளமே.

அம்மா னையமு தின்னமு தேயென்று
தம்மா னைத்தத்து வத்தடி யார்தொழும்
செம்மா னநிறம் போல்வதோர் சிந்தையுள்
எம்மா னைக்கண்டு கொண்டதெ னுள்ளமே.

கூறே றாம்முமை பாகமோர் பாலராய்
ஆறே றுஞ்சடை மேற்பிறை சூடுவர்
பாறே றுந்தலை யேந்திப் பலவிலம்
ஏறே றுமெந்தை யைக்கண்ட தெ னுள்ளமே. ௫

முன்னெஞ் சம்மின்றி மூர்க்கராய்ச் சாகின்றார்
தந்நெஞ் சந்தமக் குத்தா மிலாதவர்
வன்னெஞ் சம்மது நீங்குதல் வல்லீரே
என்னெஞ்சி லீசனைக் கண்டதெ னுள்ளமே. ௬

வென்றா னைப்புல னைந்துமென் றீவினை
கொன்றா னைக்குணத் தாலே வணங்கிட
நன்றா நன்மனம் வைத்திடு ஞானமாம்
ஒன்றா னைக்கண்டு கொண்டதெ னுள்ளமே. ௭

மருவி னைமட நெஞ்ச மனம்புகும்
குருவி னைக்குணத் தாலே வணங்கிடும்
திருவி னைச்சிந்தை யுட்சிவ னாய்நின்ற
உருவி னைக்கண்டு கொண்டதெ னுள்ளமே. ௮

தேச னைத்திரு மால்பிர மன்செயும்
பூச னைப்புண ரிற்புணர் வாயதோர்
நேச னைநெஞ்சி னுண்ணிறை வாய்நின்ற
ஈச னைக்கண்டு கொண்டதெ னுள்ளமே. ௯

வெறுத்தா னைம்புல னும்பிர மன்றலை
அறுத்தா னையரக் கன்கயி லாயத்தைக்
கறுத்தா னைக்காலி னில்விர லொன்றினால்
ஒறுத்தா னைக்கண்டு கொண்டதெ னுள்ளமே. ௰

திருச்சிற்றம்பலம்



பொது பதிகம் ௨௧௯

## பாவநாசத் திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பாவ மும்பழி பற்றற வேண்டுவீர்
ஆவி லஞ்சுகந் தாடு மவன்கழல்
மேவ ராய்மிக வும்மகிழ்ந் துள்குமின்
காவ லாளன் கலந்தருள் செய்யுமே. ௧

கங்கை யாடிலென் காவிரி யாடிலென்
கொங்கு தண்கும ரித்துறை யாடிலென்
ஒங்கு மாகட லோதநீ ராடிலென்
எங்கு மீசனெ ன்னாதவர்க் கில்லையே. ௨

பட்ட ராகிலென் சாத்திரங் கேட்கிலென்
இட்டு மட்டியு மீதொழில் பூணிலென்
எட்டு மொன்று மிரண்டு மறியிலென்
இட்ட மீசனென் னாதவர்க் கில்லையே. ௩

வேத மோதிலென் வேள்விகள் செய்கிலென்*
நீதி நூல்பல நித்தல் பயிற்றிலென்
ஓதி யங்கமோ ராறு முணரிலென்
ஈச னையுள்கு வார்க்கன்றி யில்லையே. ௪

காலை சென்று கலந்துநீர் மூழ்கிலென்
வேலை தோறும் விதிவழி நிற்கிலென்
ஆலை வேள்வி யடைந்தது வேட்கிலென்
ஏல வீசனென் பார்க்கன்றி யில்லையே. ௫

கான நாடு கலந்து திரியிலென்
ஈன மின்றி யிருந்தவஞ் செய்யிலென்
ஊனை யுண்ட லொழிந்துவா னோக்கிலென்
ஞான னென்பவர்க் கன்றிநன் கில்லையே.

(பா - ம்.) * சாத்திரங் கேட்கிலென்.

கூட வேடத்த ராகிக் குழுவிலென்
வாடி யூனை வருத்தித் திரியிலென்
ஆடல் வேடத்த னம்பலக் கூத்தனைப்
பாட லாளர்க்கல் லாற்பய னில்லையே.

நன்று நோற்கிலென் பட்டினி யாகிலென்
குன்ற மேறி யிருந்தவஞ் செய்யிலென்
சென்று நீரிற் குளித்துத் திரியிலென்
என்று மீசனென் பார்க்கன்றி யில்லையே

கோடி தீர்த்தங் கலந்து குளித்தவை
ஆடி னாலு மரனுக்கன் பில்லையேல்
ஓடு நீரினை யோட்டைக் குடத்தட்டி
மூடி வைத்திட்ட மூர்க்கனோ டொக்குமே.

மற்று நற்றவஞ் செய்து வருந்திலென்
பொற்றை யுற்றெடுத் தானுடல் புக்கிறக்
குற்ற நற்குரை யார்கழற் சேவடி
பற்றி லாதவர்க் குப்பய னில்லையே.

திருச்சிற்றம்பலம்





## ஆதிபுராணத் திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

வேத நாயகன் வேதியர் நாயகன்
மாதி னாயகன் மாதவர் நாயகன்
ஆதி நாயக னாதிரை நாயகன்
பூத நாயகன் புண்ணிய மூர்த்தியே.

செத்துச் செத்துப் பிறப்பதே தேவென்று
பத்தி செய்மனப் பாறைகட் கேறுமோ
அத்த னென்றரி யோடு பிரமனும்
துத்தி யஞ்செய நின்றநற் சோதியே. ௨

நூறு கோடி பிரமர்க ணொந்தினார்
ஆறு கோடி நாராயண ரங்ஙனே
ஏறு கங்கை மணலெண்ணி லிந்திரர்
ஈறி லாதவ னீச னொருவனே. ௩

வாது செய்து மயங்கு மனத்தராய்
ஏது சொல்லுவீ ராகிலு மேழைகாள்
யாதோர் தேவ ரெனப்படு வார்க்கெலாம்
மாதே வனலாற் றேவர்மற் றில்லையே. ௪

கூவ லாமை குரைகட லாமையைக்
கூவ லோடொக்கு மோகட லென்றல்போல்
பாவ காரிகள் பார்ப்பரி தென்பரால்
தேவ தேவன் சிவன்பெருந் தன்மையே. ௫

பேய்வ னத்தமர் வானைப் பிரார்த்தித்தார்க்
கீவ னையிமை யோர்முடி தன்னடிச்
சாய்வ னைச்சல வார்க டமக்குடற்
சீவ னைச்சிவ னைச்சிந்தி யார்களே. ௬

எரிபெ ருக்குவ ரவ்வெரி யீசன
துருவ ருக்கம தாவ துணர்கிலார்
அரிய யற்கரி யானை யயர்த்துப்போய்
நரிவி ருத்தம தாகுவர் நாடரே. ௭

அருக்கன் பாதம் வணங்குவ ரந்தியில்
அருக்க னாவா னரனுரு வல்லனோ
இருக்கு நான்மறை யீசனை யேதொழும்
கருத்தி னைநினை யார்கன் மனவரே. ௮

தாயி னுநல்ல சங்கர னுக்கன்பர்
ஆய வுள்ளத் தமுதருந் தப்பெறார்
பேயர் பேய்முலை யுண்டுயிர் போக்கிய
மாயன் மாயத்துப் பட்ட மனத்தரே. ௯

அரக்கன் வல்லரட் டாங்கொழித் தாருன்
பெருக்கச் செய்த பிரான்பெருந் தன்மையை
அருத்தி செய்தறி யப்பெறு கின்றிலர்
கருத்தி லாக்கய வக்கணத் தோர்களே. ௰

திருச்சிற்றம்பலம்



உ

திருச்சிற்றம்பலம்

திருநாவுக்கரசு சுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரப்பதிகங்கள்

# ஆறாந்திருமுறை

கோயில் பதிகம் உகரு

பெரிய திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

அரியானை யந்தணர்தஞ் சிந்தை யானை
யருமறையி னகத்தானை யணுவை யார்க்குந்
தெரியாத தத்துவனைத் தேனைப் பாலைத்
திகழொளியைத் தேவர்கடங் கோனை மற்றைக்
கரியானை நான்முகனைக் கனலைக் காற்றைக்
கனைகடலைக் குலவரையைக் கலந்து நின்ற
பெரியானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே.

கற்றானைக் கங்கைவார் சடையான் றன்னைக்
காவிரிசூழ் வலஞ்சுழியுங் கருதி னானை
அற்றார்க்கு மலந்தார்க்கு மருள்செய் வானை
யாரூரும் புகுவானை யறிந்தோ மன்றே
மற்றாருந் தன்னொப்பா ரில்லா தானை
வானவர்க ளெப்பொழுதும் வணங்கி யேத்தப்
பெற்றானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே.

கருமானி னுரியதளே யுடையா வீக்கிக்
கனைகழல்கள் கலந்தொலிப்ப வனல்கை யேந்தி
வருமானத் திரடோள்கண் மட்டித் தாட
வளர்மதியஞ் சடைக்கணிந்து மானேர் நோக்கி
அருமான வாண்முகத்தா ளமர்ந்து காண
வமரர்கண முடிவணங்க வாடு கின்ற
பெருமானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே.

அருந்தவர்க டொழுதேத்து மப்பன் றன்னை
யமரர்கடம் பெருமானை யரனை மூவா
மருந்தமரர்க் கருள்புரிந்த மைந்தன் றன்னை
மறிகடலுங் குலவரையும் மண்ணும் விண்ணுந்
திருந்தொளிய தாரகையுந் திசைக ளெட்டுந்
திரிசுடர்க ளோரிரண்டும் பிறவு மாய
பெருந்தகையைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே.

அருந்துணையை யடியார்த மல்ல றீர்க்கு
மருமருந்தை யகன்ஞாலத் தகத்துட் டோன்றி
வருந்துணையுஞ் சுற்றமும் பற்றும் விட்டு
வான்புலன்க ளகத்தடக்கி மடவா ரோடும்
பொருந்தணைமேல் வரும்பயனைப் போக மாற்றிப்
பொதுநீக்கித் தனைநினைய வல்லோர்க் கென்றும்
பெருந்துணையைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே.

கரும்பமரு மொழிமடவாள் பங்கன் றன்னைக்
கனவயிரக் குன்றனைய காட்சி யானை
அரும்பமரும் பூங்கொன்றைத் தாரான் றன்னை
யருமறையோ டாறங்க மாயி னானைச்
சுரும்பமருங் கடிபொழில்கள் சூழ்தென் னாரூர்ச்
சுடர்க்கொழுந்தைத் துளக்கில்லா விளக்கை மிக்க
பெரும்பொருளைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே.

வரும்பயனை யெழுநரம்பி னோசை யானை
　　வரைசிலையா வானவர்கண் முயன்ற வாளி
அரும்பயஞ்செ யவுணர்புர மெரியக் கோத்த
　　வம்மானை யலைகடனஞ் சயின்றான் றன்னைச்
சுரும்பமருங் குழன்மடவார் கடைக்க ணோக்கிற்
　　றுளங்காத சிந்தையராய்த் துறந்தோ ருள்ளப்
பெரும்பயனைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
　　பேசாத நாளெல்லாம் பிறவா நாளே.

காரானை யீருரிவைப் போர்வை யானைக்
　　காமருபூங் கச்சியே கம்பன் றன்னை
ஆரேனு மடியவர்கட் கணியான் றன்னை
　　யமரர்களுக் கறிவரிய வளவி லானைப்
பாரோரும் விண்ணோரும் பணிய நட்டம்
　　பயில்கின்ற பரஞ்சுடரைப் பரனை யெண்ணில்
பேரானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
　　பேசாத நாளெல்லாம் பிறவா நாளே.

முற்றாத பான்மதியஞ் சூடி னானை
　　மூவுலகுந் தானாய முதல்வன் றன்னைச்
செற்றார்கள் புரமூன்றுஞ் செற்றான் றன்னைத்
　　திகழொளியை மரகதத்தைத் தேனைப் பாலைக்
குற்றாலத் தமர்ந்துறையுங் குழகன் றன்னைக்
　　கூத்தாட வல்லானைக் கோனை ஞானம்
பெற்றானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
　　பேசாத நாளெல்லாம் பிறவா நாளே.

காரொளிய திருமேனிச் செங்கண் மாலுங்
　　கடிக்கமலத் திருந்தவனுங் காணா வண்ணஞ்
சீரொளிய தழற்பிழம்பாய் நின்ற தொல்லைத்
　　திகழொளியைச் சிந்தைதனை மயக்கந் தீர்க்கும்
ஏரொளியை யிருநிலனும் விசும்பும் விண்ணு
　　மேழுலகுங் கடந்தண்டத் தப்பா னின்ற
பேரொளியைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
　　பேசாத நாளெல்லாம் பிறவா நாளே.　　ய

திருச்சிற்றம்பலம்

நஅடு

**கோயில்** பதிகம் ௨கக

## புக்க திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

மங்குன் மதிதவழு மாட வீதி
மயிலாப்பி லுள்ளார் மருக லுள்ளார்
கொங்கிற் கொடுமுடியார் குற்றா லத்தார்
குடமூக்கி லுள்ளார்போய்க் கொள்ளம் பூதூர்த்
தங்கு மிடமறியார் சால நாளார்
தரும புரத்துள்ளார் தக்க ளூரார்
பொங்குவெண் ணீறணிந்து பூதஞ் சூழப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே.

நாக மரைக்கசைத்த நம்ப ரிந்நா
ணனிபள்ளி யுள்ளார்போய் நல்லூர்த் தங்கிப்
பாகப் பொழுதெலாம் பாசூர்த் தங்கிப்
பரிதி நியமத்தார் பன்னி ருநாள்
வேதமும் வேள்விப் புகையு மோவா
விரிநீர் மிழலை யெழுநாட் டங்கிப்
போகமும் பொய்யாப் பொருளு மானார்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே.

துறங்காட்டி யெல்லாம் விரித்தார் போலுந்
தூமதியும் பாம்பு முடையார் போலும்
மறங்காட்டி மும்மதிலு மெய்தார் போலு
மந்திரமுந் தந்திரமுந் தாமே போலும்
அறங்காட்டி யந்தணர்க்கன் றால நீழ
லறமருளிச் செய்த வரனா ரிங்காட்
புறங்காட் டெரியாடிப் பூதஞ் சூழப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே.

வாரேறு வனமுலையாள் பாக மாக
மழுவாள் கையேந்தி மயானத் தாடிச்
சீரேறு தண்வயல்சூ ழோத வேலித்
திருவாஞ் சியத்தார் திருநள் ளாற்றார்
காரேறு கண்டத்தார் காமற் காய்ந்த
கண்விளங்கு நெற்றியார் கடனஞ் சுண்டார்
போரேறு தாமேறிப் பூதஞ் சூழப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே.

காரார் கமழ்கொன்றைக் கண்ணி சூடிக்
கபாலங்கை யேந்திக் கணங்கள் பாட
ஊரா ரிடுபிச் சைகொண் டுழலு
முத்தமராய் நின்ற வொருவ னார்தாஞ்
சீரார் கழல்வணங்குந் தேவ தேவர்
திருவாரூர்த் திருமூலட் டான மேயார்
போரார் விடையேறிப் பூதஞ் சூழப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே.

காதார் குழையினர் கட்டங் கத்தர்
கயிலாய மாமலையார் காரோ ணத்தார்
மூதாயர் மூதாதை யில்லார் போலு
முதலு மிறுதியுந் தாமே போலும்
மாதாய மாதர் மகிழ வன்று
வன்மதவே டன்னுடலங் காய்ந்தா ரிந்நாட்
போதார் சடைதாழப் பூதஞ் சூழப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே.

இறந்தார்க்கு மென்று மிறவா தார்க்கு
மிமையவர்க்கு மேகமாய் நின்று சென்று
பிறந்தார்க்கு மென்றும் பிறவா தார்க்கும்
பெரியான்றன் பெருமையே பேச நின்று
மறந்தார் மனத்தென்று மருவார் போலு
மறைக்காட் டுறையு மழுவாட் செல்வர்
புறந்தார் சடைதாழப் பூதஞ் சூழப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே.

குலாவெண் டலைமாலை யென்பு பூண்டு
குளிர்கொன்றைத் தாரணிந்து கொல்லே றேறிக்
கலாவெங் களிற்றுரிவைப் போர்வை மூடிக்
கையோ டனலேந்திக் காடு றைவார்
நிலாவெண் மதியுரிஞ்ச நீண்ட மாட
நிறைவயல்சூழ் நெய்த்தான மேய செல்வர்
புலால்வெண் டலையேந்திப் பூதஞ் சூழப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே.

சந்தித்த கோவணத்தர் வெண்ணூன் மார்பர்
சங்கரனைக் கண்டீரோ கண்டோ மிந்நாட்
பந்தித்த வெள்விடையைப் பாய வேறிப்
படுதலையி லென்கொலோ வேந்திக் கொண்டு
வந்திங்கென் வெள்வளையுந் தாமு மெல்லா
மணியாரூர் நின்றந்தி கொள்ளக் கொள்ளப்
பொன்றீ மணிவிளக்குப் பூதம் பற்றப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே.

பாதங்க ணல்லார் பரவி யேத்தப்
பத்திமையாற் பணிசெய்யுந் தொண்டர் தங்கள்
ஏதங்க டீர விருந்தார் போலு
மெழுபிறப்பு மாளுடைய வீச னார்தாம்
வேதங்க ளோதியோர் வீணை யேந்தி
விடையொன்று தாமேறி வேத கீதர்
பூதங்கள் சூழப் புலித்தோல் வீக்கிப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே.

பட்டுடுத்துத் தோல்போர்த்துப் பாம்பொன் றார்த்துப்
பகவனார் பாரிடங்கள் சூழ நட்டஞ்
சிட்டராய்த் தீயேந்திச் செல்வார் தம்மைத்
தில்லைச்சிற் றம்பலத்தே கண்டோ மிந்நாள்
விட்டிலங்கு சூலமே வெண்ணூ லுண்டே
யோதுவதும் வேதமே வீணை யுண்டே
கட்டங்கங் கையதே சென்று காணீர்
கறைசேர் மிடற்றெங் கபாலி யார்க்கே.

திருச்சிற்றம்பலம்

## திருவதிகைவீரட்டானம் பதிகம் உகஎ

### ஏழைத் திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

வெறிவிரவு கூவிளநற் றொங்க லானை
வீரட்டத் தானைவெள் ளேற்றி னானைப்
பொறியரவி னானைப்புள் ளூர்தி யானைப்
பொன்னிறத்தி னானைப் புகழ்தக் கானை
அறிதற் கரியசீ ரம்மான் றன்னை
யதியரைய மங்கை யமர்ந்தான் றன்னை
எறிகெடிலத் தானை யிறைவன் றன்னை
யேழையே னான்பண் டிகழ்ந்த வாறே.

வெள்ளிக் குன்றன்ன விடையான் றன்னை
வில்வலான் வில்வட்டங் காய்ந்தான் றன்னைப்
புள்ளி வரிநாகம் பூண்டான் றன்னைப்
பொன்பிதிர்ந் தன்ன சடையான் றன்னை
வள்ளி வளைத்தோண் முதல்வன் றன்னை
வாரா வுலகருள வல்லான் றன்னை
எள்க விடுபிச்சை யேற்பான் றன்னை
யேழையே னான்பண் டிகழ்ந்த வாறே.

மூந்தி யுலகம் படைத்தான் றன்னை
மூவா முதலாய மூர்த்தி தன்னைச்
சந்தவெண் டிங்க ளணிந்தான் றன்னைத்
தவநெறிகள் சாதிக்க வல்லான் றன்னைச்
சிந்தையிற் றீர்வினையைத் தேனைப் பாலைச்
செழுங்கெடில வீரட்ட மேவி னானை
எந்தை பெருமானை யீசன் றன்னை
யேழையே னான்பண் டிகழ்ந்த வாறே.

மந்திரமு மறைப்பொருளு மானான் றன்னை
மதியமு ஞாயிறுங் காற்றுந் தீயும்
அந்தரமு மலைகடலு மானான் றன்னை
யதியரைய மங்கை யமர்ந்தான் றன்னைக்
கந்தருவஞ் செய்திருவர் கழல்கை கூப்பிக்
கடிமலர்கள் பலதூவிக் காலை மாலை
இந்திரனும் வானவருந் தொழச்செல் வானை
யேழையே னன்பண் டிகழ்ந்த வாறே.

ஒருபிறப்பி லெனடியை யுணர்ந்துங் காணா
ருயர்கதிக்கு வழிதேடிப் போக மாட்டார்
வருபிறப்பொன் றுணராது மாசு பூசி
வழிகாணா தவர்போல்வார் மனத்த னாகி
அருபிறப்பை யறுப்பிக்கு மதிகை யூர
னம்மான்ற னடியிணையே யணைந்து வாழா
திருபிறப்பும் வெறுவியரா யிருந்தார் சொற்கேட்
டேழையே னன்பண் டிகழ்ந்த வாறே.

ஆறேற்க வல்ல சடையான் றன்னை
யஞ்சனம் போலு மிடற்றான் றன்னைக்
கூறேற்கக் கூறமர வல்லான் றன்னைக்
கோல்வளைக்கை மாதராள் பாகன் றன்னை
நீறேற்கப் பூசு மகலத் தானை
நின்மலன் றன்னை நிமலன் றன்னை
ஏறேற்க வேறுமா வல்லான் றன்னை
யேழையே னன்பண் டிகழ்ந்த வாறே.

குண்டாக்க னாயுழன்று கையி லுண்டு
குவிமுலையார் தம்முன்னே நாண மின்றி
உண்டியுகந் தமணே நின்றார் சொற்கேட்
டுடனாகி யுழிதந்தே னுணர்வொன் றின்றி
வண்டுலவு கொன்றையங் கண்ணி யானை
வானவர்க ளேத்தப் படுவான் றன்னை
எண்டிசைக்கு மூர்த்தியாய் நின்றான் றன்னை
யேழையே னன்பண் டிகழ்ந்த வாறே.

உறிமுடித்த குண்டிகைதங் கையிற் றூக்கி
　　மூத்தைவாய்ச் சமணர்க்கோர் குண்டாக் கனாய்க்
கறிவிரவு நெய்சோறு கையி லுண்டு
　　கண்டார்க்குப் பொல்லாத காட்சி யானேன்
மறிதிரைநீர்ப் பவ்வநஞ் சுண்டான் றன்னை
　　மறித்தொருகால் வல்வினையே னினைக்க மாட்டேன்
எறிகெடில நாடர் பெருமான் றன்னை
　　யேழையே னான்பண் டிகழ்ந்த வாறே. ௮

நிறைவார்ந்த நீர்மையாய் நின்றான் றன்னை
　　நெற்றிமேற் கண்ணொன் றுடையான் றன்னை
மறையானை மாசொன் றிலாதான் றன்னை
　　வானவர்மேன் மலரடியை வைத்தான் றன்னைக்
கறையானைக் காதார் குழையான் றன்னைக்
　　கட்டங்க மேந்திய கையி னானை
இறையானை யெந்தை பெருமான் றன்னை
　　யேழையே னான்பண் டிகழ்ந்த வாறே. ௯

தொல்லைவான் சூழ்வினைகள் சூழப் போந்து
　　தூற்றியே னாற்றியேன் சுடராய் நின்று
வல்லையே யிடர்தீர்த்திங் கடிமை கொண்ட
　　வானவர்க்குந் தானவர்க்கும் பெருமான் றன்னைக்
கொல்லைவாய்க் குருந்தொசித்துக் குழலு மூதுங்
　　கோவலனு நான்முகனுங் கூடி யெங்கும்
எல்லைகாண் பரியானை யெம்மான் றன்னை
　　யேழையே னான்பண் டிகழ்ந்த வாறே. ௰

முலைமறைக்கப் பட்டுநீ ராடாப் பெண்கண்
　　முறைமுறையா னந்தெய்வ மென்று தீண்டித்
தலைபறிக்குந் தன்மையர்க ளாகி நின்று
　　தவமேயென் றவஞ்செய்து தக்க தோரார்

மலைமறிக்கச் சென்ற விலங்கைக் கோனை
மதனழியச் செற்றசே வடியி னானை
இலைமறித்த கொன்றையந் தாரான் றன்னை
யேழையே னான்பண் டிகழ்ந்த வாறே. கக

திருச்சிற்றம்பலம்

**பதிக வரலாறு:**

*தாண்டகத் தலைவராகிய தவமுனிவர் சமணர் தம்மைச் செய்த தீய மிறைகளையெல்லாம் இறைவ னின்னருளால் இகந்து திருப்பாதிரிப் புலியூரை வணங்கிப்பாடித் தம்மை யாண்டருளிய வீரட்டானப் பெருமானை வணங்க விரும்பித் திருக்கெடில ஆற்றைக் கடந்து திருவதிகையை யடைந்து செம்பவளவண்ணச் சிவபெருமானது திருக்கோயிலைச் சேர்ந்து தம்மையுடைய பிரானை யிறைஞ்சி நயப்புறுகாதலிற் றிளைத்துத் தம் பரிவால் 'ஏழையேனான் பண்டிகழ்ந்த'து என்று இத் திருத்தாண்டகத்தை யருளிச்செய்து வாழ்வடைந்திருந்தார்.*



## திருவதிகைவீரட்டானம் பதிகம் உகஅ

### அடையாளத் திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

சந்திரனை மாகங்கை திரையான் மோதச்
சடாமகுடத் திருத்துமே சாம வேத
கந்தருவம் விரும்புமே கபால மேந்து
கையனே மெய்யனே கனக மேனிப்
பந்தணவு மெல்விரலாள் பாக னாமே
பசுவேறு மேபரம யோகி யாமே
ஐந்தலைய மாசுணங்கொண் டரையார்க் கும்மே
யவனாகி லதிகைவீ ரட்ட னாமே.

பாதத் தணையுஞ் சிலம்பர் போலும்
பாரூர் விடையொன் றுடையார் போலும்
பூதப் படையாள் புனிதர் போலும்
பூம்புகலூர் மேய புராணர் போலும்
வேதப் பொருளாய் விளைவார் போலும்
வேடம் பரவித் திரியுந் தொண்டர்
ஏதப் படாவண்ண நின்றார் போலு
மின்னம்பர்த் தான்றோன்றி யீச னாரே.

பல்லார் தலையோட்டி லூணார் போலும்
பத்தர்கடஞ் சித்தத் திருந்தார் போலும்
கல்லாதார் காட்சிக் கரியார் போலுங்
கற்றவர்க ளேதங் களைவார் போலும்
பொல்லாத பூதப் படையார் போலும்
பொருகடலு மேழ்மலையுந் தாமே போலும்
எல்லாரு மேத்தத் தகுவார் போலு
மின்னம்பர்த் தான்றோன்றி யீச னாரே.

மட்டு மலியுஞ் சடையார் போலு
மாதையோர் பாக முடையார் போலும்
கட்டம் பிணிக டவிர்ப்பார் போலுங்
காலன்றன் வாணாள் கழிப்பார் போலும்
நட்டம் பயின்றாடு நம்பர் போலு
ஞாலமெரி நீர்வெளிகா லானார் போலும்
எட்டுத் திசைகளுந் தாமே போலு
மின்னம்பர்த் தான்றோன்றி யீச னாரே.

கருவுற்ற காலத்தே யென்னை யாண்டு
கழற்போது தந்தளித்த கள்வர் போலும்
செருவிற் புரமூன்று மட்டார் போலும்
தேவர்க்குந் தேவராஞ் செல்வர் போலும்
மருவிப் பிரியாத மைந்தர் போலு
மலரடிக ளாடி வணங்க லுற்ற
இருவர்க் கொருவராய் நின்றார் போலு
மின்னம்பர்த் தான்றோன்றி யீச னாரே.

அலங்கற் சடைதாழ வைய மேற்று
வரவ மரையார்க்க வல்லார் போலும்
வலங்கை மழுவான் றுடையார் போலும்
வான்றக்கன் வேள்வி சிதைத்தார் போலும்
விலங்க லெடுத்துகந்த வெற்றி யானை
விறலழித்து மெய்ந்நரம்பாற் கீதங் கேட்டன்
றிலங்கு சுடர்வாள் கொடுத்தார் போலு
மின்னம்பர்த் தான்றோன்றி யீச னாரே.

திருச்சிற்றம்பலம்



## திருக்கஞ்சனூர்

பதிகம் ௩௱௯௪

### திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

மூவிலைநற் சூலம்வல னேந்தி னானை
மூன்றுசுடர்க் கண்ணானை மூர்த்தி தன்னை
நாவலனை நரைவிடையொன் றேறு வானை
நால்வேத மாறங்க மாயி னானை
ஆவினிலைந் துகந்தானை யமரர் கோவை
யயன்றிருமா லானானை யனலோன் போற்றும்
காவலனைக் கஞ்சனூ ராண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே.

தலையேந்து கையானை யென்பார்த் தானைச்
சவந்தாங்கு தோளானைச் சாம்ப லானைக்
குலையேறு நறுங்கொன்றை முடிமேல் வைத்துக்
கோணாக மசைத்தானைக் குலமாங் கைலை

மலையானை மற்றொப்பா ரில்லா தானை
மதிகதிரும் வானவரு மாலும் போற்றும்
கலையானைக் கஞ்சனூ ராண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே. ௨

தொண்டர்குழாந் தொழுதேத்த வருள்செய் வானைச்
சுடர்மழுவாட் படையானைச் சுழிவான் கங்கைத்
தெண்டிரைகள் பொருதிழிசெஞ் சடையி னானைச்
செக்கர்வா னொளியானைச் சேரா தெண்ணிப்
பண்டமரர் கொண்டுகந்த வேள்வி யெல்லாம்
பாழ்படுத்துத் தலையறுத்துப் பற்கண் கொண்ட
கண்டகனைக் கஞ்சனூ ராண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே. ௩

விண்ணவனை மேருவில்லா வுடையான் றன்னை
மெய்யாகிப் பொய்யாகி விதியா னானைப்
பெண்ணவனை யாணவனைப் பித்தன் றன்னைப்
பிணமிடுகா டுடையானைப் பெருந்தக் கோனை
எண்ணவனை யெண்டிசையுங் கீழு மேலு
மிருவிசும்பு மிருநிலமு மாகித் தோன்றும்
கண்ணவனைக் கஞ்சனூ ராண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே. ௪

உருத்திரனை யுமாபதியை யுலகா னானை
யுத்தமனை நித்திலத்தை யொருவன் றன்னைப்
பருப்பதத்தைப் பஞ்சவடி மார்பி னானைப்
பகலிரவாய் நீர்வெளியாய்ப் பரந்து நின்ற
நெருப்பதனை நித்திலத்தின் றொத்தொப் பானை
நீறணிந்த மேனியராய் நினைவார் சிந்தைக்
கருத்தவனைக் கஞ்சனூ ராண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே. ௫

ஏடேறு மலர்க்கொன்றை யரவு தும்பை
யிளமதிய மெருக்குவா னிழிந்த கங்கை
சேடேறிந்த சடையானைத் தேவர் கோவைச்
செம்பொன்மால் வரையானைச் சேர்ந்தார் சிந்தைக்
கேடிலியைக் கீழ்வேளு ராளுங் கோவைக்
கிறிபேசி மடவார்பெய் வளைகள் கொள்ளும்
காடவனைக் கஞ்சனூ ராண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே.

நாரணனு நான்முகனு மறியா தானை
நால்வேதத் துருவானை நம்பி தன்னைப்
பாரிடங்கள் பணிசெய்யப் பலிகொண் டுண்ணும்
பால்வணனைத் தீவணனைப் பகலா னானை
வார்பொதியு முலையாளோர் கூறன் றன்னை
மானிடங்கை யுடையானை மலிவார் கண்டம்
கார்பொதியுங் கஞ்சனூ ராண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே.

வானவனை வலிவலமு மறைக்காட் டானை
மதிசூடும் பெருமானை மறையோன் றன்னை
ஏனவனை யிமவான்றன் பேதை யோடு
மினிதிருந்த பெருமானை யேத்து வார்க்குத்
தேனவனைத் தித்திக்கும் பெருமான் றன்னைத்
தீதிலா மறையவனைத் தேவர் போற்றும்
கானவனைக் கஞ்சனூ ராண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே.

நெருப்புருவு திருமேனி வெண்ணீற் றானை
நினைப்பார்த நெஞ்சானை நிறைவா னானைத்
தருக்கழிய முயலகன்மேற் றுள்ளைத் தானைச்
சலந்தரனைத் தடிந்தோனைத் தக்கோர் சிந்தை
விருப்பவனை விதியானை வெண்ணீற் றானை
விளங்கொளியாய் மெய்யாகி மிக்கோர் போற்றும்
கருத்தவனைக் கஞ்சனூ ராண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே.

மடலாழித் தாமரையா யிரத்தி லொன்று
மலர்க்கணிடந் திடுதலுமே மலிவான் கோலச்
சுடராழி நெடுமாலுக் கருள்செய் தானைத்
தும்பியுரி போர்த்தானைத் தோழன் விட்ட
அடலாழித் தேருடைய விலங்கைக் கோனை
யருவரைக்கீ ழடர்த்தானை யருளார் கருணைக்
கடலானைக் கஞ்சனூ ராண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே.

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - அக்கினீசுரர்; இறைவி - கற்பகநாயகி.





## திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

பன்னியசெந் தமிழறியேன் கவியேன் மாட்டே
னெண்ணோடு பண்ணிறைந்த கலைக ளாய
தன்னையுந்தன் றிறத்தறியாப் பொறியி லேனைத்
தன்றிறமு மறிவித்து நெறியுங் காட்டி
அன்னையையு மத்தனையும் போல வன்பா
யடைந்தேனைத் தொடர்ந்தென்னை யாளாக் கொண்ட
தென்னெறும்பி யூர்மலைமேன் மாணிக் கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றே னேனே.

பளிங்கினிழ லுட்பதித்த சோதி யானைப்
பசுபதியைப் பாசுபத வேடத் தானை
விளிந்தெழுந்த சலந்தரனை வீட்டி னானை
வேதியனை விண்ணவனை மேவி வையம்
அளந்தவனை நான்முகனை யல்ல றீர்க்கு
மருமருந்தை யாமாற றிந்தெ னுள்ளம்
தெளிந்தெறும்பி யூர்மலைமேன் மாணிக் கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றே னானே.

கருவையென்றன் மனத்திருந்த கருத்தை ஞானக்
கடுஞ்சுடரைப் படிந்துகிடந் தமர ரேத்தும்
உருவையண்டத் தொருமுதலை யோத வேலி
யுலகினிறை தொழிலிறுதி நடுவாய் நின்ற
மருவைவென்ற குழன்மடவாள் பாகம் வைத்த
மயானத்து மாசிலா மணியை வாசத்
திருவெறும்பி யூர்மலைமேன் மாணிக் கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றே னானே.

பகழிபொழிந் தடலரக்கர் புரங்கண் மூன்றும்
பாழ்படுத்த பரஞ்சுடரைப் பரிந்து தன்னைப்
புகழுமன்பர்க் கின்பமரு மமுதைத் தேனைப்
புண்ணியனைப் புவனியது முழுதும் போத
உமிழுமம்பொற் குன்றத்தை முத்தின் றாணை
யுமையவடம் பெருமானை யிமையோ ரேத்தும்
திகழெறும்பி யூர்மலைமேன் மாணிக் கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றே னானே.

பாரிடங்க ளுடன்பாடப் பயின்று நட்டம்
பயில்வானை யயில்வாய சூல மேந்தி
நேரிடும்போர் மிகவல்ல நிமலன் றன்னை
நின்மலனை யம்மலர்கொண் டயனு மாலும்
பாரிடந்து மேலுயர்ந்துங் காணா வண்ணம்
பரந்தானை நிமிர்ந்துமுனி கணங்க ளேத்தும்
சீரெறும்பி யூர்மலைமேன் மாணிக் கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றே னானே. ၉

சுசீசு

கார்முகிலாய்ப் பொழிவானைப் பொழிந்த முன்னீர்
கரப்பானைக் கடியநடை விடையொன் றேறி
ஊர்பலவுந் திரிவானை யூர தாக
வொற்றியூ ருடையனை முற்று மாண்டு
பேரெழுத்தொன் றுடையானைப் பிரம னோடு
மாலவனு மிந்திரனு மந்திரத்தா லேத்தும்
சீரெறும்பி யூர்மலைமேன் மாணிக் கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றே னேனே.

நீணிலவு மந்தியு நீரு மற்றை
நெறியிலங்கு மிருகாலு மாகா சமும்
வாணிலவு தாரகையு மண்ணும் விண்ணு
மன்னுயிரு மென்னுயிருந் தானாஞ் செம்பொன்
ஆணியென்று மஞ்சனமா மலையே யென்று
மம்பவளத் திரளென்று மறிந்தோ ரேத்தும்
சேணெறும்பி யூர்மலைமேன் மாணிக் கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றே னேனே.

அறந்தெரியா வூத்தைவா யறிவில் சிந்தை
யாரம்பக் குண்டரோ டயர்த்து நாளும்
மறந்துமரன் றிருவடிக ளினைய மாட்டா
மதியிலியேன் வாழ்வெலாம் வாளா மண்மேல்
பிறந்தநா ளுளல்ல வாளா விசன்
பேர்பிதற்றிச் சீரடிமைத் திறத்து ளன்பு
செறிந்தெறும்பி யூர்மலைமேன் மாணிக் கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றே னேனே.

அறிவிலங்கு மனத்தானை யறிவார்க் கன்றி
யறியாதார் தந்திரத்தொன் றறியா தானைப்
பொறியிலங்கு வாளரவம் புனைந்து பூண்ட
புண்ணியனைப் பொருதிரைவாய் நஞ்ச முண்ட
குறியிலங்கு மிடற்றானை மடற்றேன் கொன்றைச்
சடையானை மடைதோறுங் கமல மென்பூச்
செறியெறும்பி யூர்மலைமேன் மாணிக் கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றே னேனே.

அருந்தவத்தின் பெருவலியா லறிவ தன்றி
    யடலரக்கன் றடவரையை யெடுத்தான் றிண்டோள்
முரிந்துநெரிந் தழிந்துபா தாள முற்று
    முன்கைநரம் பினையெடுத்துக் கீதம் பாட
இருந்தவனை யேழுலகு மாக்கி னானை
    யெம்மானைக் கைம்மாவி னுரிவை போர்த்த
திருந்தெறும்பி யூர்மலைமேன் மாணிக் கத்தைச்
    செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றே னேனே. ௰

திருச்சிற்றம்பலம்



## திருக்கழுக்குன்றம் பதிகம் ௫௱௬

திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

மூவிலைவேற் கையானை மூர்த்தி தன்னை
    முதுபிணக்கா டுடையானை முதலா னானை
ஆவினிலைந் துகந்தானை யமரர் கோனை
    யாலால முண்டுகந்த வையன் றன்னைப்
பூவினின்மே னான்முகனு மாலும் போற்றப்
    புணர்வரிய பெருமானைப் புனிதன் றன்னைக்
காவலனைக் கழுக்குன்ற மமர்ந்தான் றன்னைக்
    கற்பகத்தைக் கண்ணாரக் கண்டே னேனே.

பல்லாடு தலைசடைமே லுடையான் றன்னைப்
    பாய்புலித்தோ லுடையானைப் பகவன் றன்னைச்
சொல்லோடு பொருளனைத்து மானான் றன்னைச்
    சுடருருவி லென்பாராக் கோலத் தானை
அல்லாத காலனைமுன் னடர்த்தான் றன்னை
    யாலின்கீ ழிருந்தானை யமுதா னானைக்
கல்லாடை புனைந்தருளுங் காபா லியைக்
    கற்பகத்தைக் கண்ணாரக் கண்டே னேனே.

* * * * *. ௩

* * * * *. ௪

* * * * *. ௫

* * * * *. ௬

* * * * *. ௭

* * * * *. ௮

* * * * *. ௯

* * * * *. ௰

திருச்சிற்றம்பலம்

இது தொண்டைநாட்டிலுள்ளது.

இறைவன் - வேதகிரீசுவரர்; இறைவி - பெண்ணினல்லாள்.





## பலவகைத் திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

நேர்ந்தொருத்தி யொருபாகத் தடங்கக் கண்டு
நிலைதளர வாயிரமா முகத்தி னோடு
பாய்ந்தொருத்தி படர்சடைமேற் பயிலக் கண்டு
படவரவும் பனிமதியும் வைத்த செல்வர்
தாந்திருத்தித் தம்மனத்தை யொருக்காற் றொண்டர்
தனித்தொருதண் டூன்றிமெய் தளரா முன்னம்
பூந்துருத்தி பூந்துருத்தி யென்பீ ராகிற்
பொல்லாப் புலாற்றுருத்தி போக்க லாமே.

ஐத்தானத் தகமிடறு சுற்றி யாங்கே
யகத்தடைந்தா லியாதொன்று மிடுவா ரில்லை
மைத்தானக் கண்மடவார் தங்க ளோடு
மாயமனை வாழ்க்கை மகிழ்ந்து வாழ்வீர்
பைத்தானத் தொண்மதியும் பாம்பு நீரும்
படர்சடைமேல் வைத்துகந்த பண்பன் மேய
நெய்த்தான நெய்த்தான மென்பீ ராகி
னிலாவாப் புலாற்றனை நீக்க லாமே.

பொய்யாறு வாறே புனைந்து பேசிப்
புலர்ந்தெழுந்த காலைப் பொருளே தேடிக்
கையாறுக் கரண முடையோ மென்று
களித்த மனத்தராய்க் கருதி வாழ்வீர்
நெய்யாறு வாடிய நீல கண்டர்
கிமிர்புன் சடைநெற்றிக் கண்ணர் மேய
ஐயாறே யையாறே யென்பீ ராகி
லல்லறீர்ந் தமருலக மாள லாமே.

இழவொன்று தாமொருவர்க் கிட்டொன் றீயா
ரீன்றெடுத்த தாய்தந்தை பெண்டீர் மக்கள்
கழனங்கோ வையாதல் கண்டுந் தேறார்
களித்த மனத்தராய்க் கருதி வாழ்வீர்
அழனம்மை நீக்குவிக்கு மரைய னுக்கு
மமருலக மாள்விக்கு மம்மான் மேய
பழனம் பழனமே யென்பீ ராகிற்
பயின்றெழுந்த பழவினைநோய் பாற்ற லாமே.

ஊற்றுத் துறையொன்ப துண்ணின் றோரீ
ரொக்க வடைக்கும்போ துணர மாட்டீர்
மாற்றுத் துறைவழிகொண் டோடா முன்ன
மாய மனைவாழ்க்கை மகிழ்ந்து வாழ்வீர்
வேற்றுத் தொழில்பூண்டார் புரங்கண் மூன்றும்
வெவ்வழல்வாய் வீழ்விக்கும் வேந்தன் மேய
சோற்றுத்துறை சோற்றுத்துறை யென்பீ ராகிற்
றுயர்நீங்கித் தூநெறிக்கட் சேர லாமே.

கலஞ்சுழிக்குங் கருங்கடல்சூழ் வையந் தன்னிற்
    கள்ளக் கடலி லழுந்தி வாளா
நலஞ்சுழியா வெழுநெஞ்சே யின்பம் வேண்டி
    னம்பன்ற னடியிணைக்கே நவில்வா யாகில்
அலஞ்சுழிக்கு மன்னுகந் தன்னன் மேய
    வருமறையோ டாறங்க மானூர் கோயில்
வலஞ்சுழியே வலஞ்சுழியே யென்பீ ராகில்
    வல்வினைக டீர்ந்துவா னாள லாமே.

தண்டி குண்டோ தரன்பிங் கிருடி
    சார்ந்த புகழ்நந்தி சங்கு கன்னன்
பண்டை யுலகம் படைத்தான் றானும்
    பாரை யளந்தான் பல்லாண் டிசைப்பத்
திண்டி வயிற்றுச் சிறுகட் பூதஞ்
    சிலபாடச் செங்கண் விடையொன் றூர்வான்
கண்டியூர் கண்டியூ ரென்பீ ராகிற்
    கடுகநும் வல்வினையைக் கழற்ற லாமே.

விடமூக்கப் பாம்பேபோற் சிந்தி நெஞ்சே
    வெள்ளேற்றான் றன்றமரைக் கண்ட போது
வடமூக்க மாமுனிவர் போலச் சென்று
    மாதவத்தார் மனத்துளார் மழுவாட் செல்வர்
படமூக்கப் பாம்பணையிற் பள்ளி யானும்
    பங்கயத்து மேலயனும் பரவிக் காணக்
குடமூக்கே குடமூக்கே யென்பீ ராகிற்
    கொடுவினைக டீர்ந்தரனைக் குறுக லாமே.

தண்காட்டச் சந்தனமுந் தவள நீறுந்
    தழையணுகுங் குறுங்கொன்றை மாலை சூடிக்
கண்காட்டாக் கருவரைபோ லனைய காஞ்சிக்
    கார்மயிலஞ் சாயலார் கலந்து காண
எண்காட்டாக் காடங் கிடமா நின்று
    வெரிவீசி யிரவாடு மிறைவர் மேய
வெண்காடே வெண்காடே யென்பீ ராகில்
    வீடாத வல்வினைநோய் வீட்ட லாமே.

தந்தையார் தாயா ருடன்பி றந்தார்
தாரமார் புத்திரரார் தாந்தா மாரே
வந்தவா றெங்ஙனே போமா றேதோ
மாயமா மிதற்கேது மகிழ வேண்டாம்
சிந்தையீ ருமக்கொன்று சொல்லக் கேண்மின்
றிகழ்மதியும் வாளரவுந் திளைக்குஞ் சென்னி
எந்தையார் திருநாம நமச்சி வாய
வென்றெழுவார்க் கிருவிசும்பி லிருக்க லாமே.

திருச்சிற்றம்பலம்



பொது பதிகம் ௯௱௮

நின்ற திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி
யியமான னாயெறியுங் காற்று மாகி
அருநிலைய திங்களாய் ஞாயி றாகி
யாகாச மாயட்ட மூர்த்தி யாகிப்
பெருநலமுங் குற்றமும் பெண்ணு மாணும்
பிறருருவுந் தம்முருவுந் தாமே யாகி
நெருநலையா யின்றாகி நாளை யாகி
நிமிர்புன் சடையடிக ணின்ற வாறே.

மண்ணாகி விண்ணாகி மலையு மாகி
வயிரமுமாய் மாணிக்கந் தானே யாகிக்
கண்ணாகிக் கண்ணுக்கோர் மணியு மாகிக்
கலையாகிக் கலைஞானந் தானே யாகிப்
பெண்ணாகிப் பெண்ணுக்கோ ராணு மாகிப்
பிரளயத்துக் கப்பாலோ ரண்ட மாகி
எண்ணாகி யெண்ணுக்கோ ரெழுத்து மாகி
யெழுஞ்சுடரா யெம்மடிக ணின்ற வாறே.

கல்லாகிக் களருகிக் கானு மாகிக்
　　காவிரியாய்க் காலாருய்க் கழியு மாகிப்
புல்லாகிப் புதலாகிப் பூடு மாகிப்
　　புரமாகிப் புரமூன்றுங் கெடுத்தா ளுகிச்
சொல்லாகிச் சொல்லுக்கோர் பொருளு மாகிச்
　　சுலாவாகிச் சுலாவுக்கோர் சூழ லாகி
நெல்லாகி நிலனுகி நீரு மாகி
　　நெடுஞ்சுடராய் நிமிர்ந்தடிக ணின்ற வாறே.

காற்றுகிக் கார்முகிலாய்க் கால மூன்றுய்க்
　　கனவாகி நனவாகிக் கங்கு லாகிக்
கூற்றுகிக் கூற்றுதைத்த கொல்களிறு மாகிக்
　　குரைகடலாய்க் குரைகடற்கோர் கோமா னுமாய்
நீற்றுனாய் நீறேற்ற மேனி யாகி
　　நீள்விசும்பாய் நீள்விசும்பி னுச்சி யாகி
ஏற்றுனு யேறூர்ந்த செல்வ னுகி
　　யெழுஞ்சுடரா யெம்மடிக ணின்ற வாறே.

தீயாகி நீராகித் திண்மை யாகித்
　　திசையாகி யத்திசைக்கோர் தெய்வ மாகித்
தாயாகித் தந்தையாய்ச் சார்வு மாகித்
　　தாரகையு ஞாயிறுந் தண்மதியு மாகிக்
காயாகிப் பழமாகிப் பழத்தி னின்ற
　　விரதங்க ளுகர்வானுந் தானே யாகி
நீயாகி நானுகி நேர்மை யாகி
　　நெடுஞ்சுடராய் நிமிர்ந்தடிக ணின்ற வாறே.

அங்கமா யாதியாய் வேத மாகி
　　யருமறையோ டைம்பூதந் தானே யாகிப்
பங்கமாய்ப் பலசொல்லுந் தானே யாகிப்
　　பான்மதியோ டாதியாய்ப் பான்மை யாகிக்
கங்கையாய்க் காவிரியாய்க் கன்னி யாகிக்
　　கடலாகி மலையாகிக் கழியு மாகி
எங்குமா யேறூர்ந்த செல்வ னுகி
　　யெழுஞ்சுடரா யெம்மடிக ணின்ற வாறே.

மாதா பிதாவாகி மக்க ளாகி
மறிகடலு மால்விசும்புந் தானே யாகிக்
கோதா விரியாய்க் குமரி யாகிக்
கொல்புலித்தோ லாடைக் குழக னாகிப்
போதாய மலர்கொண்டு போற்றி நின்று
புனைவார் பிறப்பறுக்கும் புனித னாகி
யாதானு மெனநினைந்தார்க் கெளிதே யாகி
யழல்வண்ண வண்ணர்தா நின்ற வாறே.

ஆவாகி யாவினி லைந்து மாகி
யறிவாகி யழலாகி யவியு மாகி
நாவாகி நாவுக்கோ ருரையு மாகி
நாதனாய் வேதத்தி னுள்ளோ னாகிப்
பூவாகிப் பூவுக்கோர் நாற்ற மாகிப்
புக்குளால் வாசமாய் நின்றா னாகித்
தேவாகித் தேவர் முதலு மாகிச்
செழுஞ்சுடராய்ச் சென்றடிக ணின்ற வாறே.

நீராகி நீளகலந் தானே யாகி
நிழலாகி நீள்விசும்பி னுச்சி யாகிப்
பேராகிப் பேருக்கோர் பெருமை யாகிப்
பெருமதில்கண் மூன்றினையு மெய்தா னாகி
ஆரேனுந் தன்னடைந்தார் தம்மை யெல்லா
மாட்கொள்ள வல்லவெம் மீச னார்தாம்
பாராகிப் பண்ணாகிப் பாட லாகிப்
பரஞ்சுடராய்ச் சென்றடிக ணின்ற வாறே.

மாலாகி நான்முகனாய் மாபூ தமாய்
மருக்கமா யருக்கமாய் மகிழ்வு மாகிப்
பாலாகி யெண்டிசைக்கு மெல்லை யாகிப்
பரப்பாகிப் பரலோகந் தானே யாகிப்
பூலோக புவலோக சுவலோ கமாய்ப்
பூதங்களாய்ப் புராணன் றானே யாகி
ஏலா தனவெல்லா மேல்விப் பானா
யெழுஞ்சுடரா யெம்மடிக ணின்ற வாறே.

திருச்சிற்றம்பலம்

பொது பதிகம் ௬௱௭௯

## தனித் திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

அப்பனீ யம்மைநீ யைய னுநீ
  யன்புடைய மாமனு மாமி யுநீ
ஒப்புடைய மாதரு மொண்பொரு ளுநீ
  யொருகுலமுஞ் சுற்றமு மோரூ ருநீ
துய்ப்பனவு முய்ப்பனவுந் தோற்று வாய்நீ
  துணையா யென்னெஞ்சந் துறப்பிப் பாய்நீ
இப்பொன்னீ யிம்மணிநீ யிம்முத் துநீ
  யிறைவனீ யேறூர்ந்த செல்வ னீயே.

வெம்பவரு கிற்பதன்று கூற்ற நம்மேல்
  வெய்யவினைப் பகையும் பைய நையும்
எம்பரிவு தீர்ந்தோ மிடுக்க ணில்லோ
  மெங்கெழிலென் ஞாயி றெளியோ மல்லோம்
அம்பவளச் செஞ்சடைமே லாறு சூடி
  யனலாடி யானஞ்சு மாட்டு கந்த
செம்பவள வண்ணர் செங்குன்ற வண்ணர்
  செவ்வான வண்ணரென் சிந்தை யாரே.

ஆட்டுவித்தா லாரொருவ ராடா தாரே
  யடங்குவித்தா லாரொருவ ரடங்கா தாரே
ஓட்டுவித்தா லாரொருவ ரோடா தாரே
  யுருகுவித்தா லாரொருவ ருருகா தாரே
பாட்டுவித்தா லாரொருவர் பாடா தாரே
  பணிவித்தா லாரொருவர் பணியா தாரே
காட்டுவித்தா லாரொருவர் காணா தாரே
  காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக் காலே.

நற்பதத்தார் நற்பதமே ஞான மூர்த்தீ
நலஞ்சுடரே நால்வேதத் தப்பா னின்ற
சொற்பதத்தார் சொற்பதமுங் கடந்து நின்ற
சொலற்கரிய சூழலா யிதுவுன் றன்மை
நிற்பதொத்து நிலையிலா நெஞ்சந் தன்னு
ணிலாவாத புலாலுடம்பே புகுந்து நின்ற
கற்பகமே யானுன்னை விடுவே னல்லேன்
கனகமா மணிநிறத்தெங் கடவு ளானே.

திருக்கோயி லில்லாத திருவி லூருந்
திருவெண்ணீ றணியாத திருவி லூரும்
பருக்கோடிப் பத்திமையாற் பாடா வூரும்
பாங்கினொடு பலதளிக ளில்லா வூரும்
விருப்போடு வெண்சங்க மூதா வூரும்
விதானமும் வெண்கொடியு மில்லா வூரும்
அருப்போடு மலர்பறித்திட் டுண்ணா வூரு
மவையெல்லா மூரல்ல வடவி காடே.

திருநாம மஞ்செழுத்துஞ் செப்பா ராகிற்
றீவண்ணர் திறமொருகாற் பேசா ராகில்
ஒருகாலுந் திருக்கோயில் சூழா ராகி
லுண்பதன்முன் மலர்பறித்திட் டுண்ணா ராகில்
அருநோய்கள் கெடவெண்ணீ றணியா ராகி
லளியற்றார் பிறந்தவா றேதோ வென்னில்
பெருநோய்கண் மிகநலியப் பெயர்த்துஞ் செத்துப்
பிறப்பதற்கே தொழிலாகி யிறக்கின் றாரே.

நின்னாவார் பிறரன்றி நீயே யானாய்
நினைப்பார்கண் மனத்துக்கோர் வித்து மானாய்
மன்னானாய் மன்னவர்க்கோ ரமுத மானாய்
மறைநான்கு மானாயா றங்க மானாய்
பொன்னானாய் மணியானாய் போக மானாய்
பூமிமேற் புகழ்தக்க பொருளே யுன்னை
என்னானா யென்னானா யென்னி னல்லா
லேழையே னென்சொல்லி யேத்து கேனே.

அத்தாவுன் னடியேனை யன்பா லார்த்தா
யருணோக்கிற் றீர்த்தநீ ராட்டிக் கொண்டாய்
எத்தனையு மரியைநீ யெளியை யானா
யெனையாண்டு கொண்டிரங்கி யேன்று கொண்டாய்
பித்தனேன் பேதையேன் பேயே னாயேன்
பிழைத்தனக ளெத்தனையும் பொறுத்தா யன்றே
இத்தனையு மெம்பரமோ வைய வையோ
வெம்பெருமான் றிருக்கருணை யிருந்த வாறே.

குலம்பொல்லேன் குணம்பொல்லேன் குறியும் பொல்லேன்
குற்றமே பெரிதுடையேன் கோல மாய
நலம்பொல்லே னான்பொல்லேன் ஞானி யல்லே
னல்லாரோ டிசைந்திலே னடுவே நின்ற
விலங்கல்லேன் விலங்கல்லா தொழிந்தேனல்லேன்
வெறுப்பனவு மிகப்பெரிதும் பேச வல்லேன்
இலம்பொல்லே னிரப்பதே யீய மாட்டே
னென்செய்வான் றோன்றினே னேழை யேனே.

சங்கநிதி பதுமநிதி யிரண்டுந் தந்து
தரணியொடு வானாளத் தருவ ரேனும்
மங்குவா ரவர்செல்வ மதிப்போ மல்லோ
மாதேவர்க் கேகாந்த ரல்லா ராகில்
அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோ யரா
யாவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்ப ராகி
லவர்கண்டீர் நாம்வணங்குங் கடவு ளாரே. ௰

திருச்சிற்றம்பலம்



## தனித் திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

ஆமயந்தீர்த் தடியேனை யாளாக் கொண்டா
ரதிகைவீ ரட்டான மாட்சி கொண்டார்
தாமரையோன் சிரமரிந்து கையிற் கொண்டார்
தலையதனிற் பலிகொண்டார் நிறைவார் தன்மை
வாமனனார் மாகாயத் துதிரங் கொண்டார்
மானிடங்கொண் டார்வலங்கை மழுவாட் கொண்டார்
காமனையு முடல்கொண்டார் கண்ணா லேக்கிக்
கண்ணப்பர் பணியுங்கொள் கபாலி யாரே.

முப்புரிநூல் வரைமார்பின் முயங்கக் கொண்டார்
முதுகேழன் முளைமருப்புங் கொண்டார் பூணாச்
செப்புருவ முலைமலையாள் பாகங் கொண்டார்
செம்மேனி வெண்ணீறு திகழக் கொண்டார்
துப்புரவார் சுரிசங்கின் றோடு கொண்டார்
சுடர்முடிசூழ்ந் தடியமரர் தொழவுங் கொண்டார்
அப்பலிகொண் டாயிழையா ரன்புங் கொண்டா
ரடியேனை யாளுடைய வடிக ளாரே. ௬

முடிகொண்டார் முளையிளவெண் டிங்க ளோடு
மூசுமிள நாகமுட னாகக் கொண்டார்
அடிகொண்டார் சிலம்பலம்பு கழலு மார்ப்ப
வடங்காத முயலகனை யடிக்கீழ்க் கொண்டார்
வடிகொண்டார்ந் திலங்குமழு வலங்கைக் கொண்டார்
மாலையிடப் பாகத்தே மருவக் கொண்டார்
துடிகொண்டார் கங்காளந் தோண்மேற் கொண்டார்
சூலைதீர்த் தடியேனை யாட்கொண் டாரே. ௩

பொக்கணமும் புலித்தோலும் புயத்திற் கொண்டார்
பூதப் படைகள்புடை சூழக் கொண்டார்
அக்கினொடு படவரவ மரைமேற் கொண்டா
ரனைத்துலகும் படைத்தவையு மடங்கக் கொண்டார்
கொக்கிறகுங் கூவிளமுங் கொண்டை கொண்டார்
கொடியானை யடலாழிக் கிரையாக் கொண்டார்
செக்கர்நிறத் திருமேனி திகழக் கொண்டார்
செடியேனை யாட்கொண்ட சிவனார் தாமே.

அந்தகனை யயிற்சூலத் தழுத்திக் கொண்டா
ரருமறையைத் தேர்க்குதிரை யாக்கிக் கொண்டார்
சுந்தரனைத் துணைக்கவரி வீசக் கொண்டார்
சுடுகாடு நடமாடு மிடமாக் கொண்டார்
மந்தரநற் பொருசிலையா வளைத்துக் கொண்டார்
மாகாளன் வாசல்காப் பாகக் கொண்டார்
தந்திரமந் திரத்தரா யருளிக் கொண்டார்
சமண்டீர்த்தென் றன்னையாட் கொண்டார் தாமே. ௫

பாரிடங்கள் பலகருவி பயிலக் கொண்டார்
பவளநிறங் கொண்டார் பளிங்குங் கொண்டார்
நீரடங்கு சடைமுடிமே னிலாவுங் கொண்டார்
நீலநிறங் கோலநிறை மிடற்றிற் கொண்டார்
வாரடங்கு வனமுலையார் மைய லாகி
வந்திட்ட பலிகொண்டார் வளையுங் கொண்டார்
ஊரடங்க வொற்றிநகர் பற்றிக் கொண்டா
ருடலுறுநோய் தீர்த்தென்னை யாட்கொண் டாரே. ௬

அணிதில்லை யம்பலமா டரங்காக் கொண்டா
ராலால வருநஞ்ச மமுதாக் கொண்டார்
கணிவளர்தார்ப் பொன்னிதழிக் கமழ்தார் கொண்டார்
காதலார் கோடிகலந் திருக்கை கொண்டார்
மணிபணத்த வரவந்தோள் வளையாக் கொண்டார்
மால்விடைமே னெடுவீதி போதக் கொண்டார்
துணிபுலித்தோ லினையாடை யுடையாக் கொண்டார்
சூலங்கைக் கொண்டார்தொண் டெனைக்கொண் டாரே.

படமூக்கப் பாம்பணையா னோடு வானோன்
பங்கயனென் றங்கவரைப் படைத்துக் கொண்டார்
குடமூக்கிற் கீழ்க்கோட்டங் கோயில் கொண்டார்
கூற்றுதைத்தோர் வேதியனை யுய்யக் கொண்டார்
நெடுமூக்கிற் கரியினுரி மூடிக் கொண்டார்
நினையாத பாவிகளை நீங்கக் கொண்டார்
இடமாக்கி யிடைமருதுங் கொண்டார் பண்டே
யென்னையிந்நா ளாட்கொண்ட விறைவர் தாமே.

எச்சனிணத் தலைகொண்டார் பகன்கண் கொண்டா
ரிரவிகளி லொருவன்பல் லிறுத்துக் கொண்டார்
மெச்சன்வியாத் திரன்றலையும் வேறாக் கொண்டார்
விறலங்கி கரங்கொண்டார் வேள்வி காத்து
உச்சநமன் றாளறுத்தார் சந்திரனை யுதைத்தா
ருணர்விலாத் தக்கன்றன் வேள்வி யெல்லாம்
அச்சமெழ வழித்துக்கொண் டருளுஞ் செய்தா
ரடியேனை யாட்கொண்ட வமலர் தாமே.

சடையொன்றிற் கங்கையையுந் தரித்துக் கொண்டார்
சாமத்தி னிசைவீணை தடவிக் கொண்டார்
உடையொன்றிற் புள்ளியுழைத் தோலுங் கொண்டா
ருள்குவா ருள்ளத்தை யொருக்கிக் கொண்டார்
கடைமுன்றிற் பலிகொண்டார் கனலுங் கொண்டார்
காபால வேடங் கருதிக் கொண்டார்
விடைவென்றிக் கொடியதனின் மேவக் கொண்டார்
வெந்துயரந் தீர்த்தென்னை யாட்கொண் டாரே. ௰

குராமலரோ டராமதியஞ் சடைமேற் கொண்டார்
குடமுழநந் தீசனைவா சகனாக் கொண்டார்
சிராமலைதஞ் சேர்விடமாத் திருந்தக் கொண்டார்
தென்றனெடுந் தேரோனைப் பொன்றக் கொண்டார்
பராபரனென் பதுதமது பேராக் கொண்டார்
பருப்பதங்கைக் கொண்டார் பயங்கள் பண்ணி
இராவணனென் றவனைப்பே ரியம்பக் கொண்டா
ரிடருறுநோய் தீர்த்தென்னை யாட்கொண் டாரே. கக

திருச்சிற்றம்பலம்

பொது　　　　பதிகம் ௩௧௧

## வினாவிடைத் திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

அண்டங் கடந்த சுவடு முண்டோ
　　வனலங்கை யேந்திய வாட லுண்டோ
பண்டை யெழுவர் படியு முண்டோ
　　பாரிடங்கள் பலசூழப் போந்த துண்டோ
கண்ட மிறையே கறுத்த துண்டோ
　　கண்ணின்மேற் கண்ணொன்று கண்ட துண்டோ
தொண்டர்கள் சூழத் தொடர்ச்சி யுண்டோ
　　சொல்லீரெம் பிரானைக் கண்ட வாறே.　　க

எரிகின்ற விளஞாயி றன்ன மேனி
　　யிலங்கிழையோர் பாலுண்டோ வெள்ளை யுண்டோ
விரிகின்ற பொறியரவத் தழலு முண்டோ
　　வேழத்தி னுரியுண்டோ வெண்ணூ லுண்டோ
வரிநின்ற பொறியரவச் சடையு முண்டோ
　　வச்சடைமே லிளமதியம் வைத்த துண்டோ
சொரிகின்ற புனலுண்டோ சூல முண்டோ
　　சொல்லீரெம் பிரானைக் கண்ட வாறே.　　உ

நிலாமாலை செஞ்சடைமேல் வைத்த துண்டோ
　　நெற்றிமேற் கண்ணுண்டோ நீறு சாந்தோ
புலாலாறு வெள்ளெலும்பு பூண்ட துண்டோ
　　பூதந்தற் சூழ்ந்தனவோ போரே றுண்டோ
கலாமாலை வேற்கண்ணாள் பாகத் துண்டோ
　　கார்க்கொன்றை மாலை கலந்த துண்டோ
சுலாமாலை யாடரவந் தோண்மே லுண்டோ
　　சொல்லீரெம் பிரானைக் கண்ட வாறே.　　௩

பண்ணார்ந்த வீணை பயின்ற துண்டோ
பாரிடங்கள் பலசூழப் போந்த துண்டோ
உண்ணா வருநஞ்ச முண்ட துண்டோ
வூழித்தீ யன்ன வொளிதா னுண்டோ
கண்ணார் கழல்காலற் செற்ற துண்டோ
காமனையுங் கண்ணழலாற் காய்ந்த துண்டோ
எண்ணார் திரிபுரங்க ளெய்த துண்டோ
வெவ்வகையெம் பிரானைக் கண்ட வாறே.

நீறுடைய திருமேனி பாக முண்டோ
நெற்றிமே லொற்றைக்கண் முற்று முண்டோ
கூறுடைய கொடுமழுவாள் கையி லுண்டோ
கொல்புலித்தோ லுடையுண்டோ கொண்ட வேடம்
ஆறுடைய சடையுண்டோ வரவ முண்டோ
வதனருகே பிறையுண்டோ வளவி லாத
ஏறுடைய கொடியுண்டோ விலய முண்டோ
வெவ்வகையெம் பிரானைக் கண்ட வாறே.

பட்டமுந் தோடுமோர் பாகங் கண்டேன்
பார்திகழப் பலிதிரிந்து போதக் கண்டேன்
கொட்டிநின் றிலயங்க ளாடக் கண்டேன்
குழைகாதிற் பிறைசென்னி யிலங்கக் கண்டேன்
கட்டங்கக் கொடிதிண்டோ ளாடக் கண்டேன்
கனமழுவாள் வலங்கையி லிலங்கக் கண்டேன்
சிட்டனைத் திருவால வாயிற் கண்டேன்
றேவனைக் கனவினுள் கண்ட வாறே.

அலைத்தோடு புனற்கங்கை சடையிற் கண்டே
னலர்கொன்றைத் தாரணிந்த வாறு கண்டேன்
பலிக்கோடித் திரிவார்கைப் பாம்பு கண்டேன்
பழனம் புகுவாரைப் பகலே கண்டேன்
கலிக்கச்சி மேற்றளியே யிருக்கக் கண்டேன்
கறைமிடறுங் கண்டேன் கனலுங் கண்டேன்
வலித்துடுத்த மான்றோ லரையிற் கண்டேன்
மறைவல்ல மாதவனைக் கண்ட வாறே.

நீறேறு திருமேனி நிகழக் கண்டே
னீள்சடைமே னிறைகங்கை யேறக் கண்டேன்
கூறேறு கொடுமழுவாள் கொள்ளக் கண்டேன்
கொடுகொட்டி கையலகு கையிற் கண்டேன்
ஆறேறு சென்னியணி மதியுங் கண்டே
னடியார்கட் காரமுத மாகக் கண்டேன்
ஏறேறி யிங்கெறியே போதக் கண்டே
னிவ்வகையெம் பெருமானைக் கண்ட வாறே. அ

விரையுண்ட வெண்ணீறு தானு முண்டு
வெண்டலைகை யுண்டொருகை வீணை யுண்டு
சுரையுண்டு சூடும் பிறையொன் றுண்டு
சூலமுந் தண்டுஞ் சுமந்த துண்டு
அரையுண்ட கோவண வாடை யுண்டு
வலிக்கோ லுந் தோலு மழகா வுண்டு
இரையுண் டறியாத பாம்பு முண்டு
விமையோர் பெருமா னிலாத தென்னே. கூ

மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சி
மயானத்தான் வார்சடையா னென்னி னல்லான்
ஒப்புடைய னல்ல னொருவ னல்ல
னொருர னல்லனொ ருவம னில்லி
அப்படியு மந்நிறமு மவ்வண் ணமு
மவனருளே கண்ணாகக் காணி னல்லால்
இப்படிய னிந்நிறத்த னிவ்வண் ணத்த
னிவனிறைவ னென்றெழுதிக் காட்டொ ணாதே. ய

பொன்னொத்த மேனிமேற் பொடியுங் கண்டேன்
புலித்தோ லுடைகண்டேன் புணரத் தன்மேல்
மின்னொத்த நுண்ணிடையாள் பாகங் கண்டேன்
மிளிர்வதொரு பாம்பு மரைமேற் கண்டேன்
அன்னத்தே ரூர்ந்த வரக்கன் றன்னை
யலற வடர்த்திட்ட வடியுங் கண்டேன்
சின்ன மலர்க்கொன்றைக் கண்ணி கண்டேன்
சிவனைநான் சிந்தையுட் கண்ட வாறே. கக

திருச்சிற்றம்பலம்

பொது பதிகம் ௩௧௨

## மறுமாற்றத் திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

நாமார்க்குங் குடியல்லோ நமனை யஞ்சோ
நரகத்தி லிடர்ப்படோ நடலை யில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோ
மின்பமே யெந்நாளுந் துன்ப மில்லை
தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான
சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற்
கோமாற்கே நாமென்று மீளா வாளாய்க்
கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே.

அகலிடமே யிடமாக வூர்க டோறு
மட்டுண்பா ரிட்டுண்பார் விலக்கா ரையம்
புகலிடமா மம்பலங்கள் பூமி தேவி
யுடன்கிடந்தாற் புரட்டாள்பொய் யன்று மெய்யே
இகலுடைய விடையுடையா னென்று கொண்டா
னினியேதுங் குறைவிலோ மிடர்க டீர்ந்தோம்
துகிலுடுத்துப் பொன்பூண்டு திரிவார் சொல்லுஞ்
சொற்கேட்கக் கடவோமோ துரிசற் றோமே.

வாராண்ட கொங்கையர்சேர் மனையிற் சேரோ
மாதேவா மாதேவா வென்று வாழ்த்தி
நீராண்ட புரோதாய மாடப் பெற்றோ
நீறணியுங் கோலமே நிகழப் பெற்றோம்
காராண்ட மழைபோலக் கண்ணீர் சோரக்
கன்மனமே நன்மனமாக் கரையப் பெற்றோம்
பாராண்டு பகடேறி வருவார் சொல்லும்
பணிகேட்கக் கடவோமோ பற்றற் றோமே.

உறவாவா ருருத்திரபல் கணத்தி னோர்க
ளுடுப்பனகோ வணந்தொடுகீ ளுளவா மன்றே
செறுவாருஞ் செறமாட்டார் தீமை தானு
நன்மையாய்ச் சிறப்பதே பிறப்பிற் செல்லோம்
நறவார்பொன் னிதழிநறுந் தாரோன் சீரார்
நமச்சிவா யச்சொல்ல வல்லோ நாவால்
சுறவாருங் கொடியானைப் பொடியாக் கண்ட
சுடர்நயனச் சோதியையே தொடர்வுற் றோமே. ௪

என்றுநா மியாவர்க்கு மிடைவோ மல்லோ
மிருநிலத்தி லெமக்கெதிரா வாரு மில்லை
சென்றுநாஞ் சிறுதெய்வஞ் சேர்வோ மல்லோஞ்
சிவபெருமான் றிருவடியே சேரப் பெற்றோம்
ஒன்றினாற் குறைவுடையோ மல்லோ மன்றே
யுறுபிணியார் செறலொழிந்திட் டோடிப் போனார்
பொன்றினார் தலைமாலை யணிந்த சென்னிப்
புண்ணியனை நண்ணியபுண் ணியத்து ளோமே. ௫

மூவுருவின் முதலுருவா யிருநான் கான
மூர்த்தியே யென்றுமுப் பத்து மூவர்
தேவர்களு மிக்கோருஞ் சிறந்து வாழ்த்துஞ்
செம்பவளத் திருமேனிச் சிவனே யென்னும்
நாவுடையார் நமையாள வுடையா ரன்றே
நாவலந்தீ வகத்தினுக்கு நாத ரான
காவலரே யேவி விடுத்தா ரேனுங்
கடவமலோங் கடுமையொடு களவற் றோமே. ௬

நிற்பனவு நடப்பனவு நிலனு நீரு
நெருப்பினொடு காற்றாகி நெடுவா னாகி
அற்பமொடு பெருமையுமா யருமை யாகி
யன்புடையார்க் கெளிமையதா யளக்க லாகாத்
தற்பரமாய்ச் சதாசிவமாய்த் தானு மியானு
மாகின்ற தன்மையனை நன்மை யோடும்
பொற்புடைய பேசக் கடவோம் பேயர்
பேசுவன பேசுதுமோ பிழையற் றோமே. ௭

ஈசனையெவ் வுலகினுக்கு மிறைவன் றன்னை
யிமையவர்தம் பெருமானை யெரியாய் மிக்க
தேசனைச் செம்மேனி வெண்ணீற் றானைச்
சிலம்பரையன் பொற்பாவை நலஞ்செய் கின்ற
நேசனை நித்தலு நினையப் பெற்றோ
நின்றுண்பா ரெம்மை நினையச் சொன்ன
வாசக மெல்லா மறந்தோ மன்றே
வந்தீரார் மன்னவனா வான்றா னாரே.

சடையுடையான் சங்கக் குழையோர் காதன்
சாம்பலும் பாம்பு மணிந்த மேனி
விடையுடையான் வேங்கை யதண்மே லாடை
வெள்ளிபோற் புள்ளியுழை மான்றோல் சார்ந்த
உடையுடையா னம்மை யுடையான் கண்டீ
ரும்மோடு மற்று முளராய் நின்ற
படையுடையான் பணிகேட்கும் பணியோ மல்லோம்
பாசமற வீசும் படியோ நாமே.

நாவார நம்பனையே பாடப் பெற்றோ
நாணற்றார் நள்ளாமே விள்ளப் பெற்றோம்
ஆவாவென் றெமையாள்வா னமரர் நாத
னயனொடுமாற் கறிவரிய வனலாய் நீண்ட
தேவாதி தேவன் சிவனென் சிந்தை
சேர்ந்திருந்தா னென்றிசைக்கோன் றானே வந்து
கோவாடிக் குற்றேவல் செய்கென் றாலுங்
குணமாகக் கொள்ளோமெண் குணத்து ளோமே. ௧௦

திருச்சிற்றம்பலம்

---

**பதிக வரலாறு :**

திருநாவுக்கரசு நாயனார் தமக்கு வந்த சூலைநோய் தீராமையினால் திருவதிகையை யடைந்து சைவசமயத்தைச் சேர்ந்த செய்தியைக் கேட்டறிந்த 'அருள்கொண்ட வுணர்வின்றி நெறிகோடி யறிவென்று மருள்

கொண்ட' மன்னவனுகிய பல்லவ அரசன் தன் அமைச்சரை நாயனுரை அழைத்துவரும்படி யனுப்ப, அவர் அவ்வாறே சென்று அழைத்தபோது நாயனுர் 'நீரழைக்கு மடைவிலம்' என்று மறுத்துரைக்குங் கருத்துடைய மறுமாற்றத் திருத்தாண்டகத்தை 'நாமார்க்குங் குடியல்லோம்' என்று எடுத்துப் பாடி யருளினுர்.



## திருப்புகலூர் பதிகம் ௬௪௪

### திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

எண்ணுகே னென்சொல்லி யெண்ணு கேனோ
வெம்பெருமான் றிருவடியே யெண்ணி னல்லால்
கண்ணிலேன் மற்றோர் களைக ணில்லேன்
கழலடியே கைதொழுது காணி னல்லால்
ஒண்ணுளே யொன்பது வாசல் வைத்தா
யொக்க வடைக்கும்போ துணர மாட்டேன்
புண்ணியா வுன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே.

அங்கமே பூண்டா யனலா டினுய்
யாதிரையா யானிழலா யானே றூர்ந்தாய்
பங்கமொன் றில்லாத படர்ச டையினுய்
பாம்போடு திங்கள் பகைதீர்த் தாண்டாய்
சங்கையொன் றின்றியே தேவர் வேண்டச்
சமுத்திரத்தி னஞ்சுண்டு சாவா மூவாச்
சிங்கமே யுன்னடிக்கே போது கின்றேன்
றிருப்புகலூர் மேவிய தேவ தேவே.

பையரவக் கச்சையாய் பால்வெண் ணீற்றாய்
பளிக்குக் குழையினாய் பண்ணா ரின்சொல்
மைவிரவு கண்ணாளைப் பாகங் கொண்டாய்
மான்மறிகை யேந்தினாய் வஞ்சக் கள்வர்
ஐவரையு மென்மேற் றரவறுத்தா
யவர்வேண்டுங் காரியமிங் காவ தில்லை
பொய்யுரையா துன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே.

தெருளாதார் மூவெயிலுந் தீயில் வேவச்
சிலைவளைத்துச் செங்கணையாற் செற்ற தேவே
மருளாதார் தம்மனத்தில் வாட்டந் தீர்ப்பாய்
மருந்தாய்ப் பிணிதீர்ப்பாய் வானோர்க் கென்றும்
அருளாகி யாதியாய் வேத மாகி
யலர்மேலா னீர்மேலா னைந்துங் காணாப்
பொருளாவா யுன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே.

நீரேறு செஞ்சடைமே னிலாவெண் டிங்க
ணீங்காமை வைத்துகந்த நீதி யானே
பாரேறு படுதலையிற் பலிகொள் வானே
பண்டநங்கற் காய்ந்தானே பாவ நாசா
காரேறு முகிலனைய கண்டத் தானே
கருங்கைக் களிற்றுரிவை கதறப் போர்த்த
போரேறே யுன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே.

விரிசடையாய் வேதியனே வேத கீதா
விரிபொழில்சூழ் வெண்காட்டாய் மீயச் சூராய்
திரிபுரங்க ளெரிசெய்த தேவ தேவே
திருவாரூர்த் திருமூலட் டான மேயாய்
மருவினியார் மனத்துளாய் மாகா ளத்தாய்
வலஞ்சுழியாய் மாமறைக்காட் டெந்தா யென்றும்
புரிசடையா யுன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே.

தேவார்ந்த தேவனைத் தேவ ரெல்லாந்
திருவடிமே லலரிட்டுத் தேடி நின்று
நாவார்ந்த மறைபாடி நட்ட மாடி
நான்முகனு மிந்திரனு மாலும் போற்றக்
காவார்ந்த பொழிற்சோலைக் கானப் பேராய்
கழுக்குன்றத் துச்சியாய் கடவு ளேநின்
பூவார்ந்த பொன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே.

நெய்யாடி நின்மலனே நீல கண்டா
நிறைவுடையாய் மறைவல்லாய் நீதி யானே
மையாடு கண்மடவாள் பாகத் தானே
மான்றோ லுடையாய் மகிழ்ந்து நின்றாய்
கொய்யாடு கூவிளங் கொன்றை மாலை
கொண்டடியே னிட்டுக் கூறி நின்று
பொய்யாத சேவடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே.

துன்னஞ்சேர் கோவணத்தாய் தூய நீற்றாய்
துதைந்திலங்கு வெண்மழுவாள் கையி லேந்தித்
தன்னனையுந் தண்மதியும் பாம்பு நீருஞ்
சடைமுடிமேல் வைத்துகந்த தன்மை யானே
அன்ன நடைமடவாள் பாகத் தானே
யக்காரம் பூண்டானே யாதி யானே
பொன்னங் கழலடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே.

ஒருவனையு மல்லா துணரா துள்ள
முணர்ச்சித் தடுமாற்றத் துள்ளே நின்ற
இருவரையு மூவரையு மென்மே லேவி
யில்லாத தரவறுத்தாய்க் கில்லே னேலக்

திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரம்

கருவரைசூழ் கான லிலங்கை வேந்தன்
கடுந்தேர்மீ தோடாமைக் காலாற் செற்ற
பொருவரையா யுன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே.

திருச்சிற்றம்பலம்

**பதிக வரலாறு:**

ஆண்டவர சென்னுந் திருநாவுக்கரசு நாயனுர் மனமுதலாகிய வந்தக் கரணங்கள் நான்கும் தத்தமக்குரிய வேறு வேறு தொழில்களைச் செய்யாது சத்வ குணுதிக்கத்தால் ஒருப்பாடுற்றுத் தமக்குப் புகலாயமைந்த சரண்யபுரீசர் தமது திருவடியின்கீழ்த் தம்மையினி திருத்திடுமென்னு முன்னுணர்ச்சியினுற் பல விருத்தங்களை யருளிச்செய்து, மூவுலகத்துள்ளாருந் துதித்தற்குரிய நிலைபெற்ற வித்திருத்தாண்டகத்தை "எண்ணுகேன்" எனத் தொடங்கித் திருப்பாட் டிறுதிதோறும் 'உன்னடிக்கே போதுகின்றேன்" என்று வைத்துப் பாடிச் சித்திரைச் சதயத் திருநாளிற் றிருவடி ஞானமாகிய வருண்ஞான மில்லாதார் பெறுதற்கரிய சிவனடி நீழலி னிரண்டறக் கலந்தருளினுர்.

திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரம்

முற்றிற்று

# அருஞ்சொற் பொருளகராதி

அ

அகலம் - மார்பு, சு - க
அகைத்தல்-எழுப்பல், செலுத்தல், ாஉ - க
அங்கம் - எலும்பு, உஅகூ - ய
அங்கி - அக்கினி, ௩ரு - எ
அங்குலி - விரல், கஅச - ய
அசிர்ப்பு - அயிர்ப்பு, அகூ - உ
அஞ்சனம் - மை, ௩கூய - சு
அடுக்கல் - மலை (கைலை) உசய-கக
அடும்பு - ஒரு கொடிப்பூ, ௩சஅ-சு
அதம்பழம் - அத்திப்பழம், ககக - எ
அந்திரன் - வேடவடிவமுற்றவன், சகூ - எ
அம்பரம் - யானை, கஉ - ச
அயக்கம் - நோயின்மை, நிராமயம், கூச - அ
அயிலுதல் - உண்ணுதல், ௩அரு-எ
அயில் - கூர்மை, ரு௩க - க
அரங்கு - ஆடரங்கு; ஆடுமிடம், சபை, ௩ - ய
அரி - விட்டுணு, அக - ரு
அரி - செவ்வரி, உக - உ
அரிச்சு - அரித்தல், உாரு - ௩
அருகல் - அணைதல், கிட்டுதல், கச - ௩
அருத்தம் - பொன், ருஉ - கூ
அருத்தி - விருப்பம், ருசு - ச
அலகு - திருவலகு (துடைப்பம்), ௩சுசு - ௩
அலந்தேன் - துன்புற்றேன், (அலம் - துன்பம்), உ - சு
அலமரும் - ஏமாறும், சகூ - ரு
அலர் - மலர், ககூ - ச
அலவன் - ஆண்ஞெண்டு, சஅ - கூ
அலைசாமே - வருந்தாமே, சஎகூ-உ
அவி - வேள்வியிற்றரும் தேவருணவு, ௩ரு - எ
அள்ளல் - நரகம், சுய - கூ
அற்று - ஒழிந்து, நீங்கி, (இருவகைப் பற்று மற்று), ய - கூ
அனகன் - கடவுள், குற்றமில்லாதவன், கூக - க
அனிலம் - காற்று, சஉச - அ

ஆ

ஆகம்பத்து - பத்துப்பிறவிகள், (ஆகம் - உடம்பு), உய - கூ
ஆணி - உரைகாட்டும் உயர்ந்த பொன், ருகள - ச
ஆதங்கம் - புயம், சாய - க
ஆத்தன் - பெரியன், கடவுள், சசக - கக
ஆப்பி - பசுச்சாணி, ௩சுசு - ௩
ஆமலகக்கனி - நெல்லிக்கனி, ௩உகூ - உ
ஆயம் - மகளிர்கூட்டம், சச - ௩
ஆயிழை - பெண், ஈண்டு உமாதேவியார், ௩கூ - ய
ஆர்த்த - எளிய, ருாக - உ
ஆலித்தல் - களித்தல், எகூ - உ
ஆவணம் - உரிமை, உரிமைப்பத்திரம், சருகூ - க
ஆழி - மோதிரம், ௩உ - ரு
ஆழிவலவன் - கடலரையன், கூ - உ

இ

இடிஞ்சில் - அகல், சுஉ - உ
இணர்ந்து - தளிர்த்து, பூத்துமாம், ௩எஉ - உய
இண்டை - மாலை, ககூ - ச
இராவணம் - அழுதல், உஅகூ - கக
இரிக்கும் - திரியும், கசகூ - ச
இலயம் - கூத்தின் விகற்பம், கூ - ௩

இழுதை - அறிவில்லாதவன், உ௱அ - அ
இளக்கும் - உருக்கும், உ௬௧ - ௬
இறை - சிறிது, ௫௬அ - ௪

ஈ

ஈர்த்தல் - இழுத்தல், ௫ - எ

உ

உக்கார் - இறந்தார், ௫அ - ௪
உசிர்ப்பு - உயிர்ப்பு, அ௬ - உ
உதகரணம் - உதைத்தல், ௫௫ - ௰
உரப்புதல் - அதட்டல், ௧௬௰ - ௫
உலந்தார் - இறந்தார், உ - ௬
உவராது - வெறுக்காது, ௫௬௧-௫
உழலை - திரிதலையுடையது, உஉ௫ - ௬
உழிதரல் - திரிதரல், ௧௫ - ௧
உள் - மனம், ௬ - ௬
உறுக்கல் - கடத்தல், சினத்தலு மாம், ௧௬௧ - ௪
உனகனுய் - உன்னியவன், ௬௧ - ௧

ஊ

ஊண் - உண்டி, ௬அ - ௫

எ

எச்சன் - யாகத்தினதிதேவதை, ௫௫ - எ

ஏ

ஏகாசம் - மேலுடை, போர்வை, ௪௪௫ - ௫
ஏடு - இதழ், ௬௱௫ - ௪
ஏணிலார் - கோட்டம், ௬௰ - அ
ஏமாப்பு - அலமரல், மோசம் போதல், உஎ௬ - ௧
ஏம்பலித்தல் - அங்கலாய்த்தல், ௧எஅ - அ

ஐ

ஐது - அழகானது, உ௫௫ - ௬

ஒ

ஒத்துதல் - மெல்லவூன்றுதல், உஅ௪ - ௰

ஓ

ஓங்கல் - மலை (கைலை), உஉஅ - ௰
ஓடை - நெற்றிப்பட்டம், ௧௧௫-௫
ஓரி - ஆண்நரி, ௪௬அ - ௫
ஓரோதம் - ஒரும்வேதம், ௧அ - அ
ஓர்தல் - ஆராய்ந்தறிதல், ௫௬௧-௧௧

க

கடவுதல் - செலுத்தல், ௧௫௫ - ௪
கட்டல் - களைதல் (ஈண்டு அழித்தல்), ௧௫ - ௬
கட்டு - பந்தம், பற்று, ௫௪௬ - ௧
கணி - வேங்கை மரம், உஉ - ௬
கண்டகம் - முள்ளி, ௫௰ - உ
கண்டம் - கழுத்து (ஈண்டு பாடுதற் காதாரமாய இடம்), ௧உ - ௫
கண்ணி - மாலை, அ - ௧
கதம் - சினம், ௫௧ - எ
கமி - (க்ஷமி) பொறுத்துக்கொள், ௫௫ - எ
கமை - பொறுமை, அஉ - ௬; ௫௪௫ - அ
கம்பு - சங்கு, ௫௧உ - எ
கயம் - (கசம்) நீர்கசியப்பெறுவது, நீருறுதமடு, ஆழமானகுளம், உ-௫
கயிறு - பாசம் (அறம்பாவமென்னு மருங்கயிறு), ௰-௬
கரணம் - செய்கை, ஈண்டுக் கூத்தின் செய்கை, ௫௬௪ - எ
கருவி - மேகம், ௧அ - ௰
கலித்தல் - ஒலித்தல் (இரைதல்), ௫ - அ
கவராது - வஞ்சனையின்றி, ௫௬௧-௫
கவரி - சாமரை, ௪அ - ௧
களரி - அரங்கம், உ௫௬ - எ
களி - களிப்பு, மகிழ்ச்சி, உஉ - அ
களைகண் - புகலிடம், ௬௬ - அ
கறங்குதல் - ஒலித்தல், ௧௬ - ௫
கறும்பி - கோபித்து, ௫௫உ - ௬
கனம் - மேகம், ௪௱௫ - ௫
கனற்றல் - சுடுதல், ௧உ - எ

கா

காகுத்தன் - ககுஸ்தன் மரபிற் றோன்றிய இராமன், ௫௬எ - ௪
காணி - நிலம் ௧௬உ - ௧
காளம் - கறுப்பு, ௧அஅ - எ

கி

கிம்புரி - யானைக்கொம்பின்பூண், ௧௫௪ - ௧

கிழி - எழுதுபடம், ௬௫௯ - ௧

கு

குசை - தருப்பை, ௩௨௭ - ௧
குட்டம் - கோஷ்டம், ௧௯௯ - ௭
குணலை - ஒருகூத்து, ௨௫௯ - ௧
குய்யம் - வஞ்சகம், ௧௭௭ - ௩
குரம்பை - உடம்பு, ௯௯ - ௨
குலா - வளைவு, ௩௮௮ - ௮
குவை - திரட்சி, ௪௯௯ - ௧
குறும்பி - அரித்து, ௩௩௨ - ௯
குனித்தல் - வளைத்தல், செரித்தல், ௧௪௭ - ௪

கூ

கூவை - கூகை, ௩௰ - ௮
கூழைமை - அடிமைத்தன்மை, ௧௪௭ - ௫
கூழ் - உரிமை, ௧௩ - ௨
கூளி - பேய் - ௫௯௫ - ௰

கே

கேழல் - பன்றி, ௯ - ௨

கை

கைது - வஞ்சகம், ௨௫௩ - ௯
கைதை - தாழை - ௩௰ - ௨

கொ

கொண்டி - கொள்ளை, ௨௧௯ - ௭
கொத்தை - குருடன், ௧௭௭ - ௨
கொம்பு - கோல், (ஈண்டுக் கரும்புக்கோல் - கரும்புவில்லை யுணர்த்திநின்றது), ௧௨ - ௪
கொளுவுதல் - தொடுத்தல், ௨௯-௪
கொழுமை - செழுமை, வளப்பம், ௪௱௨ - ௫

கோ

கோகு - கழுதையைப்போல் வருத்தித் துன்பஞ்செய்தல், ௯௯ - ௯
கோட்டுதல் - வளைத்தல், ௨௯ - ௪
கோப்பல் - அப்பல், ௯௯ - ௭
கோமளம் - இளமைச்செவ்வி, ௩௩௯ - ௪
கோள் - தீய, வலியவுமாம், ௧௫௩ - ௫

ச

சங்காத்தி - கூட்டாளி, நண்பன், ௯௱௩ - ௫
சண்ணித்தல் - தரித்தல்,பூசுதல், ௧௩ - ௧
சதுர் - திறம், மேன்மை, ௧௭ - ௭
சந்தோக - உதாத்த முதலிய சந்தசுகளையுடைய, ௫௨௯ - ௬
சமழ்த்தல் - வருந்தல், ௨௱ - ௬!
சலித்தல் - வருத்தல், ௩ - ௮
சவை - கூட்டம், ௮௪ - ௨
சழக்கு - பொய்ம்மை, தளர்ச்சியுமாம், ௯௯ - ௨

சா

சாடுதல் - கொல்லுதல், ௧௪௮ - ௰
சாமம் - அர்த்தராத்திரி (கறுப்பு என்பது), ௫௮௪ - ௨
சாரணன் - ஒற்றன், ௪௱௫ - ௩

சி

சிட்டு - அற்பத்தன்மை, ௪௩௪ - ௰
சிதம் - வறுமை, ௧௧௧ - ௭
சிதம்பன் - குணமிலி, ௧௨௭ - ௧
சிரைத்தலை - மயிர் கழிந்ததலை, ௩௯௯ - ௩
சில்லை - இழிந்த, ௩௯௯ - ௩
சினம் - விம்முதல், பருத்தல், ௧௯ - ௧

சீ

சீத்தை - கீழ்மை, ௧௩௮ - ௭
சீரை - மரவுரி (இரண்டனுருபு தொக்கதாகக் கொள்க), ௫௧௯ - ௩

சு

சும்மை - சுமை, ௨௭௮ - ௮
சுரிச்சி (சுரித்து) - ஒடுங்கி, வாடி, ௩௫௰ - ௫
சுரை - ஒரு காய், ௩௫௭ - ௩
சுவடு - தழும்பு, ௮ - ௧

சூ

சூலை - ஒருகொடிய வயிற்றுநோய், ௨ - ௩
சூழல் - இடம், ௨௭௪ - ௪
சூளாமணி (சூடாமணி) - முடிமணி, தலையணி, ௯ - ௧; ௪௫௰ - ௧
சூறை - கொள்ளை, ௧௪௧ - ௫

செ

செத்தையேன் - துரும்புத்தன்மையன், அற்பன், ௧௨௭ - ௧

செம்மாப்பு - பெருங்களிப்பு, ௫௰-௰

சே

சேடு - பெருமை, ௬௱௩ - ௪
சேடு - அழகு, ௧௨௨ - ௨
சேமம் - இன்பம், ௩௯ - ௬
சேம்பு - ஒருசெடி, ௬௱௩ - ௬
சேயான் - தொலைவிலுள்ளவன், ௩௨ - ௩
சேர்ப்பன் - நெய்தனிலத்தலைவன், ௬௪ - ௧
சேணம் - மேன்மை, ௧௧௨ - ௯

சொ

சொக்கம் - ஒரு கூத்து, ௧௭௨ - ௮

சோ

சோத்தம் - அஞ்சலி, வணக்கம், ௯௭ - ௨

ஞ

ஞமன் - இயமன், ௩௭௨ - ௧௮

த

தகவு - கிருபை, நன்மை, ௪௩௬ - ௭
தகளி - அகல், ௧௩௮ - ௪
தகுணிச்சம் - ஒரு தோற்கருவி, ௧௯௬ - ௩
தட்டுதல் - பொருந்தல், ௧௫ - ௯
தணக்குவார் - பிரிவார், ௨௩௧ - ௨
தமியார் - தனியர், ஒப்பில்லவர், ௨௨ - ௮
தயக்கம் - கலக்கம், ௪௧௬ - ௧
தரங்கு - தங்குதல், ௩௧௩ - ௧
தருணம் - இளமை, ௪௭௧ - ௬
தலக்கம் - குற்றம், ௬௬ - ௫
தவிசு - ஆஸனம், இருக்கை, ௧௫-௰
தளம் - இதழ், ௫௯௫ - ௯
தனம் - செல்வம், ௭௰ - ௮

தா

தாபரம் - கோயில், இலிங்கமுமாம், ௧௯௩ - ௪
தாமம் - மாலை, ௪௯ - ௩
தாயத்தார் - பங்காளிகள், ௩௩௫ - ௩
தாழி - குடம், சால், ௱ - ௭

தி

திகிரி - தேர், ௧௯௩ - ௰
திகைத்தல் - மயங்கல், ௪௪௰ - ௯
தியக்கம் - கலக்கம், ௯௪ - ௮
திருதிமை - உறுதி, ௫௬௨ - ௮
திருத்தம் - தூய்மை, தீர்க்கமுமாம் ௫௨ - ௨
திறம்பி - மாறுபட்டு, ௩௩௨ - ௬

து

துகள் - குற்றம், ௨௰ - ௭
துச்சு - பொய், ௧௨௮ - ௮
துஞ்சு - நிலைபெறு, ௫௰ - ௧
துடும்பல் - பூங்கொத்து, ௩௪௮ - ௬
துட்டு - தீயகுணம், ௧௪௩ - ௰
துத்தி - பாம்பின் படப்பொறி, ௫௬ - ௫
துத்தியம் - துதி, ௩௭௮ - ௨
துரிசர் - குற்றமுடையார், ௫௭௬ - ௬
துரிசு - குற்றம், ௩௱௰ - ௩
துவலை - துளி, ௫௯௯ - ௨
துழனி - ஒலி, ௫௯ - ௨
துறை - இடம், நிலம், நீர், சொடி, கோடு என்பன, ௯ - ௪
துன்னல் - நெருங்கல், ௰௨ - ௭
துன் - தூர், கெட்ட, ௧௪ - ௫

தூ

தூ - தூய்மை, ௩௩௰ - ௨
தூணி - அம்புக்கூடு, ௧௨௧ - ௪
தூம்பு - வாயில், வழி, ௧௮௩ - ௧
தூர்த்தன் - துட்டன், காமுகனுமாம், ௫௯௯ - ௰
தூவல் - இறகு, ௪௪ - ௨

தெ

தெக்கு - நிறைந்த, தேக்கிய, ௭௧-௨

தே

தே - தேவர், கடவுளர், ௩௩௰ - ௨
தேக்குதல் - தடை செய்தல், ௪௧௪ - ௫
தேசன் - ஞானவொளியன், ௰௯ - ௬
தேவு - தெய்வம், (தேவர்) ௧௧ - ௨

தோ

தோளுதல் - துளைத்தல், ௩௫௭ - ௩

ந

நகரம் - பட்டினம், அரண்மனையுமாம், ௩௭௨ - ௰௬

# அருஞ்சொற்பொருளகராதி

நணியான் - அணிமையிலுள்ளவன்,
ஙஉ - ங
நண்பகல் - மத்தியானம் சஎச - ரு
நம்பான் - கடவுள், ஙஉ - ங
நரலுதல் - ஒலித்தல், ஙா - கூ
நல்குரவு - வறுமை, சாச - க
நளிர் - பெருமை, உக - ச
நள்ளல் - நட்டல், விரும்பல்,
சசுக - உ

நா

நாகு - ஏற்றின் பெண், (மரையும்
பெற்றமும் எருமையும் நாகே)
ய - கக
நாராசம் - சலாகை, ாக - ச

நி

நிட்டூரவர் - கொடியர், சஙௗ - ச
நிதனம் - அழிவு, ஙச - ரு
நிலாசும் - நிலைக்கும், ருசுக - சு

நு

நுந்தாத - தூண்டாத, ருசுக - ரு

நூ

நூக்கல் - தள்ளல், ஙஉகூ-எ; உ-ரு
நூறுதல் - அழித்தல், உசுய - சு;
சஎய - ய

நெ

நெதி - நியதி, ஙசு - ங
நெருநல் - முன்னைநாள், கககூ - ங;
சஅய - ரு
நெளிவு - வளைவு, கோணல்,
சகஎ - ங
நெறி - சிலிர்த்த, கசய - க

நே

நேமி - சக்கரம், ருஙஎ - ங

நொ

நொடிதல் - சொல்லல், அக - உ

ப

பசலை - தேமல், ாச - ரு
பசை - அன்பு, பற்று, சாஅ - ச
படப்பை - கொல்லை, ாரு - அ
படிறு - பொய், சாஅ - ங
படுகர் - நீர்ப்பள்ளம், கஅஎ - உ
பட்டம் - பரிவட்டம், உஅகூ - அ
பட்டிமை - களவு, சாஅ - ங

பட்டியேறு - இடபவேறு, அடங்
காத ஏறுமாம், உகஉ - க
பணை - முரசு, ஙய - எ
பண்டி - வயிறு, கூகூ - க
பந்தி - கட்டிய, உசஎ - க
பப்பு - பரப்பு, அகலம் (அதிகம்
என்னும்பொருட்டு), கச - சு
பம்புதல் - ஆரவாரித்தல் கஎக - எ
பயிக்கம் - பிச்சை, கரு - அ
பரியர் - மகத்தானவர், உசஅ - கக
பலுகல் - பெருகுதல், ஙஉஅ - எ
பவணன் - சமண ஆசிரியன், கச-சு
பவந்தம் - சூது, சஉய - ச
பளகன் - குற்றமுடையோன்,
ககசு - ரு
பளகு - குற்றம், சசுக - ங

பா

பாகு - பிச்சை, சஉய - ங
பாங்கு - உரிமை, தகைமையுமாம்,
உாஅ - ய
பாசனம்-நெருப்பு, பாத்திரமுமாம்,
ருகூ - கூ
பாடு - பெருமை (பாடும் என்று
மாம்), கக - க
பாரிடம் - பூதம், ருக - சு
பாரித்தல் - பரப்பல், சரு - அ
பாவகன் - தூய்மை செய்வோன்
(பாசமோசனம் செய்தல்),
சசுகூ - சு
பாழி - பெருமை, ஙஉ - ச
பாறு - பருந்து, ககூ - ரு
பாற்றல் - ஒழித்தல், நீக்குதல், உ-ங

பி

பிச்சாடல் - பிச்சை யெடுத்தல்,
ருஉகூ - சு
பிடவம் - வாத்திய விசேடம்,
சாய - உ
பிணிந்தார் - இறந்தார், உ - ங
பிதிர்முகன் - பயந்த முகத்தை
யுடையன், சுரு - சு
பில்குதல் - கொப்பளித்தொழுகல்,
சஉஉ - சு
பிறங்குதல் - ஒலித்தல், சண்டு
வழுத்திக்கொண்டிருத்தல்,
சஅ - உ

# அருஞ்சொற்பொருளகராதி

பு

புல்வாய் - மான், ௩௨ம - க
புறணி - பக்கம், உகக - உ

பூ

பூட்சி - உடல், ௫சச - சு
பூரித்தல் - நிரம்புதல், ௩௩எ - க

பெ

பெற்றம் - எருது (இடபம்), உ-௩

பே

பேதுறல் - மயங்கல், உசு - அ

பை

பை - பாம்பின்படம், க௩ - ம
பைதல் - துன்பம், களக - உ

பொ

பொசி-நீர்த்துளி (வேர்வைத்துளி), ௫சுக - சு
பொழில் - உலகம், உ௨எ - சு
பொள்ளல் - பொத்தல், சு௫ - க
பொன்ற - இறக்க, ௫அம - அ

போ

போதகம் - யானை, சுாசு - ௫
போத்து - எருமைக்கடா, ௩கச-எ
போழ்தல் - பிளத்தல், க - உ

ம

மஞ்சு - மேகம், உச - சு
மடவரல் - இளம்பெண், ஈண்டு உமையம்மையார் - எ௫ - ம
மதத்தல் - வெறித்தல், ௫க - எ
மலக்கம் - கலக்கம், எ - ௫
மல்லை - வட்டம், உ௩க - சு
மறலி - இயமன், ௩க - எ

மா

மாணி - பிரமசாரி, ஈண்டுச்சண்டேசர், உாஎ - ச
மாதர் - அழகு, அ - க
மாத்தாய் - மகத்தாய், பெரியதாய், ககசு - எ
மால் - பெருமை, உயர்ச்சியுமாம், ௩ - ம
மாறு - பகை, சச - ச

மு

முகரி - முற்பட்டது, சசு௩ - க
முகை - மொட்டு, உஉ - எ
முண்டகம் - தாமரை, ௩ம - உ
முயங்குதல் - புணர்தல், ௩ம - எ
முளரி - தாமரை, க௫ - ம

மூ

மூங்கர் - ஊமர், களஎ - உ
மூழை - அகப்பை, கம - க

மோ

மோடி - காடுகாள், கஉ௩ - அ
மோத்தை - சோற்றுத்திரள், க௩அ - எ
மோழைமை - மடமைத்தன்மை, உ௫சு - ச

வ

வக்கரன் - ஓர் அசுரன், ாசு - சு
வசி - குற்றம், அக - உ
வடி - பதஞ்செய்த, உக - ச
வட்டம் - சக்கர வடிவத்தையுடையது, உாசு - க
வட்டு - ஒரு விளையாட்டு, ௩௫ம-உ
வண்ணம் - இராகம். வண்ணப்பாட்டுக்களுமாம், சாஎ - க; நிறம் (யானை, மான், புலி என்பவற்றின் பல நிறவுரிவையுடையர்) அழகுமாம், சு - க
வம்பு - வாசனை, கஉ - ச
வயந்தே - (வசம்) வசப்பட்டு, ௩-எ
வல்லை - வன்மை, உாசு - க
வளாவல் - கலத்தல், தங்கல், சு-க
வனம் - அழகு, நீருமாம், கசு - க

வா

வாசிகை - கோத்த மாலை,-உசுச-௩
வாயம் - தோத்திரம், ௩௩௫ - ௩
வாரணன் - வருணன், ௩கஅ - ம
வாரம் - அன்பு, ௩சசு - ம
வாளமால் - சக்கரவாகமும் மேகமும், உகஅ - உ

வி

விச்சு - வித்து, கக - உ
விஞ்சம் - விந்தம், கசு - உ
விஞ்சையர் - வித்யாதரர், ஈண்டுத் தேவர், கஉ௩ - எ
விடலை - திண்மை, ௫௩உ - ச
விதானம் - மேற்கட்டி, சஅ - க
விம்மல் - ஏங்குதல், ௫எக - ம

**விவந்து** - சுழன்று, பிரகாசித்துமாம், ௧௯௱ - ௧௧
**விழுது** - நெய், ௨௭௪ - ௩
**விள்ளல்** - சொல்லுதல், ௧௪௰ - ௭
**விள்ளார்**-பிரிந்துபோதல், ௪௱௮-௩
**வின்மை** - வில்லின்தொழில், ௧௨௩ - ௰

வெ

வெடி - அச்சம், ௧௫௧ - ௪
வெளிறு - அறிவின்மை, ௫௮ - ௭
வெள்ளடை - திருக்குருகாவூர் வெள்ளடை, ௬௧௮ - ௮

வே

வேங்கை - வேங்கைப்பூ, ௨௨ - ௬
வேடு - வேடுவர் கோலம், ௨௧௯-௩
வேதி - மதில், ௧௨ - ௯
வேழம்பத்தைவர் - கழைக்கூத்தரைப் போன்ற ஐந்துபொறிகள், ௩௧௫ - ௧
வேனல் - கானல், ௨௯௮ - ௬

வை

வை - கூர்மை, ௪௫௰ - ௨

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

## பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப்பு அகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

## பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி



(ப - ௧௨௪)

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# தொடர்புரை

பாலொழுகும் பச்சிளம் பருவத்தில் இறைவனருள் பெற்றுச் சமணிடர் தீர்த்துச் செந்தமிழ் வளங்கள் கெழுமப் பாடிய ஞான சம்பந்தரின் தேவாரத் திருப்பதிகங்களும், தண்டூன்றித் தள்ளுநடைகொள்ளுங் கிழப் பருவத்தில் திருவருள்பெற்றுத் தொண்டி னெறி இனிது விளங்க நினைப்பாலும் பாட் டாலும் உழவாரத்தாலும் மூவகைத் தொண் டும் முற்ற ஆற்றிச் சமண் சைவ மதங்களின் வேறுபாடு கனிபெரிது காட்டிக் குழைந்துரு கிப் பாடிய நாவுக்கரசரின் இந் நற்றமிழ்ப் பாடல்களுமாக ஆறு திருமுறைகளையும் முறை யே உண்மையான் ஓதி உளங்கரைந்த மெய் யன்பர்கள் இனி அவற்றை யடுத்து ஓதத்தக் கன காளைப்பருவத்தில் தடுத்தாட்கொள்ளப் பெற்று இறைவன்பால் தோழமைத் திருவரு ளும் அடியார்பால் மெய்யடிமைப் பேரரு ளும் ஒருங்கு வாய்ந்து உலகிய லொழுக்கத் தின் நின்று அவ்வொழுக்கத்தின் வாயிலாக இறைவனை வணங்குமுறை தெளிவித்துத் தமிழ் பாடிய நாவலாரூரரின் ஏழாந்திரு முறைத் திருப்பதிகங்களாகும்.

அவைதாமும் இப்பொழுது அச்சிடப் பட்டுவருதலின், அன்பர்கள் அவற்றையும் வாங்கி ஓதி உளங்கரைந்துருகி உய்வார்களாக.

